


# அஜந்தா

செப்டம்பர் 1953

குகை : 1 : ஓவியம் : 1

விலை ரூ. 1 வருஷ சந்தா ரூ. 12

இந்த இதழின் சிருஷ்டி கர்த்தாக்கள் :

- **கலை** ... கேஸரி
  ராஜாஜி
  கி. வா. ஜகந்நாதன்
  நடாதுர் ஸ்ரீ தேசிகன்
  டி. என். ஸ்ரீநிவாசன்
  ரஞ்சன்
  வி. ஆர். எம். செட்டியார்
  ஆர்வி
- **கவிதை** ... தமிழழகன்
  மஹி
  குழல்
  கி. சுப்பிரமணியன்
- **கற்பனை** ... பெ. தூரன்
  ஸகி
  எல்லார்வி
  உமாசந்திரன்
  கோமேதகவேலு
  சிதம்பர ரகுநாதன்
  கே. ஸ்ரீ.

- ஆசிரியர் : ... கேஸரி
- நிர்வாகி : என். எஸ். சந்திரமௌளி
- பிரசுரம் : அஜந்தா
  74, லாயிட்ஸ் ரோட்
  சென்னை - 14.



# சிருஷ்டி ஜாதகம்

"கேஸரி"

சென்ற ஆறு வருஷ காலமாக, நான் எங்கு போனாலும் யாரைப் பார்த்தாலும் ஒரே ஒரு கேள்விதான் என்னைத் தாங்கி வந்தது; "அஜந்தா வருமா?"

இலக்கியப் பித்துப் பிடித்ததால், கரும்பு வாழ்க்கையை காஞ்சிரங்காயாய் ஆக்கிக் கொண்ட எனக்கு பேனா வேந்தர்களின் சொல்லோவியங்களை அச்சு வாகனம் ஏற்றி அவைகளுக்கு அமரத்வம் அளிக்க வேண்டும் என்ற அவா என்றும் உண்டு. தருணம் பார்த்திருந்தேன்.

"தைரியமாக ஆரம்பியுங்கள்; சிறந்த கலைப் பத்திரிகைக்கு ஆதரவு அளிக்க தமிழன் என்றும் தயங்கவே மாட்டான்," என்று மகா மேதை கி. வா. ஜ. என்னைத் தட்டிக் கொடுத்தது, அசாதாரணத்தைச் சொல்லிலே தீட்டி அதை தமிழகம் எங்கும் நடமாட விடவேண்டும் என்று நான் வளர்த்து வந்த ஆர்வக் கனலுக்கு புத்துயிர் அளித்தது.

அஜந்தாவை ஆரம்பித்து விட்டேன், உங்கள் கலா ரஸனையை அஸ்திவாரமாகக் கொண்டு.

ராஜாஜியின் கட்டுரையுடன் அஜந்தா ஆரம்பமாகிறது. பதினாயிரம் வார்த்தைகளில் சொல்ல வேண்டிய விஷயத்தை பத்தே வார்த்தைகளில் தீட்டித் தந்திருக்கும் இந்த ரத்ன சுருக்கம் பதினாயிரம் முறை படித்துப் படித்து பூரிக்க வேண்டிய மந்திரச் சொற்கள். அவர் மேதா விலாசம் மகாமேருவாக ஒவ்வொரு வார்த்தையிலும் ஜ்வலிப்பதை நாம் காண்கிறோம்.

பேனா சக்ரவர்த்தி கி.வா.ஜ. வின் கவிதை ஒரு காவியம் என்றே நான் நினைக்கிறேன். தேசிகன் நம்மை காளிதாஸனின் கவிதைக் கோயிலுக்குள் இழுத்துச் செல்கிறார். ஸ்ரீநிவாசனின் மாமல்லபுரம் ஒரு

அமர சிற்பம். ரஞ்சனின் கட்டுரை எல்லோரையும் மகிழ்விக்கிறது. இலக்கிய மேதை செட்டியார் பாரதி தாஸனின் கவிதா நயங்களை விளக்குகிறார். 'ஆர்வி'யின் கட்டுரை ஒரு சிந்தனைச் செல்வம்.

பெ. தூரனின் உணர்ச்சி ஓவியம் நம்மை ப்ரம்மிக்க வைக்கிறது. சமூகத்தைக் கண்டு நகைக்கும் ஸகி, உள்ளப்போராட்டங்களை வார்த்தையில் தீட்டி யிருக்கும் எல்லார்வி, மணம் கமழும் உமா சந்திரனின் நடை, கற்பனை இரத்தம் கசியும் சிகப்பு ரோஜா, சிதம்பர ரகுநாதனின் திகைப்பு ஊட்டும் சொற்சிலம்பு, 'புயலுக்குப் பின்' நாடகத்தில் சுழலும் மூன்று உள்ளங்கள்- இத்தனையும் முதல் குகையின் கன்னி ஓவியத்துக்குப் புது மெருகு தருகின்றன; கவிதைகள் மின்னுகின்றன.

ஒவ்வொரு இதழும் ஒரு மலராக ஜ்வலிக்க வேண்டுமென்பதே என் அவா—என் ஆசை நிறைந்த திட்டம்.






CHIEF MINISTER OF MADRAS

FORT ST. GEORGE
MADRAS

8. 7. 1953.

கலைகள் வளர வேண்டும். அதற்கு உள்ளம் மலர வேண்டும். இல்லாவிடில் எவ்வாறு கலை வளரும்? இதுவே என் கட்டுரை.

இராஜகோபாலாச்சாரி

Shri Kesaree,
Editor, "Ajaantha",
1, North Crescent Road,
Madras 17.



# கலை வளர்க!

கி. வா. ஜகந்நாதன்

தண்ணியநீர் நிறைந்தஎழிற் பொய்கை; அங்கே
தாமரைப்பூ மலர்ந்திருக்கும், தொட்டில் போல,
வண்ணமலர் தனைஅலைகள் ஆட்ட அந்த
மலர்த்தேனை உண்டிதழிற் பள்ளி கொண்டு
பண்ணிசையைப் பெடையோடே பாடும் வண்டின்
பான்மையினைக் கண்டதுண்டோ? ஒருகால் சற்றே
எண்ணமின்றிப் பார்த்திருப் போம்எனினும், அந்த
எழிலினைப்பா வினிற்கண்டால் ஆஆ என்போம்.

கண்டபொரு ளினில் அழகைக் காண மாட்டோம்;
காண்பதிந்த வாறென்றே காட்டுகின்றான்
அண்டுபெருங் கவிஞன்அதை ஓவியத்தில்
அமைத்துணரச் செய்கிறான் கலைஞன்; முன்பு
கண்டதெலாம் புதுமெருகு கொண்டு நிற்கக்
காண்கின்றோம், காட்டுகிறான்; இயற்கைத் தேவி
மண்டும்எழில் அவன்கலையில் விளக்கம் கொள்ள
மதியாமல் இருந்தநாம் மதிக்கப் போந்தோம்.

அழுக்கடைந்து குலைந்தஉடை, முதுகில் ஒட்டும்
அடிவயிறுக் கோலத்தில் ஏழை வந்தால்,
சழக்கெனவே வழிதிருப்பிக் காறித் துப்பிச்
சனியனென்றே வைதோடித் தப்பு கின்றோம்;
பழுத்தஉணர் வினைக்கோலம் செய்து காட்டும்
பான்மைபெறும் ஓவியன்அவ் வேழை தன்னை
இழுத்துவைத்துச் சித்திரத்தில் எழுதி விட்டால்
என்னஎழில்! என்னஎழில்! என்போ மன்றே!

பாலைநிலந் தனிலேக நெஞ்சம் அஞ்சிப்
பதறுமென்பர்; கவிஞன்வனை பாலை தன்னில்
சாலவெகு நாளுலவி அங்கே ஓடித்
தவிக்கின்ற மானைநாம் பார்த்து நிற்போம்;
பாலகனை இழந்ததாய் பரிவுற் றேங்கப்
பார்ப்பதற்குக் கூசுகின்றோம்; கவியில் வந்தால்
ஏலஅநே கந்தடவை படிப்போம்; கூத்தில்
எத்தனையோ முறைஅதனைப் பார்க்கச் செல்வோம்.

கடவுள்செய் படைப்பினிலே காணு இன்பம்
கலைஞன்றன் படைப்பினிலே காணு கின்றோம்;
மடலவிழும் மலர்உலகில் வாடிப் போகும்:
வண்ணஓ வியன்மலரோ வாடல் இல்லை;
உடல்குலைந்தே அழியுமென்பர்; எனினும் இந்த
உடலழகை அழியாமற் கலையிற் காண்போம்;
இடரின்றி இன்புதவி நெடுநாள் வாழும்
இயல்புபெறு வனகலைஞன் படைப்பே அன்றோ?

கண்ணனென்றும் ராமனென்றும் முருகன் என்றும்
கருதியிசை பாடிக்கை குவித்துப் போற்றும்
வண்ணமந்தக் கடவுளரை வகுத்தார் யாவர்?
வடிவுடைய ஓவியமும் சிலையும் இன்பம்
நண்ணுசுவைக் காவியமும் படைத்து நெஞ்சில்
நாட்டிவிட்ட பெருங்கலைஞர் கூட்டம் அன்றோ?
திண்ணமுற அவர்வைத்த உருவில் பாட்டில்
தெய்வமெலாம் வாழ்வுபெறும் சிறப்புக் கண்டோம்.

செந்தமிழ்நாட் டினிற்கலைகள் செழித்து வாழ்ந்த
சிறப்பினையக் கோயில்கள் நின்று காட்டும்
வந்தனையும் வழிபாடும் நிற்க, அங்கே
மலிசுவை சேர் ஓவியத்தைச் சிற்பச் சீரைச்
சொந்தமுறு பாடல்களை இசையைக் கூத்தைச்
சொல்லநாப் படைத்ததிற லாளர் யாரே?
முந்துமன்பு வாழ்வினிலே சாந்தச் சூழ்வில்
முளைத்தகலைச் செல்வத்தின் குவியல் கண்டீர்.

இலையிருந்தும் மலரில்லா வனம்போல் நல்ல
எணமிகுந்தும் செயலில்லா மனிதனைப்போல்
அலையிருந்தும் ஆழமில்லாக் கடல்போல் செல்வம்
அணைத்துமிருப் பினுங்கலைகள் இல்லா வாழ்வு
பொலிவழிந்த தாகுமென்னும் உண்மை ஓர்வோம்
பொங்குபுது வளம்பல்க வேண்டுங் காலைக்
கலைமலிக! கலைவாழ்க! கலைகள் ஓங்கிக்
கலைமயம்நா டாகவென்றே வாழ்த்துவோமே!

# காளிதாஸனின் காதல் உலகம்

நடாதூர் ஸ்ரீ தேசிகன், M. R. A. S. (Lond.)

இவ்வுலகில் மக்களின் வாழ்க்கை ஒருவித சம்பந்தத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்கிறது. கணவன்—மனைவி, தாய்-சேய், எசமான்-வேலைக்காரன், ஆளுகின்றவன்-ஆளப்படுகின்றவன்; எனப் பலவிதமாக உள்ளது அந்த சம்பந்தம். ஒவ்வொருவரும் சரியான முறையில் பழகினால் தமது வாழ்க்கையின் முழுப் பயனையும் அடையலாம். தவறான முறையைக் கையாண்டால் பிறகு வருந்த நேரிடும். எவருக்கும் முதலிலேயே இது சரியான வழி; இது தவறானது எனத் தெரியாது. மிக்க அனுபவமுள்ளவர்களுக்குத்தான் இதன் உண்மை புலப்படும். அவர்கள் காட்டும் வழியை நாம் பின்பற்றுவது அவசியம்.

கல்விபெற நிரம்ப வசதியுள்ள இக்காலத்தில் உயர்தர காவியங்களைப் படித்துக் காளிதாசன் போன்ற அருட் கவிகளின் உபதேச ரத்தினங்களைப் பெறுவது ஒரு எளிய வழி. அக் கவிகள் தமது காவியங்களில் ஒவ்வொரு விஷயத்திலும் தம் சொந்த அனுபவத்தையும் எழுதியிருக்கிறார்கள். நமக்கு எங்தெந்த விஷயங்களில் சந்தேகம் வருகிறதோ, அவைகளையெல்லாம் கவிகள் நன்றாக ஆராய்ந்து, 'இந்த சமயத்தில் இப்படி நடந்துகொள்ள வேண்டும்' என்று நிச்சயித்திருக்கிறார்கள். இந்தத் தீர்மானம் சாதாரணமானதில்லை. தெய்வ அனுக்கிரஹத்தாலும் நீண்டகால ஆராய்ச்சியினாலும் ஏற்பட்டது. ஆகையால் அதை நாம் பின்பற்றினால் நிச்சயம் பயன் பெறலாம்.

இந்தக் கருத்தை மனதில் கொண்டுதான் வடமொழி காவியங்களை விமரிசனம் செய்பவர்களுள் தலை சிறந்தவரான மம்மடாசாரியர் என்பவர், "காவியம் செய்பவர்களுக்குப் பெரும் புகழும் புண்ணியமும் கிடைக்கின்றன. அதைப் படிப்பவர்களுக்கோ, அளப்பரிய இன்பமும் சிறந்த புத்திமதிகளும் கிடைக்கின்றன" என்றார். இவர் சொல்லையே நாம் பிரமாணமாக எடுத்துக் கொண்டு காளிதாச மஹாகவி காதலைப்பற்றி என்ன அபிப்பிராயம் கொடுத்திருக்கிறான் என்று இக் கட்டுரையில் பார்ப்போம்.

காளிதாசனுடைய கொள்கைப்படி ஒன்பது ரஸங்களுள் சிருங்கார ரஸமே மிகச் சிறந்தது. அதையே தனது வாழ்நாள் முழுவதும் ஆராய்ந்து அவன் தனது எல்லா நாடகங்களிலும் காவியங்களிலும் விரிவாக வருணித்திருக்கிறான். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அதன் நுட்பங்களை ஆராய்ந்து நன்றாக விளக்கியிருக்கிறான்.

சிருங்காரம் அல்லது காதல் மாந்தர்களின் இருதய உணர்ச்சிகளுள் மிக முக்கியமானது. இது

ஆண் பெண்களின் மனத்தை எப்படி ஆட்டிவைக்கிறது என்பதையும், காதலர்கள் எவ்விதம்நடந்து கொண்டால் தமது லட்சியத்தில் வெற்றி பெறலாம் என்பதையும், உயர்தர காதல் எப்படிப்பட்டது என்பதையும், காளிதாசனுடைய காவியங்களிலிருந்தும் நாடகங்களிலிருந்தும் நாம் அறிந்து கொள்ளலாம்.

மாளவிகாக்னிமித்திரம் என்கிற நாடகத்தில் காளிதாஸன் காதலைப் பற்றி தன் கருத்தைச் சுருக்கமாகக் கூறியிருக்கிறன். அது பின்வருமாறு :—

"காதலர் இருவருக்கும் மனம் ஒத்திருப்பது மிக அவசியம். ஒருவருக்குமட்டும் அன்பு இருந்து, மற்றொருவருக்கு இல்லாத பொழுது நேரும் சேர்க்கை திருப்தி அளிப்பது ஆகாது. இருவர் கருத்தும் ஒருமித்திருந்தும் அவர்கள் உடல்கள் சேராவிடினும் கூட, இதுவே உயர்ந்த காதல்; அவர்கள் கடைசி வரையில் கூடாமல் மரித்தாலும் தோஷம் இல்லை."

ஆகவே காதலுக்கு மிக முக்கியமான அடிப்படை மன ஒற்றுமை. அது இல்லாமல் சரீர இன்பம் மட்டும் நுகர்வது காதல் ஆகாது. ஒருவருக்கொருவர் அன்பு இல்லையேல் வெளிப்படையாக எத்தகைய செய்கை உதவி புரிந்தாலும் பயன்படாது. மேலும் உயர்ந்த காதலைப் பெறுவது எளிதல்ல. காதலின் பாதை கரடு முரடானது. சுத்தமாகப் பெருக்கப்பட்டு பூக்கள் நிறைந்த மார்க்கம் இல்லை. அதைப் பெற விரும்பும் காதலர்கள் அவசியம் பல துன்பங்களை அனுபவித்தே ஆகவேண்டும்.

இதுதான் காளிதாஸனின் காதலைப்பற்றிய தீர்மானமான கொள்கை. இதை அவன் தனது நாடகங்களிலும் காவியங்களிலும் விவரித்து நன்றாக நிலைநாட்டியிருக்கிறன். இங்கு சில உதாரணங்களைப் பார்ப்போம்.

"சாகுந்தலம்" என்கிற நாடகம் காளிதாஸன் இயற்றிய நாடகங்களுள்மட்டுமல்ல, வடமொழி இலக்கியத்தில் மிகச் சிறந்த நூலாகும். அதில் சகுந்தலை துஷ்யந்தன் இவர்கள் காதலை மிக அழகாகச் சித்தரித்திருக்கிறன். துஷ்யந்தன் ஒரு நாள் காட்டில் வேட்டையாடச் சென்ற பொழுது தற்செயலாக ஒரு மானைக்காண்கிறன். அதைத் துரத்திக் கொண்டேபோய் கண்வர் என்கிற ரிஷியின் ஆசிரமத்தை அடைகிறன். அங்கே ரிஷியின் அழகிய தபோவனத்தில் சகுந்தலையைக் கண்டு, அவளிடம் ஆசைகொள்கிறன். ரிஷிகளின் வேண்டுகோளின்மேல் துஷ்யந்தன் ஆசிரமத்தில் சில நாட்கள் தங்கினன்.

நாளுக்கு நாள் இருவருக்கும் ஆசை வளருகிறது. ஒருவர் இதயத்தை மற்றவர் அறிய துடிக்கின்றனர். இருவரும் சந்திப்பதற்கு நடுவில் எவ்வளவோ தடைகள் உண்டாகின்றன. முதலில் துஷ்யந்தனுக்கு சகுந்தலை எந்த ஜாதியில் பிறந்தவள் என்று தெரியவில்லை. பெரிய சாம்ராஜ்யத்திற்கு சக்கரவர்த்தியான அவன் தகுதியற்ற பெண்ணை மணக்கலாமா? அப்படிச் செய்

தால் தனது கௌரவம் என்ன ஆகிறது? உயர் குலத்தில் பிறந்த தனது மனமே அவளிடம் ஈடு பட்டுவிட்டது. அவன் குலம் மிக பரிசுத்தமானது. ஆகவே அவன் மனம் எப்பொது அவளை விரும் பிற்றோ அப்பொழுதே சகுந்தலை தனக்குத் தகுதியுள்ளவள்தான் என்று ஒரு கணம் எண்ணு கிறான். ஆனால் மனக் குரங்கை நம்பக்கூடாது; அது எப்படி வேண்டுமானாலும் பாயும். அவ ளுடைய பிறப்பை அறிந்த பிறகே மனத்தைத் தாராளமாக விடலாம், அதுவரையில் அடக் கியே வைக்க வேண்டும். அத னால் தனக்கு பழியே பாபமோ வாராமல் தடுக்கலாம் என்று தீர் மானிக்கிறான். சகுந்தலையின் தோழியை விசாரித்து அவள் விஸ்வாமித்திரருக்கு மேனகை யிடம் பிறந்த அப்ஸரஸ— என்று அறிந்த பிறகே அவன் மனது நிம்மதி அடைகிறது.

முதல் தடங்கலைக் கடந்தாகி விட்டது. அத்துடன் அவன் பிர யாசை தீர்ந்துவிடவில்லை. அவள் தான் மணக்கக்கூடியவள்தான் என்றாலும் அவளுக்கு தன்மேல் விருப்பம் இருக்கிறதா என்றும், அவளுக்கு விருப்பம் இருந்தா லும் அவள் வளர்ப்புத் தந்தை கண்வர் அவளைத் தனக்குக் கொடுக்க இணங்குவாரா என்று தெரியவேண்டும். இந்த சந்தே கங்களை நிவர்த்திப்பதற்கு அவன் தகுந்த முயற்சியைச் செய்கிறான்.

துஷ்யந்தன் தனிமையில், தான் அவளை நேசிப்பதுபோல் அவளும் தன்னை நேசிக்கிறாளா என்று யோசித்துப் பார்க்கிறான். அதற்காக அவளைத் தான் கண்ட பொழுது அவள் எப்படி நடந்து கொண்டாள் என்பதை ஆராய் கிறான். துஷ்யந்தன் சகுந்தலை யின் தோழிகளுடன் முதன் முத லாகப் பேசினபொழுது அவள் தான் ஒரு வார்த்தையும் பேசா மல் அவன் பேச்சையே மிகக் கவனத்துடன் கேட்டுவந்தாள். அவன் முகத்தை அவள் நேராக வும் பார்க்கவில்லை, அதிகமாக வேறு எங்கேயும் தன் கவனத் தையும் செலுத்தவில்லை. 'போகாதே' என்று தடுத்த பொழுது, 'என்னைப்போ என் பதற்கும் போகாதே என்பதற் ம்கு நீ யாரடி' என்று எரிந்து விழுகிறாள். போகும் போது பொய்யான காரணம் கூறிக்கொண்டு துஷ்யந்தனை அடிக்கடி பார்த்துக்கொண்டே போகிறாள். ஆகையால் சகுந் தலைக்குத் தன்னிடம் ஆசை உண்டாகி இருக்கிறது என்ப தற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

அவளுக்குத் தன்னிடம் ஆசை இருப்பதாகவே தீர்மானித்து விட் டாலும், கண்வரின் சம்மதம் கிடைக்குமா என்று கவலைப்படு கிறான். அவளோ பெண், பெரிய வர்களுக்கு அடங்கியவள். தானே ஒருவனை மணந்துகொள்ள அவ ளுக்கு அதிகாரம் கிடையாது. அப்படியானால் தான் பெறமுடி யாத ஒரு பெண்ணைப்பற்றி கவ லைப்படுவானேன். அவளைப்பற் றிய சிந்தையை அறவே ஒழித்து விட்டால் நிம்மதியாக இருக்க லாமே என்றால், அதுதானே முடி யவில்லை. அடைய முடியாத பொருளில்தான் பொல்லாத மனது மேன்மேலும் ஆசை

கொள்கிறது என்கிறான் காளிதாஸன். தனக்கு கிடைக்காத சகுந்தலையையே நினைத்து ஏங்குகிறான் துஷ்யந்தன்.

இதனை குழப்பத்திலும் வேதனையிலும் ஒரு சந்தோஷம் இருக்கிறதாம். காதலர்கள் கூடாவிடினும் ஒருவரை ஒருவர் விரும்புவது உண்மையானால் அதுவே போதுமானது. துஷ்யந்தன் அவளை நேசிப்பதுபோல் அவளும் தன்னை நேசிக்கிறாள் என்பது அவளுடைய சிருங்கார சேஷ்டைகளால் ஒருவாறு புலனாகிவிட்டது. இந்த அறிவே அவனுக்குக் கொஞ்சம் ஆறுதலும் சந்தோஷமும் அளிக்கிறது.

ஒரு நாள் துஷ்யந்தன் காமவேதனை தாங்காமல் மனச்சாந்தி பெறுவதற்காக மாலினி நதிக்கரையை அடைகிறான். அங்கு ஒரு கொடி மண்டபத்தில் சகுந்தலையும் காமத்தினால் வாட்டப்பட்டு புஷ்பப் படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிறாள். அவள் தோழிகள் தகுந்த சைத்திய உபசாரம் செய்து அவள் தாபத்தை போக்கடித்துக் கொண்டிருக்கிறார்கள். இதை தூரத்திலிருந்தே கண்ட துஷ்யந்தன் ஒரு மறைவிடத்திலிருந்துகொண்டு கவனித்து வருகிறான். கொஞ்சகொஞ்சமாக அப்பெண்களின் சம்பாஷணையிலிருந்து சகுந்தலைக்குத் தன் மேலுள்ள ஆழ்ந்த காதலையும் அதன் காரணமாக அவள் வருந்துவதையும் அறிகிறான். சகுந்தலையின் தாபம் எந்த சிகிச்சைக்கும் கட்டுப்படாததைக் கண்டு தோழிகள் அவளை துஷ்யந்தனுக்கு ஒரு கடிதம் எழுதச் சொல்கிறார்கள். அவ்விதமே சகுந்தலை தனது மனதிலுள்ள உணர்ச்சியை நன்றாக வெளியிட்டு ஒரு கடிதம் எழுதுகிறாள். அதை சகுந்தலையே தன் தோழிகளுக்கு வாசித்துக் காட்டுகிறாள். துஷ்யந்தன் அதைக் கேட்டுக்கொண்டே, தனது சந்தேகம் எல்லாம் நீங்கியவனாய், அவள் முன் வருகிறான். பிறகு அவளுக்குத் தன்னிடம் பூரண நம்பிக்கை உண்டாகும்படி பேசி தன்னை மணந்து கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறான். சகுந்தலைக்கும் தன்னை மணக்க துஷ்யந்தன் இசைந்து வலுவிலேயே முன் வந்ததைப் பற்றி அளவற்ற சந்தோஷம் உண்டாகிறது. ஆனால் தனது தந்தை கண்வரின் சம்மதமின்றி எப்படி மணப்பது என்று தயங்குகிறாள். துஷ்யந்தன் கந்தர்வ முறைப்படி ஒருவர் சம்மதமுமின்றி நாம் மணந்து கொள்ளலாம் என்றும், இம்மாதிரி நடந்த விவாகத்தை முன்னோர்களும், அனுமதிக்கிறார்கள் என்றும் ஆகையால் கண்வரும் நிச்சயமாய் சம்மதிப்பார் என்றும் கூறுகிறான். சகுந்தலை அரசன் பேச்சைக் கேட்டு சந்தேகம் நீங்கியவளாய், அவனை மணக்க இசைகிறாள். காதலர்கள் எல்லாத் தடைகளையும் கடந்து, தமது லட்சியத்தின் பூரண வெற்றி பெற்று, சந்தோஷமாகக் கூடுகிறார்கள்.

இத்தகைய ஆழ்ந்த காதலையார் தான் போற்றாமல் இருப்பர்? கண்வர் தலைசிறந்த ரிஷியும், உலக அனுபவமுள்ளவரும் ஆனபடியால், சகுந்தலையின் சுயம்வரத்தை அறிந்து அவளையும் துஷ்யந்தனையும் மனமார வாழ்த்

றுகிறார். இக்காதலர்கட்குப் பிறந்த பிள்ளை எப்படி இருக்கும் என்று கூறவும் வேண்டுமா? சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் பிறந்த பரதன் என்கிற குழந்தையின் பெயரை அன்றோ இன்றும் பூரண சுதந்திரம் பெற்று திகழும் நமது நாடு தாங்குகின்றது.

"விக்ரமோர்வசீயம்" என்கிற நாடகத்தில் தேவமாது ஊர்வசிக்கும் மானிட அரசன் புரூரவஸ்ஸுக்கும் ஏற்பட்ட காதலை கவி அழகாக வருணித்திருக்கிறான். மஹாராஜா புரூரவஸ்ஸு சூரிய பூஜை செய்துவிட்டுத் திரும்பி வருகையில் ஹேமகூடம் என்கிற மலையில் அரம்பை முதலிய அப்ஸரஸ்ஸுக்களைச் சந்திக்கிறான். அவர்கள் அரசனை அழைத்து, தமது தோழியாகிய ஊர்வசியை ஒரு அரக்கன் அப்பொழுதுதான் தூக்கிச் சென்றுவிட்டான் என்றும், ஆகையால் அவளை உடனே மீட்டுக் கொண்டு வரவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்கள். அரசன் அவர்களுக்கு அபயம் அளித்துவிட்டு, அரக்கன் சென்ற திசையே சென்று அவனை அடித்து விரட்டிவிட்டு ஊர்வசியை அழைத்துக்கொண்டு வருகிறான். அப்பொழுது ஊர்வசிக்கும் புரூரவஸ்ஸுக்கும் முதன் முதலாக பரஸ்பரம் அன்பு பிறக்கிறது. அப்ஸரஸ்ஸுக்கள் அரசனுக்கு நன்றி செலுத்திவிட்டு அவளை அழைத்துக்கொண்டு தேவலோகம் போகிறார்கள். ஊர்வசி போக மனமின்றி புரூரவஸ்ஸைப் பார்த்துக்கொண்டே போகிறாள்.

பூலோகத்தில் தனது அரண்மனையை அடைந்த புரூரவஸ்ஸுக்கோ மனத்தில் நிம்மதி குலைந்துபோகிறது. தேவலோகத்துப் பெண்ணான ஊர்வசியை நினைத்து உருகிப்போகிறான். அவள் போகும்பொழுது தனது உடலிலிருந்து தன் இருதயத்தை அறுத்து எடுத்துக்கொண்டுபோய் விட்டாள் என்று கூறுகிறான். அவளோ தேவராஜனான இந்திரனின் அதிகாரத்துக்கு அடங்கியவள்! புரூரவஸ்ஸோ பூலோகவாசி. இருவரும் கூடுவது எங்ஙனம்? அவளை மறந்துவிடுவது என்பதும் முடியாத காரியமாக இருக்கிறது. அதற்கு மாறாக புரூரவஸ்ஸின் மனம் ஊர்வசியின் ஒய்யார நடை பேச்சு முதலிய செய்கைகளையே திரும்பத் திரும்ப தியானித்துக் கொண்டிருக்கிறது. இத்தகைய தனது மனோநிலையைக் கண்டு அதிலும் ஒரு பயன் ஏற்படுகிறது என்கிறான். தனக்குக் கிடைக்காத ஒரு பெண் தன்னிடம் ஆசைகொண்டிருக்கிறாள் என்பதை ஒருவாறு அறிந்து அவளிடம் அதிகமாக லயித்திருப்பதே ஒருவித இன்பத்தைத் தருகிறது. ஒரு வேளை தனது ஆசையும் நிறைவேறலாம் என்றுகூடத் தோன்றுகிறது. இதற்குக் காரணம் இருவருக்கும் உண்டான சமமான காதல்தான் என்று கூறவும் வேண்டுமா?

புரூரவஸ்ஸின் ஆசை வீண் போகவில்லை. ஊர்வசியே அவனைத் தேடிக்கொண்டு வருகிறாள். சாகுந்தல நாடகத்தில் துஷ்யந்தன் மறைவிலிருந்து கொண்டே சகுந்தலையின் தாபத்தைக் காண்கிறான். இந்த நாடகத்திலும், ஊர்வசி அபராஜிதை என்கிற மந்திரத்தினால் தன் உருவம் ஒருவர் கண்ணுக்கும் புலப்

படாதபடி மறைத்துக்கொண்டு, புரூரவஸ்ஸின் பூங்காவிற்கு வந்து அவன் சமீபத்திலேயே நின்று கொண்டு, அவனும் விதூஷகனும் பேசுவதைக் கேட்கிறுள். அவர்கள் சம்பாஷணையிலிருந்து புரூரவஸ்ஸுக்குத் தன்னிடம் உண்டான காதலை அறிகிறுள். காம வேதனையினுல் புரூரவஸ்ஸுக் குத் தூக்கமே வரவில்லை; மனதில் சாந்தி குலைந்துவிட்டது; தன்னைத் தேற்றிக்கொள்வதற்காக ஊர்வசியின் சித்திரத்தை எழுதலாம் என்ருலோ, உணர்ச்சி மிகுதியினுல் கண்ணீர்ப்பெருகி அதையும் செய்ய வொட்டாமல் தடுக்கிறது. இவ்வாறு அரசன் இன்னது செய்வது என்று புரியாமல் தத்தளிக்கிருன். இதைக் கண்டு ஊர்வசியின் மனம் இளகிவிடுகிறது. உடனே தனது மாயையினுல் ஒரு இலையை வரவழைத்து அதில் புரூரவஸ்ஸிடம் தனக்கு உண்டாகிய காதலை வெளியிட்டு ஒரு கடிதம் எழுதி, அதை அரசன் பக்கம் போகும்படி எறிகிருள். தற்செயலாக அதைக் கண்ட அரசன் படித்துப்பார்த்து அவள் முகத்தையே கண்டது போல் களிப்படைகிருன். சிறிது நேரம் கழித்து, ஊர்வசி தன் மறைவை நீக்கி அவன் கண்ணுக்குப் புலப்படுமாறு நிற்கிருள். புரூரவஸ்ஸுக்கு உண்டான சந்தோஷத்திற்கும் ஆச்சரியத்திற்கும் அளவேயில்லை. ஊர்வசி அவன் சமீபம் வந்து தன்னை அங்கிகரிக்குமாறு வேண்டிக் கொள்கிருள். கரும்புத்தின்ன கூலியா வேண்டும்? புரூரவஸ்ஸு அவளை மிக்க ஆனந்தத்துடன் ஏற்றுக்கொள்கிருன். அதற்கு அவன் கூறும் முக்கியமான காரணம், அவளும் தன்னைப்போல் காம தாபத்தினுல் வாட்டப்பட்டதுதான் என்கிருன். பழுக்கக் காய்ச்சின இரண்டு இரும்புத் துண்டுகளை சுலபமாக ஒன்று சேர்த்துவிடலாம். அதுபோலவே இருவருக்கும் ஆழ்ந்த அன்பு இருக்கும்பொழுது ஒன்ருகக் கூடுவதில் என்ன கஷ்டம் என்கிருன்.

"மாளவிகாக்னிமித்திரம்" என்கிற நாடகத்தில் மாளவிகையும் அக்கினிமித்திரனும் ஒருவரையொருவர் முதலில் கண்ட பொழுதே ஆசை கொள்கிருர்கள். இங்கேயும் காதலர்கள் ஒருவர் மனதை மற்ருெருவர் சந்தேகமாக அறியப் பாடுபடுகிருர்கள்; பல இடைஞ்சல்களுக்கு நடுவில் தமது முயற்சியைத் தளராது செய்கிருர்கள்.

மாளவிகை தனது அரண்மனையில் இருக்கிருள் என்பதை அறிந்தும் அவளைக் காண்பதே அக்னிமித்திரனுக்கு முடியாத காரியமாகிறது. விதூஷகனுடன் ஆலோசனை செய்து மிகப் பிரயாசையுடன் மாளவிகையின் பரதநாட்டியத்திற்கு ஏற்பாடு செய்கிருன். அரங்க மேடையில் மாளவிகை வந்து ஒரு பதத்தை அபிநயிக்கிருள். அதன் மூலமாகத் தனது இருதய உணர்ச்சியை வெளியிட்டு, அக்னிமித்திரனிடம் வெகு நாட்களாகத் தனக்கு உண்டாகியுள்ள காதலையும் ஒருவாறு புலப்படுமாறு செய்து விடுகிருள். அரசன் இதை நன்ருக அறிந்துகொள்கிருன். தன் காதலையும் அவளுக்குத் தெரிவிக்க விரும்புகிருன். அதற்கு சந்தர்ப்

பமே கிடைக்காமல் போகிறது. தீர ஆலோசித்த பிறகு மாளவிகையின் தோழி மூலமாகத் தனது அன்பை அறிவிப்பது என்று தீர்மானிக்கிருன். இது வீண்போகவில்லை.

மாளவிகையும் அரசன் மீது தனக்கு பிறந்த அன்பை ஒருவரிடமும் கூருமல் தனக்குள்ளேயே வைத்துக்கொண்டு புழுங்கிக் கொண்டிருக்கிருள். இதை ஒருவாறு அறிந்துகொண்ட அவள்தோழி மெள்ள மெள்ள அவள் வாயிலிருந்தே அவள் கருத்தை வெளியிடச் செய்கிருள். மாளவிகை தனக்கு அரசன்மீது ஆசை உண்டாயிருப்பது என்னமோ உண்மை என்றும், ஆனுல் அவர் மனதை அறியாததால் அவரை அடைவது என்பது ஆகாத காரியம் என்று, பரிதாபமாகக் கூறுகிருள். தோழி இதைக் கேட்டு சந்தோஷமடைந்து, அரசனும் அவளிடம் காதல்கொண்டு அவளைப்போல் துன்பப்படுவதாயும் கூறி, "இனி உன் அன்பால் அவர் அன்பை நீயே ஆராய்ந்து அறிவாய்" என்றும் ஒரு வழியை உபதேசிக்கிருள். ("அநுராகோ அநுராகோ பரீக்ஷிதவவ்ய.") இதைக் கேட்டதும் மாளவிகையின் ஏக்கம் பறந்து போய்விடுகிறது. தோழிக்கு நன்றி செலுத்திவிட்டுக் கடைசிவரையில் இந்த விஷயத்தில் தனக்கு உதவி புரியுமாறு வேண்டுகிருள். இந்த ஆழ்ந்த அன்பே காதலர்களை பிறகு ஏற்பட்ட பல சோதனைகளிலிருந்தும் கடக்கச்செய்து ஒன்ருகச் சேர்த்து விடுகிறது.

"மேகஸந்தேசம்" என்ற காவியத்தில் சிருங்காரரஸத்தின் வருணனை மிக உச்ச நிலையை அடைந்து இருக்கிறது. இம்மாதிரி இலக்கிய உலகில் வேறு ஒரு கவியும் செய்ததில்லை. காளிதாஸனுக்குமட்டுமே இந்த கௌரவம் உரியதாகும். இந்த காவியத்தில் கவி அன்புள்ள இரு காதலர்களின் பிரிவை வர்ணிக்கிருன். காதலின் சூட்சமத்தை நன்ருக ஆராய்ந்து கவி தனது கொள்கையையும் நிலை நாட்டிவிடுகிருன்.

குபேரனின் சாபத்தால் அளகாபுரியிலுள்ள தனது மனைவியை விட்டுப் பிரிந்த ஒரு யக்ஷன் தெற்கே வெகு தூரத்தில் ராமகிரி என்ற மலையில் வசிக்கிருன். பிரிவுத் துயரால் ஒரு இடத்திலும் இருப்புக்கொள்ளாமல் தனது குடிசையை அம்மலையில் மாற்றி அமைத்துக்கொள்கிருன். அப்படியும் அவனுக்கு நிம்மதி உண்டாகவில்லை. ஒருநாள் அம்மலையின் சிகரத்தில் வந்து தங்கிய ஒரு நீருண்ட மேகத்தைக் கண்டு அதை மனைவிக்குத் தூதாக அனுப்புகிருன். அதனிடம் தனது பிரிவுத்துயரை விவரமாகக்கூறி, தனது தரும பத்தினியிடம் அதை தெரிவித்து அவளை தைரியமாக இருக்கும்படியும், இன்னும் சில மாதங்களில் தனக்கு சாபம் தீர்ந்துவிடுமாகையால் பிறகு நிச்சயம் அவளுடன் தான் சேர்ந்து விடுவதாயும் கூறவேண்டுமெனப் பிரார்த்திக்கிருன். மேலும் யக்ஷன் தன்னைப்போலவே தனது இளம் மனைவியும் துன்பப்படுவாள் என்றும், அவளைப் பார்ப்பதற்கே பரிதாபமாக இருக்கும் என்கிருன். ஒரு சுலோகத்தால் தங்கள் இருவருக்கும் உள்ள ஆழ்ந்த அன்பை விளக்குகிருன்.

"பொல்லாத தெய்வம் எங்களை வெகு தொலைவில் பிரிந்து வைத்து விட்டது. என் உடல் இளைத்துப்போய் விட்டது. அவள் உடலும் மெலிந்துபோய் இருக்கும். என் உடல் விரகதாபத்தால் நன்றாகப் பொசுக்கப்பட்டிருக்கிறது. அவள் உடலும் பிரிவுக் கனலில் பொசுங்கி இருக்கும். என் கண்களில் நீர் பெருகிக் கொண்டேயிருக்கிறது. அவள் கண்ணிலும் இடைவிடாது நீர் பெருகிக்கொண்டே இருக்கும். என் உள்ளத்தில் ஆவல் நிறைந்து கிடக்கிறது. அவள் உள்ளத்திலும் அடங்கா ஆவல் காணப்படும். என் மூச்சுக் காற்று அதிக உஷ்ணமாக வெளிவருகிறது. அவள் மூச்சுக் காற்றும் அதிக சூடாக வெளிவரும். இது நிச்சயம். இப்பொழுது இவ்வளவு தொலைவில் இருந்தபோதிலும் என் மனத்தில் எழும் கருத்துக்களாலேயே அவளுடைய ஒவ்வொரு அங்கத்தையும் அடைகிறேன்."

யக்ஷனுக்கு இவ்வளவு துன்பத்திலும் அவள்மீது ஆசை குறையவில்லையாம்: அவளையே நினைத்துக்கொண்டு வாழ்கிறனும். அவளும் அப்படியே வாழ்கிருளாம். அவர்களுடைய தூய காதலை விளக்க வேறு பிரமாணம் வேண்டுமா? இந்த ஒருவிஷயமே அன்றோ அவர்களை உயிர்விடா வண்ணம் தாங்குகிறது.

காளிதாஸன் மற்றொரு முக்ய மான விஷயம் கூறுகிறன். தம்பதிகளின் உடல்கள் கூடினல்மட்டும் காதல் ஆகாது. மிக பிரயாசைப்பட்டுப் பெற்ற பொருளே மதிப்புக்குஉரியது. அதுபோலவே, உண்மையான ஈடுபாட்டுடன் அல்லது பக்தியுடன் பெறப்பட்ட காதலே சிறந்தது. அதாவது, காதலர்கள் பிரிவிலும் ஒருவரையொருவர் உண்மையாக நேசிக்க வேண்டும். அதை வளர்க்க வேண்டும். சகுந்தலை துஷ்யந்தனை விட்டுப் பல வருஷங்கள் பிரிந்திருந்தாள். அப்பொழுது அவள் தன் பதியையே நினைத்துக் கொண்டு ஆடையிலும் ஆகாரத்திலும் நியமத்தை அனுஷ்டித்து வந்தாள். பிறகு தன் பதியிடம் சேர்ந்தாள். உமாதேவியை விட்டு பரமசிவன் பிரிந்தபொழுது அவள் எப்படியாவது அவரை அடைவது என்று நிச்சயித்தாள். அதன் பொருட்டு பூப்போன்ற தனது இளம் உடலை ஆராத் துயரத்திற்கும் கஷ்டத்திற்கும் உள்ளாக்கிக்கொண்டு கடுந்தவம் புரிந்தாள். கடைசியில் பரமசிவன் பிரத்தியக்ஷமாகி அவள் தவத்தை மெச்சி 'உன் தவத்தால் விலைக்கு வாங்கப்பட்டேன்; இனி உனக்கு அடிமை' என்று கூறி அவளை ஏற்றுக்கொண்டார்.

இம்மாதிரியே காளிதாஸன் தனது எல்லா கதாநாயகிகளையும் கதாநாயகர்களையும், நீண்டதும் கடினமுமான தவம்புரியும் அல்லது பிரிவால் துன்புறவும் செய்கிறன். இதில் பெரிய அநுகூலமும் இருக்கிறது. இதனல் பாபம் செய்கிறவர்களின் இதயத்திலிருந்து பாபம் பொசுங்கிப்போகிறது. மனது சுத்தமாகி ஒருவருக்கொருவர் உண்மையாக நேசிக்கத் தொடங்குகின்றனர். காதலர்கள் சாச்வதமானதும் தெய்வீகமானதுமான சேர்க்கையைப் பெற தகுதியுள்ளவர்கள் ஆகிறர்கள். இத்தகைய காதலே தெய்

வீகமானது. இந்தக் கொள்கையை இன்றுகூட ஒருவரும் மறுப்பவர் கிடையாது.

தற்கால வாலிபர்கள் இவ் விஷயத்தில் தமது கவனத்தைச் செலுத்துவது மிகவும் அவசியம். சாதாரணமாக இளம் வயதினரான ஆண் பெண்கள் நெருங்கிப் பழகினாலேயே ஒருவித அன்பு உண்டாகலாம். அதை காதல் என்று பிரமிக்கக்கூடாது. முதலில் தவறான வழியில் மனத்தைச் செலுத்தினால் பிறகு வருந்தி வாழ்க்கையின் இன்பத்தை இழக்க நேரிடும். ஆகையால் ஒவ்வொருவரும் தான் செலுத்தும் அன்பு தகுதியுள்ள இடத்தில் சரியான முறையில் செல்கிறதா என்று நன்றாகக் கண்டு கொள்ள வேண்டும், ("பரீக்ஷ்ய கர்த்தவம் விசேஷாத் ஸங்கதம் ரஹ"— ஆண் பெண்கள் சந்திக்கும் பொழுது, ரஹஸ்யமாகக் கூடும் பொழுது, நன்றாக ஆலோசித்த பிறகே அன்பைச் செலுத்த வேண்டும்) இது காளிதாஸன் காட்டும் எளிய மார்க்கம், இதைப் பின் பற்றினால் காதலர்கள் தமது லட்சியத்தை நிச்சயமாகப் பெறலாம்.

முன் காலத்தில் பெற்றோர்கள் தமது பெண் பிள்ளைகளுக்குத் தகுந்த வரன்களைத்தேடி விவாஹம் செய்து வைத்தார்கள். அதனால் தம்பதிகள் சுகமாகவும் புகழுடனும் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். சில குடும்பங்களில் ஆண் பெண் ஜோடி சரியாகச் சேராததால் அவர்கள் வாழ்க்கை திருப்தியற்றதாக ஆய்விடும். ஆனால் இம்மாதிரி நடப்பது குறைவானதே. பொதுவாக முன் காலத்து தாம்பத்திய வாழ்க்கையில் சந்தோஷமும் அமைதியும் நிறைந்திருந்தன என்றுகூறலாம்.

இக்காலத்திலும் பெற்றோர்கள் சம்மதம் அடியுடன் மறைந்து போய் விடவில்லை. காலம் மாறி விட்டாலும் நாகரிகம் முற்றி விட்டாலும், பெற்றோர்கள் தமது பெண்களுடையவும் பிள்ளைகளுடையவும் சம்மதமின்றி அவர்களுக்கு வாழ்க்கைத் துணைவர்களை பொருக்குவதில்லை. இது மிகவும் நேரான முறை. இதனால் பெற்றோர்கள் மீது பழியும் இல்லை, கல்யாணம் செய்து கொண்டவர்களும் வருங்காலத்தில் சந்தோஷமாக இருக்க இயலுகிறது.

அதை சுமார் 2000 வருஷங்களுக்கு முன்பே எதிர்பார்த்தவரும், சிறந்த ஜோதிஷருமான "ஜாதகசந்திரிகை" என்ற நூலின் ஆசிரியர், தசவித விவாஹப் பொருத்தங்களையும் விவரித்துவிட்டுக் கடைசியில், 'எவளிடம் ஒரு வாலிபனுக்கு மனது சுயமாகவே ஈடுபட்டிருக்கிறதோ அவளை மணந்து கொள்வது பொருத்தமானது' என்கிறார். "யஸ்யாம் மன: ஸமாயுக்தம் தாமேவ விவஹேத்புத:") அப்படியானால் ஜாதகமே பார்க்கவேண்டாமா என்று கேட்கக்கூடாது. எல்லா பொருத்தங்களையும் நன்றாகப் பார்க்கவேண்டும். அவைகள் குறைந்தாலும் இருந்தாலும் மனப்பொருத்தம் இருந்தால் அதுவே சிறந்தது எனக் கொள்ள வேண்டும். இதை யாவரும் ஒப்புக்கொள்வார்கள். இவ்விதம் மனப்பொருத்தம் உள்ளவர்

களான சீதை-ராமன், பார்வதி பரமசிவன், தமயந்தி-நளன், சாவித்திரி-சத்தியவான் முதலிய புராண கதாநாயிகைகளையும் கதாநாயகர்களையும், பெற்றோர்கள் மட்டுமின்றி, ரிஷிகள் மட்டுமின்றி, தேவர்களும் கூட அனுமதித்துக் கொண்டாடியும் இருக்கிறார்கள். இந்த ஸர்வ ஸம்மதமான கொள்கையே காளிதாஸ மஹா கவியின் கொள்கையும் ஆகும்.

# மாமல்லபுரம்

**டி. என். ஸ்ரீநிவாசன்**

பல்லவ புரத்தில் தனது விருப்பத்திற்கு உகந்தவாறு பஞ்ச பாண்டவ மலையென்று பெயரிடப்பட்ட குன்றின் ஓர் சரிவில் சிவபெருமானுக்காக பாறையில் குடையப்பட்ட குகைக் கோயிலைக் கண்டு மகேந்திரவர்மன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. மன்னனின் விபரீதமான எண்ணத்தை ஜனங்கள் பயித்தியக்காரத்தனமென்று நினைத்தது பொய் ஆயிற்று. அவனது முன்னோர்கள் செங்கல், சுண்ணம்பு, மரம் முதலியவைகளைக் கொண்டு தாம் வசிக்கும் வீடுகளைப் போல ஆண்டவனுக்கும் வீடுகள் கட்டினார்கள். ஆனால் அவைகளெல்லாம் நாளடைவில் அழிந்து போயின. மகேந்திர வர்மன் இதைப் பார்த்துப் பார்த்து மிகவும் வருந்தினன். அழியாத மிகவும் உன்னதமான வீட்டைத் தரும் ராஜாதி ராஜனை பரம் பொருளுக்கும் இவ்வாறு காலக் கொடுமையினல் அழியும் வீடுகளாகவா இருக்க வேண்டும் என்று மனம் நொந்தான்.

மகேந்திர வர்மன் சாதாரண போர்வீரன் மட்டுமல்ல. இவனது திறமையினல் பல்லவ ராஜ்யம் வடக்கே கிருஷ்ண நதியிலிருந்து தெற்கே, காவிரிக்கப்பாலும் விஸ்தாரமாகப் பரவி இருந்தது. இவ்வாறு பரந்து கிடந்த ராஜ்யத்தில் மக்கள் மிக மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தனர். தவிர இவ்வாறு வெற்றிகளுடன் முடிதாங்கியிருந்த இளம் அரசனை மகேந்திர வர்மன் கவிதை, சங்கீத சாகித்தியங்கள் முதலியவைகளில் தேர்ச்சியடைந்தவன். சித்திரக் கையும், சித்திர உள்ளமும் படைத்த ஒரு அரும் ரஸிகன். யுத்தக் கலையே யல்லாமல் மற்றும் பலவித நுட்பக் கலைகள் வளர்ப்பதையே தனது நோக்கமாகக் கொண்டவன். ஓய்வு நேரங்களில் "மட்ட விலாச பிரகரண" என்னும் தனது விருதுகள் ஒன்றைக்கொண்டு அப்பெயருள்ள ஓர் நடன நூலை எழுதினதாகத் தெரிகிறது. மேலும் இவனது "சித்திரக்காரப் புலி" என்னும் விருதினல் இவன் சித்திரக் கலையிலும் தேர்ச்சிப் பெற்றவன் என்று தெரிகிறது. இவ்வாறு ஓர் சிறந்த கலா ரஸிகனை மகேந்திர வர்மனுக்கு என்றும் அழியாக் கோவில் கட்ட வேண்டுமென்று ஓர் விசித்திர எண்ணம் உதித்தது. இவ் வெண்ணத்தை அவன் வெளிப்படையாகத் தெரிவித்தபோது இவனை அவன் நாட்டிலுள்ள சிற்பிகள் அனைவரும் ஓர் பைத்தியக்காரனென்று நினைத்தார்கள். விச்வ கர்மாவின் காலம் முதல் தலைமுறை தலைமுறையாக கட்டின சில்ப சாஸ்திரத்தில் முடியாதது இவ்வரசன் மூலமாகவா முடியுமென்று இறுமாப்புக் கொண்டார்கள். ஆனல் இவனது விசித்திரமான எண்ணத்தை நிறைத்

வேற்ற ஓர் இளம் சிற்பி முன்வந்தான். அவன் தன் மன்னரைப் போலவே சிற்பத்தில் மிகத் தேர்ச்சியையும் புதுமையையும் கொண்டவன். அரசனின் உயரிய நோக்கத்தை நன்கு அறிந்து, தனது உள்ளத்திலுள்ள எண்ணத்தையும் அதன் மூலம் எவ்வாறு கடவுளுக்காக என்று மழியா கோவில்கள் கட்ட முடியுமென்றும் விவரமாகக் கூறினன்.

இதைக் கேட்டவுடன் அரசன் மிக மகிழ்ந்து சிற்ப யோகியான அவ்விளைஞனே உடனே அவனது புதிய முயற்சியை ஆரம்பிக்கும்படி கட்டளையிட்டான். இவ்வாறு முதன் முதலாக மலையைக் குடைந்து செய்யப்பட்ட கோவில் தான் இப்பொழுது பல்லவபுரத்தில் இருக்கும் சிவபெருமானின் கோவில். இதை முடித்து கட்டியவுடன் அரசனுடைய சந்தோஷம் அளவில்லாமல் பொங்கிற்று. விசித்திர சித்தனை மன்னனுடைய கனவு நினைவாகியதைக் கண்டு சிற்பியும் மனம் பூரித்துச் சந்தோஷமடைந்தான். தனக்கு இதற்கும் மேலான வெற்றிகளைக் கடவுள் அருள்புரிய வேண்டுமென்று பிரார்த்தித்தான்.

இவ்வாறு அடைந்த முதல் வெற்றியினால் அரசன் ஆயனர் என்னும் இச் சிற்பியைக் கொண்டு தற்காலம் தென்னாற்காடு ஜில்லாவிலுள்ள மண்டகப்மட்டு ஊரிலுள்ள குகைக் கோயிலேயும் செய்யக்கட்டளையிட்டான். முதல் கோயிலைப் போலல்லாமல் கொஞ்சம் விசாலமாகவும், பின்புரத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூன்று தெய்வங்களும் தனித்தனியே கர்ப்பக்கிரகங்களையும், அதன் முன்பு சிறந்த துவாரபாலகர்களையுடைய முக மண்டபத்தையும் சிற்பி வெகு திறமையுடன் ஓர் மலையைக் குடைந்து நிர்மாணித்தான். இதே மாதிரியாக மகேந்திர வர்மன் காலத்தில் சித்தன்னவாசல் குகை மண்டபங்களும், சித்திரங்களும் ஏற்பட்டன.

பல்லவ மன்னர்களுக்கு அக் காலத்தில் காஞ்சீபுரம் தலை நகரமாக இருந்தது. இந்நகரம் மிக விசாலமாகவும், உன்னதமாகவும் இருந்ததென்று அக் காலத்தில் இந்தியாவை சுற்றிப் பார்த்த "ஹ்யூன் சாங்" என்னும் சீன யாத்திரீகர் தனது சுற்றுப் பிரயாண அனுபவத்தில் எழுதியிருக்கிறார். மகேந்திர வர்மன் காலத்திலேயே தென்னிந்தியாவிற்கும் தற்காலத்தில் கிழக்கிந்திய'த் தீவென்று சொல்லப்படும் ஜாவா, பாலி, சுமத்திரா முதலிய தீவுகளுக்கும் கடல் மூலம் வியாபாரமும் போக்கு வரத்தும் நடந்ததாகத் தெரிகிறது. இதனல் பாலாற்றின் கரையில் இவர்கள் தலைநகரான காஞ்சீபுரத்திற் கருகாமையில் மாமல்லபுரம் ஓர் சிறந்த துறைமுகமாக இருந்தது. இத்துறைமுகம் அக்காலத்தில் சிறிய குன்றுகளை யுடையதாக இருந்தது. கப்பல் போக்குவரத்தால் இவ்விடம் பிரபல மடைந்த போது மகேந்திரவர்மன் இவ்வூருக்கு அடிக்கடி வர நேரிட்டது. அவ்வாறு அவன் வந்த சமயங்களில் அவனுடன் முன்பு கூறிய திறமை வாய்ந்த சிற்பியும் வந்தான். அரசனின் கலை உணர்ச்சியை அறிந்த சிற்பி இங்கு இருக்கும் கன்குன்றுகளைச் சிற்பக்

களஞ்சியங்களாக பெருமைப் படுத்த நினைத்து அரசனிடம் தன் எண்ணத்தை வெளியிட்டான். இவ் வெண்ணம் அரசனுக்கு அதிக மகிழ்ச்சியைக் கொடுத் திருக்க வேண்டும். ஏனெனில் அக்காலத்தில் பல தேசங்களி லிருந்தும் அநேக வஸ்துக்களைச் சுமந்து கொண்டு கப்பல்களும் பிரயாணிகளும் மாமல்லபுரம் வந்துக் கொண்டே யிருப்பார் கள். தவிர அரசனது சேனைக் காக கீழ்நாடுகளிலிருந்து யானை கள் கூட்டம் கூட்டமாக வந்து இறங்கின. இவைகளுக் கெல் லாம் தங்கவும், காஞ்சீபுரத்திற் குப் போகவும், வரவும் தகுந்த வசதிகள் மாமல்லபுரத்தில் அவ சியமாயிற்று. அக்காலத்திய வியாபார மேன்மையைத் தான் அப்பொழுது வாழ்ந்த ஆழ் வார்களில் ஒருவர் நேரில் கண்ட துறை முகத்தை கீழ்கண்ட பாசு ரத்தால் வர்ணிக்கிறார் போலும்.

"புலங்கொள் நிதிக்குவையோடு
புழைக்கைம்மா களிற்றினமும்
நலங்கொள் நவமணிக்குவையும்
சுமந்தெங்கும் நன்றொசிந்து
கலங்களியங்கும் மல்லைக்
கடல்மல்லைத் தலசயனம்
வலங்கொள் மனத்தாரவரை
வலங்கொள்ளென்
மடநெஞ்சே!"

இவ்வாறு சிறந்து விளங்கிய துறைமுகத்தில் கலைச் செல்வமும் பெருமையுடன் விளங்க வேண்டு மென்று மன்னனின் நோக்கத் தைச் சிற்பி நன்கு உணர்ந்து அர சனின் அநுமதியைப் பெற்றான். உடனே அவனின் மேற்பார்வை யின் கீழ் ஆயிரக் கணக்கான சிற்பிகள் முதலில் தென் கோடியி லிருக்கும் மலைகளில் வேலை செய் யத் தொடங்கினார்கள். இங்கு ஓர் பெரிய பாறையைச் செதுக்கி அதில் ஐந்து கோயில்களையும் யானை, சிங்கம், ரிஷபம் ஆகிய மூன்று மிருகங்களின் உருவங் களையும் மிக உன்னதமாகச் செய் தார்கள். இவைகளில் கடைசியில் உள்ளதில் மூன்று அடுக்குகள் உள்ளதாகச்செய்தனர். மற்றொன் றில் இரண்டு துவார பாலர்களு டன் கூடிய கர்ப்பக் கிரகத்தை உடையதான ஒரு சிறு கோயிலைக் குடைந்தார்கள். இவ்வைந்து கோயிலும் அக் காலத்தில் திரு மூர்த்திகளுக்கும் அவர்களின் சக்தி தேவைகளுக்கும் ஏற்பட்ட தாய் இருக்க வேண்டும். ஆனால் தற்காலத்திய நவீன அயல் நாட்டு சிற்ப சாஸ்திரிகள் இங்கு இருக் கும் ஐந்து கோயில்களை "பஞ்ச பாண்டவ ரதம்" என்று கூறி 'மாமல்லபுரம்' என்பது எப்படி 'மகாபலிபுரம்' என்று சிதறிற் றோஅதேமாதிரிஇக்கோவில்களின் நிஜத் தத்துவத்தை மாறுதல் செய்து விட்டார்கள். இக் கோயில்கள் மிக நேர்த்தியாகச் செதுக்கப் பட்டு மகரதோரணங் களுடனும் விளங்கின. தூண்கள் அனைவற்றிலும் பல்லவ மன்னர் களுக்கு அறிகுறியான யாளியின் உருவங்கள் மிக நேர்த்தியாகச் செதுக்கப்பட்டன.

இக் கோயில்களுக்குச் சுமார் அரை மைலுக்கு அப்பாலுள்ள ஓர் உயரிய குன்றை சிற்பி வெகு நேர்த்தியாக உபயோகித்தான். இக் குன்று மிக உன்னதமாக இருந்தபடியாலும் நேர் கிழக்கே வெகு தூரம் தெரிந்ததாலும் இதன் உயரத்தைக் கப்பலோட்டி களுக்கும் இதர ஜனங்களுக்கும்

உதவுமாறு "கலங்கரை விளக்கமாக" மாற்ற உத்தேசித்தான். அதற்காக அக்குன்றின் உச்சியில் "உழக்கு எண்ணெய் ஈசுவரர்" என்ற பெயர் கொண்ட சிவாலயத்தைக் கட்டினன். அக்காலத்தில் மாமல்லபுரத்திலுள்ள எல்லாக் கடைகளிலும் கடைக்கு ஓர் பணம் வீதம் தினம் ஒரு உழக்கு பணம் சேகரித்து அப் பணத்தைக் கொண்டு கிடைக்கும் எண்ணெயை இக்கோயிலின் மேலுள்ள பள்ளத்தில் ஊற்றி ஒவ்வொரு இரவும் விளக் கேற்றுவது வழக்கமாம். இரவு முழுவதும் இவ்விளக்கு பிரகாசமாக எரியும். அதைக் குறியாக வைத்துக் கொண்டு இரவில் வரும் கப்பலின் மாலுமிகள் மாமல்லபுரத்தை சுலபமாக அடைவார்கள். இக் கோவிலுக்குக் கீழ் அம் மலையையே குடைந்து சிற்பி ஓர் சிறந்த குகைக் கோவிலைக் கட்டினன். கிழக்கு முகமாக நோக்கியிருக்கும் இந்த சன்னதியின் வட சுவரில் அனந்தசயன மூர்த்தியான விஷ்ணுவின் உருவத்தையும், தென் சுவரில் தேவி மகிஷாசுர மர்த்தனியாக இருக்கும் உருவத்தையும் செதுக்கினன். துர்க்கையின் பயங்கர ரூபமும் விஷ்ணுவின் சாந்த சொரூபமும் எதிர் எதிராக இருக்கும்படி ஏற்படுத்திய சிற்பியின் வேதாந்த மனோபாவம் அவனது பெருமையை விளக்கியது. இவ்விடத்திலே தான் மகேந்திரவர்மனின் அரண்மனையும் இருந்ததாக ஏற்படுகிறது.

மகிஷாசுர மண்டபத்திற்கு சுமார் ஒரு பர்லாங்குக்குள்ளேயே வடக்கில் ஓர் சிறிய அழகிய குகைக்கோயில் செதுக்கப்பட்டது. இக் கோயிலில் மகேந்திர வர்மன் நின்று கொண்டிருக்கிறன். அவனுடை தந்தை சிம்ஹ விஷ்ணு வெகு கம்பீரமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறன். அவர்கள் பக்கத்தில் ராணிமார்கள் விநயமாக நின்றுகொண்டிருக்கிறர்கள். இக் குகைக் கோயிலின் பிரகாரத்தில் நான்கு அழகிய சிலா வெட்டுகள் இருக்கின்றன. ஓர்பாகத்தில் சமுத்திரத்திலிருந்து கிளம்பி வரும் வராஹமூர்த்தி தனது வலது துடையில் பூமிதேவியைவைத்துக் கொண்டு ஆதிசேஷன் மீது காலே ஊன்றி வெகு கம்பீரமாக நிற்கிறர். அதற்கு எதிர்ப்புறத்தில் பாரளந்த பரமன் ஒரு காலால் பூமி முழுவதும் அளந்து மற்றென்றல் ஆகாயம் முழுவதையும் அளந்து மூன்ருவது அடிக்கு இடம் கேட்டவாறு விச்வரூபமூர்த்தியாய் எட்டுக் கரங்களிலும் திவ்ய ஆயுதங்களை ஏந்திக் கொண்டு விளங்குகிறர். மற்றெரு பக்கத்தில் அமிர்த மதனம் செய்த பிறகு பாற்கடலிலிருந்து செந்தாமரையின் மீது வீற்றிருந்தவாறே மகாலக்ஷ்மி அவதரிக்கும் காட்சி வெகு உன்னதமாகச் செதுக்கப்பட்டது. மற்றெரு பக்கத்தில் துர்க்கையின் வைஷ்ணவி என்னும் ரூபம் மிகத் திறமையுடன் சிற்பிக்கப்பட்டது. இக் கோவிலுக்கு அருகாமையிலேயே ஓர் சிறிய கோயில், கணேசருக்காக ஒரே கல்லிலிருந்து செதுக்கப்பட்டருக்கிறது.

இக்கணேசர் கோயிலுக்கும் மகிஷாசுர மர்த்தனி மண்டபத்திற்கும் இடையேயுள்ள மலைச் சரிவில் மகேந்திரவர்மனது அரண்மனையைக் கட்டினர்கள்.

இவ்விடம் சிறிது உயரமா யிருந்த படியால் அரசன் தன் அரண் மனை உப்பரிக்கைகளில் இருந்த படியே நகரமுழுவதும் சுற்றிப் பார்வையிட செளகரியமாய் இருந்தது. நாளடைவில் வியா பாரத்தின் பொருட்டு தேசா தேசங்களிலிருந்து வியாபாரிகள் மாமல்ல புரத்தை வந்து அடைந் தார்கள். அரண்மனையைச் சுற்றி வீதிகளும், கடைத் தெருவுகளும் ஏற்பட்டன. மகேந்திர வர்மனும் அவனுக்குப் பின்னால் வந்த நரசிம்ம வர்மனும் அடிக்கடி காஞ்சீபுரத்திலிருந்து மாமல்ல புரம் வருவார்கள். அக்காலங் களில் அவர்களுடையசபையோர் களும், மற்றும் கெளரவம் பொருந்திய பொதுஜனங்களும் மாமல்லபுரம் வர நேர்ந்தது. நாளடைவில் வியாபாம் அதிகரிக் கவே இந் நகரம் மிகவும் பெரி தாகிக் கொண்டே வந்தது. ஆனால் ஜனங்களுக்கு எல்லாவித செளக ரியங்கள் இருந்தபோதிலும் ஒரு அசெளகரியம் தான் இருந்தது. மாமல்லபுரம் மலைப் பிரதேச மானதால் ஜனங்களுக்கு வேண்டிய அளவு ஜல வசதி இல் லாமலிருந்தது. பல்லவ ராஜன் அநேக குளங்களையும், கிணறு களையும் வெட்டினபோதிலும் ஜனங்களுக்கு போதுமான நல்ல ஜலம் கிடைக்கவில்லை.

இவ்விஷயம் அரசனின் காதில் எட்டியது. ஜனங்களுக்கு ஏற் பட்ட கஷ்டத்தை உடனே எவ் வாறு தீர்ப்ப தென்று அரசன் தனது சிறந்த சிற்பியுடன் கலந்து ஆலோசித்தான். மாமல்ல புரத் திற்கு சுமார் 10 மைலுக்குள் தெற்கே பாலாறு நதி ஓடிக் கொண்டிருக்கிறது. சதாகாலமும் அப்போது ஜலம் ஓடிக்கொண்டி ருந்ததால் அந்நதியின் ஜலத்தை நன்கு உபயோகிக்கலாமென்று சிற்பி கூறினான். உடனே அர சன் அந்நதியை மாமல்ல புரத் திற்கு உபயோகப் படுத்தும் படி சிற்பியை கட்டளையிட்டான். ஆயிரக் கணக்கான வேலையாட் கள் பாலாற்றிலிருந்து ஓர் கால் வாயை வெட்டத் தொடங்கினார் கள். இதை மாமல்லபுரத்திற்கு மேற்கே அரசனின் அரண் மனையின் அருகாமையில் கொண்டு வந்து ஊருக்குள் ஜலம் வரும்படி செய்தனர். இக்கால் வாய் வெட்டும் வேலை நடந்து கொண்டிருக்கும் போது சிற்பி ஓர் விசித்திர சிற்பவேலை செய்தான்.

அரசனின் அரண்மனையும் சில பிரமுகர்களின் மாளிகைகளும் குன்றின் மீது கட்டப்பட்டதாக முன்பே சொன்னோம். இக் குன் றின் கிழக்குப் பக்கம் மிகச் செங் குத்தாக சுமார் ஐம்பது அடி உயர முள்ளதாக இருந்தது. ஓரிடத் தில் இம்மலை நடுவில் பிளக்கப் பட்டு சுமார் பத்து அடி அகல முள்ள சுயமாக ஏற்பட்ட கால் வாயைப் போலிருந்தது. இவ் விடத்தைச் சரியாக உபயோகப் படுத்த சிற்பி ஆசைப் பட்டான். முன்பு எப்படி பகீ ரதன் தனது முன்னோர்களின் மோக்ஷத்தைக் கருதி தவம் புரிந்து கங்கையை ஸ்வர்க்க லோகத்தி லிருந்து பூலோகத்திற்குக் கொண்டு வந்தானோ, அம்மா திரியே மாமல்லபுரத்தின் ஜனங் களின் ஜலக்குறையைத் தீர்க்க மகேந்திர வர்மன் பாலாறைக்

கொண்டு வந்ததாகக் கருதி சிற்பி இவ்விடத்தில் கங்காவதார சம்பவத்தை சித்திர ரூபமாகச் செதுக்கினன். பாறையின் நடுவில் பிளவுபட்டிருக்கும் அருவி போல் இருக்குமிடத்தில் சிற்பி நேர்த்தியாக நாக கன்னிகைகளைச் செதுக்கினன். பிளவுக்கு வட பாகத்தில் சகலவிதமான கந்தர்வ, கின்னர, தெய்வ ரூபங்களையும், ஐராவதம், சிம்மங்கள் முதலிய உருவங்களையும் செதுக்கினன். இப்பாகம் எந்த தெய்வ லோகத்திலிருந்து கங்கை வந்தாளோ அதை நிரூபிப்பதற்கு ஆயிற்று. தெற்கு பாகத்திலோ பகீரதன் சிவனைக் குறித்து தபஸ் செய்வதும் அவன் எவ்வாறு தவம் செய்கையில் பூலோகத்திலுள்ள மனித, மிருக வர்க்கங்கள் அனைத்தும் அவனுடன் சேர்ந்து தவம் செய்வதையும் சித்திர ரூபமாக சிற்பி செதுக்கினன். இவ்வாறு உன்னதமாகச் செதுக்கப்பட்ட சிற்பக் களஞ்சியத்தில் ஓர் ஹாஸ்ய சம்பவமும் காண்கிறது. பகீரதனுக் கருகாமையில் ஒரு பூனையும் தனது முன் கால்களைத் தூக்கிக் கொண்டு, அதனருகில் அனேக எலிகள் விளையாடிக் கொண்டிருப்பதையும் கவனியாமல் மிக ஊக்கத்துடன் தபஸ் செய்து கொண்டு நிற்கிறது. இவைகளுக்கிடையே சுமார் ஐம்பது அடி நீர் வீழ்ச்சியாக மகேந்திரவர்மன் கொண்டுவந்த கங்கை கீழே விழுந்தது. அங்கிருந்து ஜலம் சமுத்திரக்கரை வரையிலும் சிறிய வாய்க்கால்கள் மூலம் கொண்டு போகப்பட்டது. இது என்ன உன்னதமான காக்ஷியாக யிருந்திருக்க வேண்டும்.

எப்பொழுதாவது வெள்ளப் பெருக்கினல் ஜலம் கால்வாய்களை மீறி வந்து சேதம் செய்துவிடுமோ என்று பயந்து அவ்விபத்துக்களிலிருந்து காப்பாற்ற சிற்பி கிருஷ்ணபகவானை சிற்பித்தார். அடாது ஏழு நாள் கோவர்த்தனத்தில் மழை பெய்த போது லோகநாதனுகிய கிருஷ்ணபகவான் எவ்வாறு கோவர்த்தனகிரியைத் தூக்கிக் குடையாகப் பிடித்தாரோ, அச்சம்பவத்தைக் கல்லில் நிர்மாணித்தான். கங்காவதார சிற்பத்திற் கருகாமையில் அம்மலையிலே ஓர் அழகிய மண்டபத்தைச் செதுக்கி, அதில் கோவர்த்தனகிரியைத் தூக்கும் சம்பவத்தை கங்காவதாரம் எவ்வளவு உயரமாய் இருக்கிறதோ அதே உன்னத ரூபமாய்ச் செதுக்கினன். இருபெரு தெய்வங்களான சிவனும் விஷ்ணுவும் உலகிற்காகச் செய்த பேருபகாரத்தை இவ்வாறு ஒன்றின் பக்கத்தில் மற்றொன்ருக சிறப்பித்தது அக்காலத்திய கலையின் உன்னத நிலைமையையும் சமரசப் போக்கையும் வெகு கம்பீரமாக நிரூபிக்கிறது.

இதே சமரச எண்ணம் மகேந்திரவர்மனுக்குப் பின்பு வந்த நரசிம்மவர்மனுக்கும், ராஜசிம்மனுக்கும் உண்டு என்பது தெரிகிறது. நரசிம்மவர்மன் காலத்தில் கடற்கரை ஓரமாக சில கோவில்கள் கட்டப்பட்டன. துறைமுகத்தில் வியாபாரம் நாளுக்குநாள் அதிகமாகவே வியாபாரிகளின் மண்டிகளும், வீடுகளும், இதர வியாபார ஸ்தலங்களும், அயல் நாட்டார் தங்குவதற்கான வசதிகளும், கடற்

கரை ஓரமாக ஏற்படத்தொடங்கின. இவ்வாறு விருத்தியடைந்த அப்பாகத்தில் நரசிம்ம வர்மன் காலத்தில் சமுத்திரக் கரை ஓரத்தை ஒட்டி சில கோயில்கள் கட்டப்பட்டன. இவை நகரத்திற்குள் உள்ள குகைக் கோயிலைப் போலல்லாமல் செதுக்கப்பட்ட கல்களினுல் மணற்பாங்கான தரையின்மீது தகுந்த அஸ்திவாரத்துடன் கட்டப்பட்ட தனிக் கோயில்களாகும். அக்காலத்தில் சுமார் ஆறு ஏழு கோயில்கள் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. ஆனுல் நாளடைவில் சமுத்திரம் நாட்டிற்குள் பிரவேசித்த கொடுமையால் இக் கோவில்கள் அழிக்கப்பட்டு தற்காலத்தில் அவற்றுள் ஒன்றைத்தான் நாம் இப்போது காண்கிரேம். இக்கோயில் மிக நேர்த்தியாக அருமை வேலைப்பாடுடன் கூடிய இரு கோபுரங்களுடன் அதைச் சுற்றி நேர்த்தியான நந்தி விக்ரகங்களுடன் கூடிய மதில்களுடன் கட்டப்பட்டது. சுமார் 1300 வருஷங்கள் கடந்த பின்னும் இக் கோயிலின் சிற்ப வேலைப்பாடு இன்னும் மிக அழகாய் இருக்கிறது. விளக்கேற்றிக் கொண்டு தென்புரமாக உள்ளே சென்ருல் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்தபடி "கடல்மல்லைத் தலசயனத்துத் தாமரைக் கண் துயில் அமர்ந்த தலைவன்" என்கிற பெருமாள் பிரம்மாண்டமான சாந்த வதனத்துடன் யோக நித்திரையில் தரிசனம் அளிக்கிருர். பிரகாரத்தில் மிக நேர்த்தியாக செதுக்கப்பட்ட துர்கையின் ரூபத்தை தரிசிக்கிரேம். பின்புறம் சென்ருல் கிழக்கு நோக்கி இருக்கும் சிவாலயத்தைக் காண்கிரேம். இக்கோவிலுள்ள லிங்கத்திற்கு இரு பக்கங்களிலும் பிரம்மா, விஷ்ணு ரூபங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அக்காலத்தில் எவ்வாறு தெய்வீக வழிபாட்டில் வைஷ்ணவம், சைவம், சாக்தம் என்ற மூன்று மதங்களும் சமரசத்துடன் வாழ்ந்தனவென்று தெரிகிறது. இக் கோர்விலுக்குக் கிழக்கே இன்னும் கோவில்கள் இருந்ததென்றும், அவைகளைக் கடல் விழுங்கி விட்டதென்றும் தெரிகிறது.

கங்காவதாரத்திற்குத் தெற்கேயுள்ள சமபூமியில் ஓர் அழகிய நந்தவனம் ஏற்படுத்தப்பட்டது. இதற்கருகாமையில் ஸ்ரீ ஸ்தல சயன பெருமாள் கோவில் இருந்தபடியாலும் பல்லவ மன்னன் தனது ஓய்வு காலத்தில் உல்லாசமாகச் சுற்றி வருவதற்காகவும் இந்நந்தவனத்தை விருத்தி செய்தார்கள். இங்கும் அத் தெய்வீகத் தன்மை பொருந்திய அச் சிற்பி ஓர்அரிய சிற்ப விசித்திரத்தைச் செய்திருக்கிருன். குன்றின் சரிவிலிருந்த ஓர் பெரிய பாறையை சுத்த வட்டமாகச் செதுக்கி ஒரே ஒரு இடத்தில் அது தாய்ப் பாறையுடன் சேர்க்கப்பட்டிருப்பது ஓர் அதிசயம்! இதைக் கிருஷ்ணனின் வெண்ணெய் உருண்டை என்பார்கள். ஆனுல் இவ்வளவு திறமையுடன் இக்கனமான பாறை உருண்டை ஓர் நுட்பமான சேர்மானத்துடன் சரிவுள்ள குன்றின் மீது பிரத்தியேகமாக நிற்பது அக்காலத்திய சிற்பத் திறமையைக் காட்டுகிறது. இந் நந்தவனத்திற்கு கங்காவதார நீர்

வீழ்ச்சியிலிருந்து சதா ஜலம் ஓடிக்கொண்டிருந்தது.

மஹேந்திரவர்மன் காலமான ஏழாவது நூற்றாண்டில் மாமல்ல புரம் எவ்வளவு அழகாக இருந் திருக்க வேண்டும். மகேந்திர ஜாலம் என்று சொல்வார்களே அம்மாதிரியாக இந் நகரத்தின் செல்வமும் சிறப்பும் ஜொலித் துக் கொண்டிருந்தன. ஓர் சிறிய குன்றின் மீது மன்னனின் மாளி கையும் அக்குன்றுக் கடியில் மனி தனால் நிர்மாணிக்கப்பட்ட நீர் வீழ்ச்சியும் அதைச் சுற்றி சிறந்த வாசனையுள்ள புஷ்பச் செடி களால் கமழும் வாசனை வீசும் நந்தவனமும், இக்குன்றுக்கருகா மையில் உன்னதமாக நிர்மாணிக் கப்பட்ட கலங்கரை விளக்கும், அதற்குத் தெற்கே சதுர்மறை யோர்கள் வாழும் கோயில்களுக் கிடையே அக்ரகாரங்களும், துறைமுகத்தை ஒட்டி வர்த்தக பண்டகசாலைகளும், வியாபாரி களின் வீடுகளும் இதற்கிடையே நானாதேசத்து பண்டங்களை விலை மாற்றும் பெரிய கடைத் தெருவு களும் லக்ஷ்மீகரமாக இருந்தன. எவ்வாறு வியாபாரம் வெகு உன்னதமாக நடந்ததோ அவ் வாறே மாமல்லபுரம் ஓர் சிறந்த சமரச வேதாந்தத்தை முன்னணி யாகக் கொண்டு கலைப் பொக் கிஷமாக நீர்வளம், நிலவளங்கள் நிரம்பியதாகவும் செல்வத் தரசி யும் கல்விக்கரசியும் ஒன்று கூடி வாழ்ந்த இடமாக விளங்கியது.

# ஸயாமியர்களின் ஸங்கீதம்

ரஞ்சன், எம்., லிட்.

பர்மா, சீனவைப் போல், ஸயாம் தேசத்திலுள்ளவர்களும் சிற்பம், ஓவியம், நடன ஸங்கீதக் கலைகளில் அதிகப் பற்றுள்ளவர்களென அறியலாம்.

நம்முடைய இந்திய சங்கீதத்தைப்போல் ஸயாமியர்கள் ஸங்கீதத்திற்கு நல்ல முக்யத்வம் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் அவ்வளவு முன்னேற்றமடைய வில்லை.

நம் சங்கீதத்தில் முக்கியமாக ஏழு ஸ்வரங்களையும் மேற் கொண்டு ஐந்து ஸ்வரங்களையும் உபயோகிக்கின்றோம். இந்த பனிரண்டு ஸ்வரங்களும் ஒரு ஸ்தாயியில் பன்னிரண்டு ஸமபாகமாகப் பிரிக்கப்படாமல், காதுக்கு இனிமை தரும்படியாக ஏறத்தாழப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் ஸயாமியர் ஸங்கீதத்தில் ஏழ எழு ஸ்வரங்கள் தான் உள்ளன. மேலும் இந்த எழு ஸ்வரங்களை தொகுக்க, ஒரு ஸ்தாயியை ஏழு ஸமபாகமாகப் பிரித்து விட்டார்கள்.

நம் ஸங்கீதத்தில் ஒரு ஸ்தாயியில் நாம் பனிரண்டு (Semitone) (ஸெமி - டோன) அரை ஸ்வரங்கள் இருப்பதாகச் சொல்லுகிறோம். அதாவது ஷட்ஜம் என்னும் ஸ்வரத்திற்கும் சுத்த ரிஷபத்திற்கும் ஒரு ஸெமிடோன் (அரை ஸ்வரம்) வித்யாசம் இருக்கிறதென்றும், அதே போல் சுத்த ரிஷபத்திற்கும் சதுச்ருதி ரிஷபத்திற்கும் ஒரு ஸெமிடோன் (அரை ஸ்வரம்) வித்தியாசம் இருக்கிறதென்றும், இவ்வாறு பனிரண்டு ஸ்வரங்களும் இரு ஸ்வரங்களுக்கு நடுவில் ஒரு ஸெமிடோன் வித்தியாஸம் இருக்கிறதெனசொல்லுகிறோம். ஆனால்இந்த ஸயாமியர் ஸங்கீதத்தில் ஒரு ஸ்வரத்திற்கும் மற்றொரு ஸ்வரத்திற்கும் இடையே 5/7 ஸெமிடோன்கள் இருக்கின்றன. இதே காரணத்தால் தான் நாம் சிற்சில சமயம் ஸங்கீதத்தைக் கேட்கும்போது அவை அபஸ்வரங்களாயும் கர்ணகடோரமாகவும் நம் காதில் விழுகின்றன.

சீனர்கள், சீன ஸங்கீதத்தில் ஒரு ஸ்தாயியில் ஏழு ஸ்வரங்கள் இருந்தும் எப்படி அவர்கள் ஐந்து ஸ்வரங்களை மட்டுமே முக்யமாக உபயோகிக்கிறார்களோ அதே போல் ஸயாமியர்கள் சமயத்திற்குத் தகுந்தவாறு நான்கு, அல்லது ஐந்து ஸ்வரங்களையும் சிற்சில சமயம் ஏழு ஸ்வரங்களையும் உபயோகிக்கின்றார்கள்.

ஸயாமியர்களுடைய தேசிய கீதத்தில் ஸ்தாயியில் நான்கே நான்கு ஸ்வரங்களை மட்டும் உபயோகிக்கின்றனர்.

ஸயாமியர் தாள விஷயத்திலும் வெகு முன்னேற்றமடையவில்லை. ஏனெனில் அவர்கள் சாதாரணமாக ஏகதாளத்தைத் தவிர வேறு எந்த தாளத்திலும் வாசிப்பதாகத் தெரியவில்லை. ஆனால் அவர்களுடைய தாளக்கட்டு பாராட்டத்தக்க வேண்டிய விஷயம் என்று சொல்லப்படுகிறது.

ஸயாமிய வாத்யங்கள் முழுதும் புராதன இந்திய வாத்யங்களின் மாறுபாடுகளாகத்தான் இருக்க வேண்டும் என தெரியவருகிறது. ஸா தாய் என்று சொல்லப்பட்ட வாத்யம் பிடில் போன்ற ஒரு வாத்யம். இந்த வாத்யம் மிகவும் பழக்கத்தில் உள்ளதாம்.

பலவித தோல் கருவி வாத்யங்கள் தாலாட் — போட், டாபோன், முதலியவை நம் டோலக் போன்ற வாத்யங்களை ஒத்திருக்குமாம். க்ளாங் யேய் என்னும் தோல் கருவி முன் சொன்ன வாத்யங்களைப் போல் இரண்டு மடங்கு பெரியதாம். க்ளாங்கேக், ஸாங்நா என்னும் இரு வாத்யங்களும் நம் மிருதங்கத்தைப் போன்ற வாத்யங்களாம். தோன் என சொல்லப்படும் வாத்யம் ஆறு அடி நீளமானதும் ஒரே பக்கத்தில் மட்டும் தோலினல் மூடப்பட்ட வாத்தியமாம். ருமாணு என்று சொல்லப்படும் வாத்தியம் தம்பட்டம் போன்ற வாத்யம்.

ஸயாமியர்கள், பலவிதமான "Gong" காங் என சொல்லப்பட்ட "மணி" களை உபயோகிக்கிறார்கள். சாதாரணமாக ஒவ்வொரு வாத்ய கோஷ்டியிலும் அநேக தொங்கும் மணிகளையுடைய வாத்யம் இருக்கும். இந்த வாத்யத்திற்குப் பெயர் "மாங்" இதே ரகத்தைச்சேர்ந்த "க்ளாங்" எனச் சொல்லப்படும் வாத்யமானது நம்முடைய ஜலதரங்கம் போன்ற வாத்யம். கோப்பைகளுக்குப் பித்தளை மணிகளை உபயோகிக்கிறார்கள். இந்த மணிகளை அதற்கெனக் செய்யப்பட்ட மரத்தோரணத்தில் கட்டிவிடுவார்கள். "க்ளாங்யேய்" என்னும் வாத்யம், 16 மணிகளைக் கொண்டது. "க்ளாங் லெக்" என்பது 21 மணிகளைக் கொண்டது. ரானட் என்னும் வாத்யமானது மணிகளுக்குப் பதிலாக மரக்கட்டைகளை உபயோகிக்கப்படும் வாத்தியம். சில சமயம் மூங்கில் கழிகளையும் உபயோகிப்பார்களாம்.

"சாப்", "சிங்" என்னும் வாத்யங்கள் தாள வகைகளைச் சேர்ந்தவை.

"பி - சாலா" என்னும் வாத்யமானது முக வீணையின் ரகத்தைச் சேர்ந்தது. இந்த வாத்யத்தில் ஆறு அல்லது ஏழு துவாரங்கள் செய்யப்பட்டிருக்கும்.

தற்காலிகமாக "டாகே" எனச் சொல்லப்படும் வாத்யம் ஸ்யாமியரிடையே மிகப் பிரபல்யமாக இருக்கின்றதாம். இது Guitar (கிதார்) எனச் சொல்லப்படும் ஆங்கிலேய வாத்யத்தையொத்து இருக்கிறது. இதை ஒரு மாதிரி வீணைக்கும் ஒப்பிட்டுக் கூறலாம். இந்த வாத்யத்தைக் கையினல் மீட்டாமல் Plecturum பிளெக்டரம் எனச் சொல்லப்பட்ட ஒரு மீட்டும் கருவியை உபயோகப்படுத்துகின்றனர்.

# பாரதிதாசன் கவிதை

**வி. ஆர். எம். செட்டியார், பி. ஏ.**

யாப்பின் சூழ்ச்சியால், கவிதை நன்றாய் அமைந்துவிடாது; மேதா விலாசம் தன் ஆவேசத்தைக் கொட்டும்போது பாஷை மின்ன விடுகிறது. கற்பனை உலகமே, பாஷையை அலங்கரிக்க முன் வந்துவிடுகிறது. கவிதா சிருஷ்டியிலே, தெய்வத் தொடர்பும் முன் வந்து நிற்கும் என்று பேகன் அனுபவித்துக் கூறியிருக்கிறார். இதை நம்பத்தான் வேண்டும். அபூர்வமான கவிஞர்களுக்கே, இது முற்றும் பொருந்தும். வெறியே வெற்றியாக பாஷையில் நின்று நிலவும்.

பாரதிதாசன் கவிதைகளிலே நாம் உண்மையைக் காண்கிறோம், அழகை அனுபவிக்கிறோம், சக்தியைக் உணர்கிறோம். கவிதையின் சிருஷ்டி எழிலை உணர்ந்து பாடும் பாரதிதாசன், எவ்வளவு சிறந்த உள்ள உத்வேகத்துடன் கவிதை பொழிகின்றார்! கவிஞர் எதையும் அனுபவித்தே எழுதுகின்றார். அவருடைய ஆழ்ந்த ஊறிய தமிழ்ச் சொற்கள், சிந்தனைகளைக் கவ்விச் செல்லும் சிட்டுக் குருவியின் கூரிய மூக்குப்போல. அவருடைய பாஷை கூர்மை பெற்று விட்டது.

'அழகின் சிரிப்பு' என்ற கவிதை நூலின் தலைப்பே அனுபவ பாஷையின் அதிகாரத்தை உவமை நயத்துடன் எடுத்துக் காட்டவில்லையா? என்று சிலர் கேட்கலாம். அழகு சிரிக்கத்தான் செய்கிறது, இயற்கை உலகிலே. கவிஞன் உள்ளத் தடாகத்திலே, அழகு மலர்ந்து சிரிப்பது உண்மை. வாசகனுக்கும் கற்பனைக் கண்கள் வேண்டும். அப்போதுதான், கவிஞனைக் கவிஞன் கண்கொண்டு அனுபவிக்கலாம். அழகின் சிரிப்பிலே, கவிஞன் அனுபவிக்கின்ற பகுதிகள்: அழகு, கடல் தென்றல், காடு, குன்றம், ஆறு, செந்தாமரை, ஞாயறு, வான், ஆல், புறாக்கள், கிளி, இருள், சிற்றூர், பட்டணம், தமிழ், அனைத்தையுமே, கவிஞர் சிரிக்கக் காண்கிறார்; இந்தச் சித்திரத்தை கவிஞர் தமிழ் மொழியால் எழுதிக் காட்டுகிறார்.

**"காலையிளம் பரிதியிலே**
**அவளைக் கண்டேன்!**
**கடற்பரப்பில், ஒளிப்புனலில்**
**கண்டேன்! அந்தச்**
**சோலையிலே, மலர்களிலே,**
**தளிர்கள் தம்மில்,**
**தொட்ட இடம் எலாம்கண்ணில்**
**தட்டுப் பட்டாள்!**
**மாலையிலே மேற்றிசையில்**
**இலகு கின்ற**
**மாணிக்கச் சுடரிலவள்**
**இருந்தாள்! ஆலஞ்**
**சாலையிலே கிளைதோறும்**
**கிளிகள் கூட்டந்**
**தனில் அந்த 'அழகெ'ன்பாள்**
**கவிதை தந்தாள்."**

எப்படி அழகு உதயமாகிறது-

கவிஞன் கவிதைக் கண்ணிலே, கவிஞன் உள்ளத் துடிப்பை தாங்கி நிற்கும் இன்பச் சொற்களிலே! இதை ஒரு உண்மைக் கவிஞன் தான் பாட முடியும்.

'தென்றல்' வருணனை எப்படி இருக்கிறது, பாருங்கள்:

*"அண்டங்கள் கோடி கோடி*
*அனைத்தையும் தன் அகத்தே*

*கொண்டஓர் பெரும் புறத்தில்*
*கூத்திடு கின்ற காற்றே!*

*திண்குன்றைத் தூள்தூ ளாகச்*
*செய்யினும் செய்வாய்; நீ ஓர்*

*நுண்துளி அனிச்சம் பூவும்*
*நோகாது நுழைந்தும்*
*செல்வாய்"*

கவிதையின் சக்தி இதில் தெரிகிறது; அழகு சக்தியாக மாறி உண்மையை அகக் குன்றில் தூண்டுகிறது.

இரவின் கூந்தலுக்கு, நிலா வயிர வில்லையாகக் கொண்டையில் அமைந்திருப்பதாக பாரதி கற்பனை செய்திருப்பது ஓர் அபூர்வம்தான். இதுவே கற்பனைச் சிகரம். பாரதிதாசன் கவிதைகளிலே, சிறந்த சொற்றொடர்கள் ஆவேச மின்னலுடன் பாஷை உலகிலே பூச்செண்டுகளாகக் காட்சியளிக்கின்றன.

*அருவிகள் வயிரத் தொங்கல்*
*அடர்கொடி, பச்சைப் பட்டே!*

*குருவிகள், தங்கக் கட்டி!*
*குளிர்மலர், மணியின் குப்பை!*

*எருதின்மேற் பாயும் வேங்கை,*
*நிலவுமேல் எழுந்த மின்னல்,*

*சருகெலாம் ஒளிசேர் தங்கத்*
*தகடுகள் பாரடா நீ!*

மேலே நாம் காண்பது கவிதையின் சிருஷ்டி எழில்; உணர்ச்சி மலர்கிறது. கற்பனை விரிகிறது. பாஷை சிருஷ்டி முனையிலே ஒளி வீசுகிறது.

# நான் ரசித்த சிறு கதைகள்

"ஆர்வி"

சிறந்த சிறுகதைகள்என்று சித்தாந்தப் படுத்த வேண்டிய பொறுப்பு மிகமிகப் பெரியது. அந்தப் பொறுப்பு எனக்கு வேண்டாம். என் அபிப்பிராயத்தில் காலமே அந்தப் பெரும் பொறுப்பை ஏற்கத் தகுந்தது ஆகும். காலத்தை மிஞ்சிய நீதிபதி--பாரபட்சமற்று எடை போடும் விமரிசகன்—இருப்பதாக நான் நம்பவில்லை. காலத்திற்கு விருப்பு வெறுப்பு இருப்பதில்லை. வேண்டியவன் வேண்டாதவன் என்ற வர்க்கபேதமிருப்பதில்லை. எல்லாமே அதற்கு ஒன்றுதான். மக்கலான சரக்குகள் சீக்கிரத்திலேயே மடிந்து போகின்றன. இரும்பைப் போன்றவை கொஞ்ச காலத்தில் துரு ஏறிப் போகின்றன. ஆனால் எக்காலத்திலும் எதனாலும் மாறுதலடையாத அரும் பொருள்கள் இல்லாமல் போவதில்லை. அப்படிப்பட்ட பொருள்தான் பரம்பொருளுக்கு அடுத்தபடி அழிவற்ற நிலையில் உள்ளது. அதுதான் உண்மை. உண்மைப் பொருளைத்தான் மற்றப் பொருள்களினும் சிறந்தது என்று கொள்கிறோம். சிறந்த கதைகள் கால வெள்ளத்தில் சென்று மறையாமல் எதிர்த்து நின்று நிலை பெற வேண்டுமானல், உண்மை பொதிந்திருக்க வேண்டும். ஆதிகவி வால்மீகி போன்றோர் அந்த அழிவற்ற ஒரு பெரும் நிலையில் இருப்பதைக் காண்கிறோம்.

ஆகவே, காலம் கணித்துக் கூற வேண்டிய ஒன்றை, எவ்வளவு அரியதாயினும், அற்பமானதாயினும், சிறந்தது, அல்லாதது என்று கூறத்துணிகிற எண்ணம் எனக்கு இல்லவே இல்லை.

விரல் நகத்தால் தேங்காயைத் தட்டி, முற்றிய காய், இளங்காய் என்று தேறுகிற பரீட்சை அல்ல இது! நாக்கிலே தொட்டுவிட்டு இனிப்பு, கசப்புப் பார்க்கிற அநுபவ ருசியுமல்ல இது! இது வேறு ஒன்று. பல வருஷ காலம் உள்ளத்தில் ஊறித் தோய்ந்து நினைக்கும் போதெல்லாம் இன்பமோ துன்பமோ தருகின்றதா என்று சிந்தித்துப் பார்த்துக் கூற வேண்டிய ஒன்று. அன்று இருந்த மன நிலை, அறிவின் பக்குவம், கருத்துப் பிரச்னைகள் எல்லாம் வேறு. காலப் போக்கில் எல்லாம் முதிர்ந்து வாழ்க்கையையும் அதன் உயர் தத்துவங்களையும் நாம் பார்க்கின்ற கோணமே வேறு. அதற்கேற்ப முதிர்ச்சியும் புது உணர்வும் பெற்று விடுகின்றோம். அன்றிருந்த அபிருசிகளில் இன்று எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டு விடுகின்றன. ஆயினும் இதெல்லாவற்றையும் கடந்து, மனக்குழியிலே அன்று தேங்கிய உணர்ச்சிகளும் உண்மைகளும் சிறிதும் மறையாமல் மங்காமல் நிற்கின்ற நிலையிலிருந்து காண்கின்ற பரீட்சை இது. உடல்,

உள்ளம், சூழ்நிலை எல்லாவற்றையும் பொறுத்து மாறுகின்ற ருசிபேதங்களைக் கடந்தது இது. எனவே அவரவர்களுடைய சம்ஸ்காரங்களுக்கு ஏற்ப கருத்து வேற்றுமை இருக்கலாம். கருத்துப் பரிமாற்றமே வளர்ச்சிக்கு ஊன்றுகோல் போன்றதல்லவா?

சிறு கதையின் லட்சணத்தைப் பற்றியே மாறுபாடாகத் தொனிக்கிற கருத்துக்கள் நிலவுகின்றன. ஒரே உணர்ச்சி அல்லது மையக்கருத்து, அதை ஒட்டிய சிறு நிகழ்ச்சிகள் இவற்றைச் சுற்றியே சிறுகதைகள் அமைய வேண்டும் என்பது ஒரு கருத்து. கதையம்சம் கொண்ட சிறு நிகழ்ச்சியின் அல்லது உணர்ச்சியின் படமே சிறுகதை என்பது வேறு கருத்து. குணசித்திரத்துக்குச் சிறுகதையில் இடம் இல்லை என்பது ஒரு கருத்து. குணசித்திரத்துடன் கலந்த நிகழ்ச்சிகளின் வளர்ச்சியே ஒரு சிறு கதையாக உருப்பெறலாம் என்பது வேறு கருத்து. எதுவாயினும் இப்பொழுதெல்லாம் பத்திரிகைகளில் வெகுவாகவெளியாகிற நாவல் சுருக்கம் போன்றவை சிறு கதைகளல்ல என்ற அளவு வரையில் இந்தக் கருத்துக்களில் ஒருமைப்பாடு இருக்கிறது. ஊன்றிப் பார்த்தால் இந்தக் கருத்துக்களில் மாறுபாடாகத் தொனிப்பது சொற்களே தவிர சிறு கதையின் லட்சண உறுப்புக்கள் அல்ல என்பதே என் முடிவு. எல்லாமே சிறு கதையின் அம்சங்களையே வரையறுக்கின்றன என்றே கருதுகிறேன். இந்த அடிப்படையிலேயே நான் ரசித்த கதைகளைக் கூறுகிறேன்.

தமிழில் ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் தோன்றிய கதைகளில் நான் ரசித்தவற்றைப் பற்றிக் கூறுவதே என் வேலை. இந்த எல்லையை 1936 முதல் இன்றுவரை என்று கோரிக் கொள்கிறேன். அதாவது 17 ஆண்டுகளில் வளர்ந்து நிலவும் கதைகள். ஒன்றிரண்டு சற்று முன்பின்னாக இருக்கலாம்.

இப்போது முதல் முதலாக நான் படித்த சிறு கதை என் ஞாபகத்திற்கு வருகிறது. நாடோடிக் கதைகள், பஞ்சதந்திரக் கதைகள், புராண இதிகாச உபாக்யானங்கள், விக்கிரமாதித்தன்--மதனகாமராஜன் போன்ற நம் நாட்டுக் கட்டுக் கதைகள் இவற்றையெல்லாம் படித்தும் கேட்டும் இருந்த என் உள்ளத்தில் நான் படித்த அந்த முதல் மறுமலர்ச்சிக் கதை ஸ்ரீமான் வ. வே. சு. ஐயர் தமிழில் தந்திருந்த, 'குளத்தங்கரை அரசமரம்' என்ற கதையே யாகும். அந்தக் கதை நமக்கெல்லாம் இப்போது தெரிந்த கதையே ஆகும். அதில் ஓர் அரசமரம் ஒரு பாத்திரமாக இருந்து பேசுகிறது. விருப்பு வெறுப்பற்ற இதயநீதிகூற அதை விட வேறு பாத்திரம் இருக்க முடியும் என்றே நான் கருதவில்லை. அந்தக் கதை, அதன் பாணி, பாஷையிலுள்ள மந்திரக் கவர்ச்சி எல்லாம் என் மனத்தில் ஒரு மலர்ச்சியை உண்டாக்கின என்றே கூறுவேன். அந்தக் கதையை பல ஆண்டுகள் கழித்து இன்று படிக்கிறபோது என் மனத்தில் ஓர் இன்ப விளைவையே ஏற்படுத்துகிறது என்பன மட்டும் குறிப்பிட்டு மேலே செல்கிறேன்.

ரசித்தவற்றை யெல்லாம் சொல்லும்போது எந்த வரிசைப் படியும் நான்வகுத்துச் சொல்ல வில்லை என்பதையும் குறிப்பிட்டு விடுகிறேன். தமிழில் வந்த அத்தனை கதைகளையும் படித்து விட்டேன் என்ற பாத்தியத் தோடும் சொல்லவில்லை. பெரும் பாலானவற்றைப் படித்திருக்கி றேன் என்று மட்டும் சொல்ல லாம். நான் அவ்வப்போது நல்ல கதை என்று பிறர் படிப்பதற்கு எளிதாக ஒரு குறியிட்டு வைப்ப துண்டு. சேர்த்தும் வைத்ததுண்டு. ஆனால் அவையெல்லாம் இன்று எனக்குக் கிடைக்கவில்லை. கிடைத்திருந்தால் சிறப்பான அம்சங்களை நான் எந்தக் கோணத்திலிருந்து ரசித்தேன், ரசிக்கிறேன் என்று விரிவாகச் சொல்ல முடியும். ஒரு விதத்தில் அவை கிடைக்காததுபற்றிக் கவலையுற வில்லை. என் மனப் பரிசோதனையில் தேறி நிற்கும் கதைகளையே இங்கு குறிப்பிடுகி றேன். அந்த வகையில் நான் ரசித்ததற்கு இதுவே ஒரு சான்று தானே ?

கல்கி எழுதிய, 'கேதாரியின் தாயார்' என்ற கதை என் மனத்தைக் கவர்ந்த கதைகளில் ஒன்று. சிறுகதை இலக்கணத் துக்குப் புறம்பான கதை என்று நான் விமரிசகர் ஒருவர் கூறக் கேட்டிருக்கிறேன். ஆனால் அது பெருங்கதையோ குறுநாவலோ அளவில் சிறியகதை என்றுவது ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஓர் இளம்பெண், பச்சைக் கிளி போன்ற அழகு வந்த பெண் கடைசியில் மொட்டையடித்து முக்காடிடப்பட்ட பரிதாபக் காட்சியில் காணப்படுகிறாள் அந்தக் கதையில். அது பிரசாரக் கதையாக இருக்கலாம். ஆனால் கலைத் திறத்தோடு உருவாக்கப் பட்டிருப்பதைக் காண்கிறேன். ஒரே விஷயத்தையே, உணர்ச்சி யையே மனத்தில் பதிய வைக்கும் அந்தக் கதை அப்பட்ட மான சிறுகதைதான் என்பது என் அபிப்பிராயம். அதில் வரும் கேதாரியின் தாயார், ஆசிரியரின் குணசித்திர வேலைப் பாடுகளினால், இன்னும் என் மனத்திரையில் முழு உருவத் துடன், திடசித்தத்துடன் கம்பீர மாக நிற்கிறாள். அந்தக்கதை அசல் தமிழ்க்கதை என்பதினால் ஒன்றுக்கு மேற்பட்ட தடவை படித்துள்ளேன். அவசியமோ இல்லையோ தேவைக்கும் அதிக மான சொற்களைக் கொணர்ந் தேனும் நடையில் ஒரு கவர்ச்சி யைத் தேடித் தருபவர் கல்கி.

அதேபோலே, எஸ். வி. வி. கோயில் யானையும் என் மனதில் பதிந்த ஒரு கதை. அது ஒரு சிறுகதையா, சித்திரமா (Sketch) என்று இலக்கண டேப்பை வைத்துக்கொண்டு நான் சிரமப் படவில்லை. எச். இ. பேட்ஸின் கருத்துப்படி அதைச் சிறுகதை யாகவே நான் கொள்கிறேன். அந்தக் கதையில் வரும் யானை ஒரு சமயம் தென்கலை நாமமும் இன்னொரு சமயம் வடகலை நாமமும் மாறி மாறிப் போட்டுக் கொண்டு, தெய்வமே என்று நிற்கும் காட்சி என் கண்ணில் நிற்கிறது. இவர்களுடைய சண்டை முடிவதற்குள் யானை சாகவில்லை; அவர்களுடைய தெய்வபக்தியே செத்துவிடுகிறது.

விசிஷ்டாத்வைதம் கோர்ட்டுக்குச் சரணுகதி ஆகிற நிலையில்தான் வந்து நிற்கிறது. அது ஒரு ரஸமான சிறுகதைதான்; சந்தேகமேயில்லை. இதயத்தோடு ஒட்டிக்கொள்கிற ஹாஸ்ய நடை. 'தீபன்' எழுதிய ஒருசிறு துணுக்கு —சின்னஞ்சிறு கதை—நான் ரஸித்தவற்றில் ஒன்று. 'பாப்பாவும் மரப்பாச்சியும்' என்பது அதன் பெயர். வைத்தியர் வந்து ஜுரமாகப் படுத்திருந்த குழந்தைக்கு மட்டுமே மருந்து கொடுத்துப் போகிறார். ஆனல் பாப்பாவின் மரப்பாச்சிக்கும் ஜுரம் வந்திருப்பதையும் அதற்குக் கை பார்த்து மருந்து கொடுக்கவேண்டும் என்பதையும் அவர் தெரிந்து கொள்ளாதது இன்னும் எனக்கு ஞாபகத்திலிருந்து மறையவில்லை. குழந்தையின் உள்ளப் பாங்கை இறைவனுக்கு அடுத்தபடி உணர்ந்தவர் யார்?

கு. ப். ராஜகோபாலனுடைய 'திரைக்குப் பின்னே' யாமினியும் பில்ஹணனும் இன்றல்ல, என்றென்றும் உட்கார்ந்து, கவிநிறைந்த காவிய நடையில் உரையாடுவார்கள்; தந்தையின் அறியாமையைப் போன்ற அந்தத் திரையை மனம் இரண்டறக் கலந்ததும் கிழித்தெறிவார்கள்; கூடி மகிழ்ந்து கொண்டேயிருக்கிறார்கள். நிலவு உள்ள வரையில் அவர்களுடைய காதலுக்குச் சாட்சி கூறிக் கொண்டுதான் இருக்கும். சிறுகதைக்கு ஜோடனையும் காவியச் சுவையும் கூட்டி ஒரு சிறு சிற்ப மாளிகையாகச் செய்திருக்கிறார், கு. ப. ரா. திருவாங்கூர் யானைத் தந்தத்தில் தாஜ்மஹாலைச் செதுக்கியது போல, கு. ப. ரா. வின் நடையே ரத்ன சுருக்கமான நடை. ஒரே சொல்லை மயக்கத் தேனுக்கிவிடுவார். 'கவலை மாடு' என்ற ந. பிச்சமூர்த்தியின் சிறுகதை மனதிலிருந்து அழியாத ஒரு கிராமச் சித்திரம். மருமகனுடைய சத்துமா சேர்வைகாரருக்கு மட்டும் இனிக்கவில்லை. நமக்கு இன்று நினைத்தாலும் இனிக்கிறது. சேர்வைகாரர் உட்கார்ந்திருக்கும் திண்ணைக்கு எதிரே நின்று பார்க்கிற நமக்கு, மாவின் ருசியில் கோபத்தைக் கரையும்படி போகவிட்ட சேர்வைகாரர்தான் அந்த வீட்டின் அதிகாரி என்பது ஞாபகத்தில் இருந்துகொண்டேயிருக்கிறது. கதையின் ஒரு வரியில், ஒரு சொல்லில் உள்ளத்தையே வாரிக்கொண்டு போகும் சொல்லாட்சி படைத்த நடை.

'புதுமைப் பித்தன்' உடல் ஒடுக்கமாகி விட்டது என்னமோ உண்மைதான். 'ஸித்தி' என்ற சிறுகதையில் சாந்தலிங்கச்சாமி நாலுமணி நேரத்துக்கு முன்னே ஒடுக்கமானதும் அதைப்போலவே உண்மைதான். ஆனல் சண்பகராமன்பிள்ளை—சாந்தலிங்க சாமியாகச் சிதம்பரத்திலே இருந்தவர்—உயிரோடு, காவியின் புழுக்கத்தோடும் புளங்காகிதத்தோடும் நம்மோடு பஸ்ஸில் பிரயாணம் செய்துக்கொண்டுதான் இருக்கிறார். மனிதனுடைய ஞாபகசக்திக்கு ரசிக்கிற தெம்பு இருக்கிற வரைக்கும் சண்பகராமன்பிள்ளை புதுமைப் பித்தனின் புகழோடு பிரயாணம் செய்து கொண்டுதான் இருப்பார். மின்னலின் தெளிவும் சவுக்குச் சொடுக்கும் இடக்கான நடை.

கற்பனை வளமும், நகாசும் சங்கீதத்தில் எந்தச் சமயத்திலும் மேல் ஷட்ஜமம் வரையில் அநாயாசமாகப் போய் எட்டிப் பிடிக்கிறது போன்ற நிச்சயமான துணிவும் நிறைந்த கதைகளில் ந. சிதம்பரசுப்பிரமணியத்தின் "சசாங்கனின் ஆவி" என்ற சிறுகதையும் ஒன்று என்றே நான் வியக்கிறேன். கட்டுக் கதைகளிலும் பழங்காலக் கதைகளிலும் காணுத நயமும் இல்லாத ஒருமைத் தன்மையும் சொற் செட்டும் வேகமும் இந்தச் சசாங்கனின் ஆவியில் பரிமளித்து நிற்பதை நான் நினைக்கும்தோறும் உணருகிறேன். ரியலிஸம், ஐடியலிஸம் போன்ற இனங்களையெல்லாம் கண்டு உதட்டின் கோணத்துக்குள்ளேயே சிரித்து விட்டு, 'கலைக்காகவே கலை' என்று அந்தச் சிரிப்பை விழுங்குகிற உள்ளச் சிரிப்பைத்தான் அந்த ஆவி முழக்குவதாக எனக்குத் தோன்றுகிறது. படிப்படியாகக் கதை எழுந்து விஸ்தாரமாய்ப் பரவி வளைத்துக் கொள்ளச் செய்கிற திறமைக்கு இந்தக் கதை ஓர் எடுத்துக்காட்டு.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒன்றை குறிப்பிட வேண்டும் என்று எனக்குப் படுகிறது. 'நான் ரஸித்த சிறுகதைகள்' என்ற தலைப்பில் ஆசிரியர்களுடைய ஒவ்வொரு கதையாக மட்டுமே குறிப்பிட்டுச் செல்வதை நான் உணருகிறேன். அந்தத் தலைப்புச் சரியாகப் பார்த்தால் இது ஓரளவு பொருத்தமற்றதுதான். பற்பல திறனையும் பண்புகளையும் காட்டும் இதே ஆசிரியர்களுடைய வேறு சில கதைகளையும் குறிப்பிட வேண்டுமென்பதுதான் என் ஆசை. ஆனால் சாத்தியமல்ல என்றே மேலே செல்கிறேன். இதிலிருந்து குறிப்பிடப் படுகின்ற கதை ஒன்றைத்தான் நான் கருத்தில் வைத்துக் கொண்டிருப்பதாக யாரும் எண்ணமாட்டார்கள் என்றே நம்புகிறேன்.

பி. எஸ். ராமையாவின் 'பணம் பிழைத்தது' என்ற சிறு கதை நான் ரசித்த கதைகளில் ஒன்று. ஆசிரியரின் கைத்திறம் என்னைப் பிரமிக்க வைக்கிறது. எமனையே ஏமாற்றப் பார்க்கிற ஒருவரைச் செக் எழுதி வைக்கும்படி செய்து, மூட நம்பிக்கைகளைப் பகடைகளாக வைத்து அவர் இஷ்டப்படி இப்படியும் அப்படியுமாகப் புரட்டுகிருர். உண்மைக்கும் மூட நம்பிக்கைக்கும் இடையே அகஸ்மாத்தாக நிகழுகிற சம்பவங்கள் எவ்விதம் முடி போடப்படுகின்றன என்பதை ரஸமாகச் சித்திரிக்கிறது அந்தக்கதை. விமான வேகமும் தவருது வந்து பாயும் குறியும் கொண்ட கதை.

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னே நான் படித்த இன்னும் ரஸமான சில கதைகளின் பெயர்கள் எனக்கு மறக்கவில்லை. கதையின் மற்ற அம்சங்கள் மட்டும் தெளிவாக ஞாபகம் இல்லை. அதனால் விவரமாகக் கதைகளைப் பற்றிச் சொல்ல முடியவில்லை. ஆயினும் ரஸமான கதை என்ற அபிப்பிராயத்தில் மாறுதல் எதுவும் கிடையாது. அத்தகைய கதைகளில் 'ராமராயன் கோவில்' என்ற சிறு கதையும் ஒன்று. இந்த எழுதியவர் த. நா. குமாரசுவாமி.

விஜயநகர சாம்ராஜ்யத்தின் அஸ்தமனத்துக்கு ஆதாரமாகப் பின்னிய சரித்திரக் கதை இது. முரட்டு ராமராயனையும் அதில் வரும் காதலர் ஜோடியையும் என்னால் இன்னமும் மறக்கமுடிய வில்லை. அவருடைய அபார வர்ணனையும் சுவாரஸ்யத்தில் ஆழ்த்தும் கதையின் பிளாட்டும் என்னைக் பிரமிக்க வைத்திருக் கின்றன. இப்படி ஒரு கதையை இவரால் எவ்விதம் கற்பனை செய்ய முடிந்தது என்று மலைப் புத் தட்டியதுண்டு எனக்கு.

அதேபோல 'எங்கிருந்தோ வந்தான்' என்ற கதையும் எனக்கு விவரமாக ஞாபகத்தில் இல்லை. அதை எழுதியவர் யார் என்ற ஞாபகம் மட்டும் நன்றாக இருக்கிறது. **Mysticism** நிறைந்த கதை அது. மர்மத்தைக் குழம் பாக்கிச் சமைத்த கதை. எங்கி ருந்தோ ஒருவன் வந்து, பிறர் கவனத்தைப் பெற்று, ஒரு பெண் ணின் காதலைக் கவர்ந்து விட்டு மீண்டும் எங்கோ - மாயத்திரை மறைக்கும் மர்மவானத்தி னுள்ளே போய் விடுகிறான்! அசுர லோகத்தைக் கொண்டு போய்க் காட்டி, பிறகு இழுத்து வந்து போட்ட உணர்ச்சியைத் தருகின்ற நடையை என்னால் மறக்க முடியவில்லை.

தி. ஜ. ர. வின் 'நொண்டிக்கிளி' ரஸபுஞ்சமான சிறுகதை. நொண்டிக்கிளி ஒன்று வந்தது; அதை நோஞ்சல் பூனை ஒன்று கண்டது என்று அதில் முதல் இரண்டிகள் கொண்ட பாட்டு வருகிறது. கிளி போன்றிருந்த அந்தப் பெண்ணுக்குக் கால் தான் கொஞ்சம் நொண்டி. ஆனால் அவள் உள்ளம் ஊனமல்ல. ஆனால் பூனை போன்ற பைய னுடைய செயலும் சரி, உள்ள மும் சரி எல்லாமே நோஞ்சல்! மணியில் நூல் கோத்தது போல் சரளமும் தங்கஉமிசத்தில் வைரம் பதித்தது போன்ற கட் டிட அமைப்பும் கொண்ட கதை; நடை.

நொண்டி என்று சொன்ன தும் சி. சு. செல்லப்பாவின் 'நொண்டிக்குழந்தை' என்னைச் சேர்த்துக் கொள்ளவில்லையே என்று கூவியழைப்பது போல் தோன்றுகிறது எனக்கு. குழந்தை கள் எல்லாம் தெருவில் விளை யாட ஆறு வயது நிரம்பிய ஞானம் திண்ணையிலேயே உட் கார்ந்து விளையாட்டில் லயித்தி ருக்கும் காட்சி மறக்கக் கூடிய காட்சியல்ல. ஞானத்தினால் சிருஷ்டி கோரத்தின் கடுமையைப் பூரணமாக உணர முடியவில்லை. ஆனால் இதர குழந்தைகள் அறிந்துவித்தியாசம் பாராட்டின. அவனுக்காக மனமிரங்கிய இளம் உள்ளம் ஒன்று உண்டு. அந்த இளம் உள்ளத்தோடு ஒன்றி நிற் கவே என் மனம் இன்றும் ஆசைப்படுகிறது. அத்தனை அழ கான கதை! பாத்திரங்களுக்குத் தகுந்த பாஷை ஒதுக்குகிறார் செல்லப்பா!

அந்த நொண்டிக் குழந்தைக் குப் பிறகு 'பச்சைக் கனவு' கண்ட அந்த ஊமைப் பெண்ணைப் பற்றிய சிறுகதை ஞாபகத்துக்கு வருகிறது. ஊமைப் பெண் ணுக்கு அழகைக் கொடுத்தானே அந்தக் கடவுள், அவள் வாழ ஒரு

வகையைச் செய்து தந்திருக்கலாகாதா? அவள் ஒருவனுக்குக் காதலியாகி, யாருக்கு மனைவியாக ஆனுள் என்பதைச் சொல்ல முடியாதவளாகி, கர்ப்பமாகி, கடைசியில் ஊமைக் கனவாகவே முடிந்து, பிணம் குளத்தில்மிதந்து கிடக்கிற காட்சியை, பச்சைசக் காயமாக மனத்தில் பதிய வைத்து விடுகிருர் லா. ச. ராமாமிருதம். சுற்றிச் சுற்றி எங்கோ இழுத்துச் சென்று, கடைசியில் வழியைப் பார்க்கிற நடைதான் ராமாமிருதத்தின் பாணி.

கி. சந்திரசேகரனின் வெள்ளையன் தூய கதைகளில் ஒன்று என்பது என் அபிப்பிராயம். டிப்தீரியாவில் வெள்ளையனைப்பறி கொடுத்த தோட்டக்காரனின் போக்கில் ஒரு பெருந்தன்மையான உயர்ந்த போக்கும் நோக்கும் இருப்பதை எந்த ரஸிக உள்ளமும் காணுமலிருக்க முடியாது. எளியவனிடத்தும் உயர்ந்த மனப் பண்பைக் காணுகின்ற, அதைக் கலை உள்ளத்தோடு வித்தியாசப்படுத்த திறமை மிகுந்து நிற்கிறது அந்தக் கதையில் சமதரையில் சொகுஸாக ஓடுகின்ற வண்டியில் உட்கார்ந்து சுற்றிலும் எதிரே சுற்றும் மரங்களைப் பார்ப்பது போன்ற நடையில் அமைந்திருக்கிறது கதை.

கதையே யில்லாத கதையை ரஸமாகச் செய்து, சம்பவங்களுக்கோ, நிகழ்ச்சிகளுக்கோ முக்கியத்துவம் எதுவும் கொடுக்காமல் உணர்ச்சிகளையே துருவித் துருவிக் கழற்றி வைக்கும் க. நா. சு. வின் 'இரண்டாம் கல்யாணம்' எனக்கு மிகவும் பிடித்த சிறு கதைகளில் ஒன்று. ஸ்மசான வைராக்கியம் உள்ள ஒருவர் தாயில்லாத நாலு குழந்தைகளுக்குத் தந்தையான பிறகு, அந்தக் குழந்தைகளின் ஆறுதலுக்காக என்று இரண்டாம் கல்யாணம் பண்ணிக் கொண்டாரே, அவருக்கு அந்த ஆறுதல் கிடைத்ததா என்று க. நா. சு. வைக் கேட்க வேண்டுமென்று எனக்கு ஆசைதான்! பகலிலும் இருண்ட ஜவுளிக் கடையினுள் விளக்கு ஏற்றி, அந்த வெளிச்சத்தில் பொருள்களைப் பார்க்கின்ற வர்ண பேதமான நடையில் வேண்டுமென்றே எழுதுகிறவர் க. நா. சு.

நிச்சயமாக, சொல்லுகிறசொல்லின் தொனி அறிந்து இடம் அறிந்து, பலம் அறிந்து பிரயோகிக்கிற தி. ஜானகிராமனின் 'ரத்தப்பூ' ஒரு சிறுகதை ஓவியம் என்று படுகிறது எனக்கு. குண சித்திரத்தை வெகு ஒயிலாக சிறு கதையில் உணர்ச்சிகளோடு வைத்து இழைத்து நிகழ்ச்சிகளுக்கு நிஜவர்ணமே பூசுகிற வேலைப்பாடு கொண்டது அந்தக் கதை.

பதினெட்டு வயது கூட நிரம்பாத அந்தப் பெண், கணவன் இறந்து விட்டான் என்ற கொடுமையைக் கூட உணராத அறியாத வயது படைத்தவள் என்பதைக் கதையில் வரும் கிழவர் சொல்லும் போது பாட்டி நம்ப மறுக்கலாம்; ஆனுல் என்னுல் மறுக்கத்தான் முடியவில்லை. அந்த அழகைக் கண்டு கடவுளுக்கே பொறுக்கத்தானில்லையோ என்று எனக்கு சந்

தேகந்தான்! மந்திரக் குளிகையைப்போல ஒரே மந்திரச் சொல்லே ஒரே தடவை காட்டி மயக்க வைத்து விடுகிற சொல் நயமும், விலகி இருந்து விரலை இழுத்துப் பாவைகளை ஆட வைக்கிற சூத்திரக் கயிறும் கொண்ட நடை.

அ. கி. ஜயராமனின் 'கண்ணம்மா' அக்கரை போன மச்சான் வருமளவும் கல்யாணத்திற்கு காத்திருந்தது நன்றாக நினைவில் இருக்கிறது. கதையை விட்ட சோடு மாருமல் நேராகக் கொண்டு போய் நிறுத்துகிறது அவரது எளிய நடை.

கி. ரா. வின் 'சொத்துக்குடையவன்' கொண்ட கணவனல்ல; ஐந்து வயதுக் குஞ்சுவுக்குச் சொந்தத் தகப்பன்தான். ஆனால் தாயில்லாப் பெண் என்று பெண் பாசத்தோடு வட்டி போட்டு பேத்தியை வளர்த்த தாத்தா பலராமையருக்கு அவன் தான் சொத்துக் குடையவன். அந்தக் குழந்தையை அழைத்துப் போக வருகிறேன் என்று செய்தி கிடைத்ததிலிருந்து அவர் படுகிற தவிப்பு நாமே தவிப்பது போல அல்லவா இருக்கிறது? மெல்லொலியுடன் ஓடும் சிறு ஓடையின் வேகமுள்ள நடை.

நான் மறந்துபோன கதையும் சங்கமும் மறக்காத தலைப்புகளும் கொண்ட வரிசையில் குகப்ரியையின் 'ரஸியா' வும், கி. சரஸ்வதியம்மாளின் 'ஜரிகைச் சேலை' யும் புரசு பாலகிருஷ்ணனின் 'பொன் விளை'யலும் சாவித்திரியம்மாளின் 'பழைய ஞாபகங்களும்' வருகின்றன. அருமையான கதைகள் என நான் படித்து ரஸித்த இந்தக் கதைகள் ரஸமான கதைகள் தான் என்பது வரையில் நிச்சயமாகக் கூறுவேன். ரூ வியின் 'கண்டதும் காதல்,' எம். வி. வெங்கடராமனின் 'வேதனை,' வல்லிக் கண்ணனின் 'நல்லமுத்து' இவற்றையும் அந்த வரிசையிலே சேர்க்க வேண்டியிருக்கிறது.

ஆர். ஷண்முக சுந்தரத்தின் 'கல்லினுள் தேரை' கதை அடங்கிய சிறுகதை. காட்சியைக் காட்டி உடனே மாற்றி வேறு ஒரு காட்சியைக் கொண்டு நிறுத்துகிற திறனை அதில் கண்டிருக்கிறேன்.

கி. வா. ஜ. வின் கலைச் செல்வி ஒரு ரஸமான சிறுகதையே. ஒரு கோயில் சிற்பத்தைப் பார்த்ததும் அந்தச் சிற்பத்தின் அழகு தூண்டி, விரிந்த கற்பனையாகக் கலைச் செல்வி உருவாகியிருக்கிறது. சோழ அரசனின் வளமைகளும் அவன் காலத்துச் சூழ்நிலையும் நன்றாக வந்திருக்கின்றன அந்தக் கதையில். குழந்தைகளுக்கும் புரிகின்ற சரளமான நடை.

குமுதினியின் கதை ஒன்று விவரம் ஞாபகத்தில் இருக்கிறது; தலைப்பு மறந்து விட்டது. பெற்றோர்கள் தம் குழந்தைகளைக் கேட்காமல் கல்யாணம் நிச்சயித்து விடுகிறார்கள். பெண்ணும் பிள்ளையும் இந்தக் கல்யாணத்துக்கு இணங்கக் கூடாது; மறுத்து விட வேண்டும் என்று தீர்மானிப்பதற்காக கடற்கரையில் ஏற்பாடு செய்து கொண்டு சந்திக்கிருர்கள். ஆனால் ஒருவரை ஒருவர் பார்த்ததும், பேசி

யதும் கல்யாணத்தை நிற்காமல் நடத்தி விட்டால் தேவலே போலாகி விடுகிறது. படிக்கச் சுவையாக இருந்தது கதை.

இது வரையில் சொன்னவற்றைக் கொஞ்சம் விரிவாகவே சொல்லிவிட்டேன். ஆயினும் இன்னும் சில கதைகளைப் பற்றிச் சொல்லியே தீரவேண்டும். கா. ஸ்ரீ. ஸ்ரீ. யின் 'மழையிடையே மின்னல்' ஸேஷுவின் 'சண்டையும் சமாதானமும்' ரா. ஸ்ரீ. தேசிகனின் 'மழை இருட்டு,' கௌரியம்மாளின் 'தீர்மானம்' அகிலனின் 'காசுமரம்' தேவனின் (கதை பெயர் மறந்துவிட்டது) ஜி. எஸ். மணியின் 'அலேயும் அமைதியும்' பி. வி. ஆர். இன் 'தழும்பு' ஸ்ரீரங்கம் ராமகிருஷ்ணனின் (கதைப் பெயர் ஞாபகமில்லே) சோமுவின் 'முதல் குழந்தை' ரா. ஆறுமுகத்தின் 'களத்து மேடு,' இவையெல்லாவற்றையும் குறிப்பாகச் சொல்வது என் கடமை என்றே எண்ணுகிறேன். இன்னும் ஒரு சிலரை நான் விட்டிருக்கக்கூடும்.

இங்கே என் வேலே கட்டிய வீட்டுக்குப் பழுது சொல்வதோ மதிப்புப் போடுவதோ அல்ல. நான் படித்தவற்றில் எனக்கு ரஸமாக இருந்தவற்றை யெல்லாம் வெறும் அட்டவணையாகத் தராமல் சில குறிப்புகளுடன் உங்களுடைய கவனத்துக்கு கொண்டு வந்தேன். நான் குறிப்பிட்ட எழுத்தாளர்களுடைய கதைகளேயே படிக்காதவர்கள் இங்கே இருந்தால் என்னுடைய குறிப்புகள் அவர்களுக்கு உதவியாக இருக்கும். நான் குறிப்பிடாத வேறுசில கதைகளேப் பிறர் படித்து ரஸித்திருக்கலாம். வேறு கருத்தும் கொண்டிருக்கலாம். அவர்களுக்கும் இத்தகைய ஓர் அபிப்பிராயம் தெரிய வேண்டியதுதானே ?

நான் முதலில் ஒன்றை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். உலகத்துச் சிறுகதை வால்யூம்களேப் படிக்கும்போதெல்லாம் என் எண்ணம் உறுதிப் பட்டுக் கொண்டே வந்திருக்கிறது. முற்போக்கு எழுத்தாளர்களோ பிற்போக்கு எழுத்தாளர்களோ அதைப் பற்றிக் கவலேயில்லே; நற்போக்கு எழுத்தாளர்கள் நம்மிடையே பலர் உண்டு என்பதே என் திடமான அபிப்பிராயம். உலகத்துச் சிறந்த சிறுகதை வரிசைகளிலே முதல் வரிசையில்உட்கார யோக்யதை- தகுதி உள்ள எழுத்தாளர்கள் தமிழில் இருக்கிறார்கள் என்பதே நான் வற்புறுத்திச் சொல்ல விரும்பும் விஷயம். நான் இங்கு குறிப்பிட்ட சில கதைகள் எந்த மேல் நாட்டு, கீழ் நாட்டுக்கதைகளுக்கும் பின் வாங்கியதல்ல என்பதை நீங்களே அறிவீர்கள் என்று நம்புகிறேன். நான் சொல்லாமல் விட்ட இதே ஆசிரியர்களுடைய வேறு சில கதைகளும் இருக்கின்றன. வளர்ந்து வரும் தமிழ் இலக்கியத்துக்கு ஒரு சிறுகதை மரபு தோன்றிவிட்டது என்பதே என் கருத்து.

கடைசியாகப் புதிய எழுத்தாளர்களில் சிலரை நான் இங்கே குறிப்பிடவில்லே. ஏனெனில் 1935 முதல் 45 வரை, என் 50

வரை என்றே வைத்துக் கொண்டாலும் சரி, இந்தக் காலத்தில் எழுந்து தோன்றிய சிறு கதைகளுக்கு ஈடாக இதற்குப் பிறகு தோன்றவில்லை என்ற காரணத்திலல் தான் குறிப்பிடவில்லை. தோன்றுததுமட்டுமல்ல; வர வர, தரமும் குறைந்து கொண்டே வந்து விட்டது. ஒரு சிலர் முளைத்து முனைப்பாக வரலாம். அதற்குள் அந்த சூசகத்தைச் செய்ய நான் தயாராக இல்லை. தரமும் சரக்கும் குறைந்து கொண்டே வருவதற்குக் காரணங்களை யாரைச் சொன்னாலும் பொதுமக்களைச் சொல்வது ஒரு பாஷனாகி விட்டது இப்போது. நிச்சயம் நல்ல கதைகளை - அவை பத்திரிகைகளில் வந்தாலும் • சரி; தொகுப்பாக வந்தாலும் சரி, வாங்கிப் படிக்கத் தயாராகவே இருக்கிறார்கள். போட்டுப் பிரசுரிக்க ஆளைத்தான் காணோம். 'நல்ல கதைகள் எழுதியிருக்கிறோம்; தமிழுக்குச்செய்த சேவை இதுவே அதிகம்' என்று நல்ல எழுத்தாளர்கள் எல்லாம் கதைகளே எழுதாமல் இருந்தால், அவர்களை ஜனங்கள் மறக்காமல் இருந்து அவர்களுடைய புத்தகங்களை வாங்குவார்கள் என்பது என்ன நிச்சயம் என்றே பிரசுரகர்த்தர்கள் பயப்படுகிறார்கள் போலும்! அவர்களுடைய பயத்துக்கு இன்னொரு காரணமும் உண்டு. நல்ல கதைகளை இப்போது வருகிறவை மறக்கடித்துக் கொண்டு வருகின்றனவே!

# பொருந்தா உவமை

"தமிழழகன்"

**அவள் :** ஆசைக்குச் செவ்வானம் ஆகும்என் கன்னங்கள்
அத்தானே, வந்துதான் பாருங்களேன் !
காசுக்கு வாங்கக் கடைக்கு வராததோர்
கட்டிச் செடிரோஜா மொட்டல்லவோ ?

**அவன் :** வானவிற் கோல வரிவரிக் கன்னங்கள்
வண்ணத் தமிழச்சி, கொஞ்சம் நீ கேள் :
ஈனரோ ஜாமொட்டே இல்லைய(து) ; ஏனெனில்
இடர்முட்கள் அங்கே படர்வதில்லை !

**அவள் :** விரித்து விரித்து விநோதம் செய்யும் செவ்
விதழ்களை அத்தானே, பாருங்களேன் !
சிரித்தமுத் தங்கள் சிறிதே தொயவும்
செம்மா துளைக்கிற்று தெரியுதன்றோ ?

**அவன் :** முத்தத் துளிபடா முத்துக் கிளிஞ்சல்நின்
மோகனச் செவ்விதழ் - கேளாய் பெண்ணே :
வித்துமா துளையின் வெடிப்புக் கிணைசொல்லல்
வேடிக்கை ஏனெனில் துவர்ப்பதில்லை !

**அவள் :** அந்தி மலராமுன் ஆசை மலருமெய்
அத்தானே, என்முகம் பாருங்களேன் !
வந்த ஒளிநிலா வட்டம் முகத்தினும்
வந்து படருதல் விந்தையன்றோ !

**அவன் :** செந்தா மரைப்பூவாய்ச் சிரித்த முகம்தான்—
சித்திரப் பாவையே, சற்றே நீகேள் :
வந்தாடும் வெண்ணிலா வட்டமன்(று) ;
மாசொன்றும் நின்முகம் பூசவில்லை.! [ஏனெனில்

**அவள் :** காற்றோடு காற்றாய்க் கலந்தே அசையும்
கரங்களையும் அத்தானே, பாருங்களேன் !
போற்றப் புதுமலர் பொறுக்கி முடித்ததோர்
பூச்செண் டெனஅவை ஆச்சுதன்றோ ?

**அவன் :** நளினக் கடலின் நெளியலைகள் நின்
நடனக் கரங்களோ - நங்காய் நீ கேள் :
துளியும்பூச் செண்டெனச் சொல்லாதே ; ஏனெனில்
சோர்ந்தவை வாடித் துவள்வதில்லை !

**அவள் :** மேற் பாரம் தாங்காமல் மெள்ளவிழும் இடை
மீதேனும் அத்தான், கண் பாருங்களேன் !
நூல்பாய் உடுக்கென நோக்க எழில் இடை
நொடிக்கொரு மின்னல் அடிக்குதன்றோ !

**அவன் :** மேகலை துவண்டு மெள்ள விழும் இடை -
மீட்டாத வீணையே, சொல்லக் கேளாய் :
சோகமின் னற்கிணை சொல்லாதே ; ஏனெனில்
சூழும் நெருப்பிடி அங்கே இல்லை !

# மதுபானம்

முந்திரிப் பழத்தில் சாறெடுத்து - அதை
முழுக்க முழுக்கப் புளிக்கவைத்து
இந்திர பானம் அருந்திடுவோம்;—வெறி
ஏறிஇம் மண்ணை மறந்திடுவோம் !

நிலா வொடு தென்றல் ரசம்பிழிந்தே—இருவர்
நெஞ்சிலும் பிறை நினைவழிந்தே
பலாச்சுளைக் காவ்யம் பருகிடுவோம்;—வானப்
பரப்பிடை ஏறித் திரிந்திடுவோம் !

இதழோ டிதழ்கள் இணையவிட்டே—கைகள்
இறுக உடலைப் பிணையவிட்டே
அதர பானமே அருந்திடுவோம்;—அப்பால்
அந்தர ஊஞ்சலில் ஆடிடுவோம் !

# விலைமகள்

கண்ணைச் சிமிட்டிடும் சாகசத்தைத்—தாரா
கணங்களிடம் நேரில் கற்றறிந்தேன்;—எனை

நண்ணுவோர் செல்வத்தை நன்குறிஞ்சும்—தொழில்
நாற்றஅட் டையிடம் ஏற்றுக்கொண்டேன்!-நொடிக்கொரு

வண்ணம் காட்டும் பச்சை ஓந்தியிடம்—பலபல
வாறு நடிக்கவும் ஆற்றல் பெற்றேன் !—அவர்கள்

எண்ணம் நாள் நீண்டா (து) ஏமாற்றிடவோ—கடல்தொடா
எதிர்அடி வானம் தான் கூறியதே !

# சூரியகாந்தி

மாலை வெயில்முகம் பூசினேன்;—அவன்
மாணிக்கக் குங்குமப் பொட்டிட்டான்!

கோலமை கண்ணுக்கு வேண்டினேன்;—இருள்
குழைத்ததை என்னிடம் நீட்டினன்!

சேலை, குளிர் மூடக் கேட்டேன் யான்;—உடனே
ஜிகினாப்பூப் போட்டவான் காட்டினன்!—'சரி

காலை வருகிறேன்' என்றுதான்—சென்றான்;
காணேன்! ஏமாற்றினன் சூரியனே!

# இயற்கையின் கானம்

தவழும் கடலலைகள் - எனக்குத்
தாளங்க ளாகுமடா!
பவள ரவிநிலவு - அதிலே
படருமுத் தாய்ப்படா!

தென்றலே என் சுருதி - விண்ணில்
'திடீர்'இடி யேமுரசாம்!
குன்றின் குயில் இசையே - எனது
குரல் ரவை ஜாதியடா!

அருவிச் சல சலப்பே - பாட்டின்
அரிய சுரங்களடா!
சிறுவிண் மீன்சுடர்கள் - பாடலில்
செறிந்துள வார்த்தைகளாம்!

பாடலிலே உணர்ச்சி - அதோ
பளபளக்கும் வானவில்!
ஆடலும் பாடலும் நான் - காலத்
தப்பாலும் செய்கின்றேன்.

# பெண்ணலை

" மஹி "

மேலைத் திசையில் கடற்கரையில்—அவள்
நீலப்புடவை யுடுத்து நின்ருள்
மாலைக் கதிரவன் பொன்னொளியில் இளம்
மேனி பசும் பொன்னுய் ஆகியதே.

வாலைக் குமரியின் நெஞ்செனவே—உயர்
வானத்தை முட்டு மலைகளிலே
சேலைவிசிறி மறைப்பதுபோல் - நுரை
சேர்த்து மறைக்க முயன்றனளே

காலைக் கழுவினள் பத்தினிபோல் - எந்தன்
கண்ணைக் கவர்ந்தனள் காதலிபோல்
நீலக்குமரியவள் நடனம் - என்னை
நீங்க மறுத்து மனம் புகுந்தே.

ஊடல் புரிய உவர்ப்பளிப்பாள் - எனில்
உள்ளம் பளிங்கு நிறத்ததுதான்
பாடல் இசைக்குமென் வாழ்வினிலே - அவள்
கூடி யிசைத்திடும் தாள ஒலி

நீளத் தெரிந்திடும் வானழகன் - அவள்
நீல நிறத்தைக் கவர்ந்து கொள
சூழுமதிர்ச்சியி லோய்ந்து விட்டேன் - அந்த
சோர்வை யுயிர்ப்புட னூதிவிட்டேன்.

தொட்டு விடுந் தொடு வானவனை - யவள்
விட்டு விலகிப் பறந்து வந்தே
கிட்ட நெருங்கி எனைக் கலந்தாள் - அந்தக்
கிளுகிளுப்பினில் மூழ்கி விட்டேன்.

# பாரதி

**"குழல்"**

பட்டை தீட்டிய வயிறநற் கண்கள் !
பார்வை அஃதிலோர் அற்புத சக்தி !
குட்டை மீசையிற் கற்பனைத் துள்ளல் !
குறுகுறுப் புடை செவ்விதழ் தன்னில்
வெட்டி மின்னிடும் சொற்களின் கூட்டம் !
வார்த்தை கொண்டிடும் பொருள்பெரும் ஆதி !
சட்டை செய்திடா வாழ்புடை ஆற்றல்
சூழ வீசிடும் ஒளிமுகம் ! கொள்ளை !

வார்த்தை இங்கிலை ; வான்கவி செய்து
வையம் யாவையும் அறிவொளி சூழ
ஆர்த்த பாரதிப் புலவனின் கோலம்
ஆற்றல் அளவிட ! அன்னவன் சொல்லில்
பார்த்தன் விற்கணை பாய்ந்திடு வேகம்
பகலவன் கதிர் பற்பல கோடி
சேர்த்திழைத்ததோர் பேரொளிச் செம்மை !
சீவனில்லை என் சொல்லில் ; இஃதுண்மை !

# தாமரை

கி. சுப்ரமணியன்

சேற்றிலே பிறந்து அந்தச்
சேற்றிலே வளர்ந்து, வீசும்
காற்றிலே ஊஞ்சல் ஆடி
கவினதன் எல்லை கண்டாய்!
சேற்றிலே பிறந்த போதும்
சீர்பெற்ற பூவே! மக்கள்
கூற்றினைக் கேளாய்! இங்கே
குடியினில் தாழ்மை சொல்வார்.
செங்கதிர் தோன்றும்போது
சிரிக்கின்றாய் இதழ்கள் விண்டு.
கங்குலாள் பிறக்கும் எல்லை
கதிரவன் மறையும்போது
பொங்கு ஏர் பூவே! நீ உன்
பொலி இதழ் மூடிக் கொள்வாய்!
தங்கிடும் உண்மைக் காதல்
தனக்கு நீ எடுத்துக் காட்டே!
சந்திரன் தோன்றும்போது
சச்சட மலரே! நீ உன்
சிந்தையில் நின்று இன்பம்
செலுத்திடும் அரியை உன்னி
விந்தையாம் இதழ்கள் மூடி
வேற்றானைப் பார்த்தாயில்லை.
எந்தையர் கற்பைப் பூவில்
இயம்பிடப் பிறந்தாய் போலும்!
கற்புடைப் பெண்டிர் யாரும்
காட்சிக்கு இனியர் என்று
பொற்புடன் எழுதி வைத்த
புகழ்தமிழ்க் கவிஞர் சொல்லை
அற்புதமாக நீ இவ்
வவனியில் மெய்ப்பித்தாயே!
வெற்பதாம் கற்பு கொண்ட
விளங்கிடும் முடியுற்றாயே!

தமிழுக்குக் கம்பன் போல
தரணிக்கு முதிரம் போல
கமழ்மணம், குசுமத்தின் கண்
கலந்திடும் பான்மைபோல
இமிழ்திரை, அளக்கருக்கு
எழில்தை நல்கல் போல
உமிழ்எழில் கமலப்பூ! நீ
உற்ருய் கொல் தடாகத்திற்கு?

வஞ்சியர் வதனம், கண்கள்
வனப்புறு அதரத்திற்கு
கஞ்ச செம் மலரே! உன்னைக்
கழறுவார் உவமை என்று.
விஞ்சிய எழிலைக் கொண்டு
விளங்குதற் குவமை சொன்ஞல்
கொஞ்சமும் களங்கமற்றுக்
குலவுதல் அன்ஞர்க் குண்டா?

கதிரவன் வாழ்க! காதல்
கனிந்திடும் கமலம் வாழ்க!
முதிரம் நீர் பொழிந்து இன்பம்
முளைத்திட உதவல் போல
புதியநற் கருத்துத் தேஞல்
புந்தியை நிறையச் செய்தாய்!
அதிஎழில் அமைந்தபூ! நீ
அவனியில் வாழ்க! வாழ்க!

# காதற் பொய்

## பெ. தூரன்

### காட்சி ஒன்று

*[நாட்டுப் புறத்திலே ஒரு கழனியிலே தனியாகவுள்ள ஒரு சாதாரண வீடு. பொழுது விழுந்து இருட்டிப்போன சமயம். தெய்வானை என்ற இளங்கன்னி வீட்டிற்குள்ளே இருக்கிறாள். அவளுக்குப் பதினாறு வயதிருக்கும். காதல்பொங்கும் வதனம். மருதமுத்து என்ற இளைஞன் அவசரமாக வீட்டிற்குள் நுழைகிறான்.]*

தெய்வானை : (மகிழ்ச்சியோடு) அத்தான் இவ்வளவு நேரமா?...

மருதமுத்து : தெய்வானை, நீ எப்போ இங்கே வந்தே?

தெ : அந்தி நேரத்தில் தான் வந்தேன். அப்பா இங்கே கொண்டு வந்து விட்டு விட்டுப் போனார்.

மரு : வெளியூருக்கா போனார்?

தெய் : ஆமாம் வர இரண்டு நாள் பிடிக்கும். அதுவரைக்கும் நான் தனியாக இருக்கப்படாதுன்னு இங்கே கூட்டி வந்தார்... நான் இங்கே வந்தது உங்களுக்குப் பிடிக்கவில்லையா?

மரு : எனக்கா பிடிக்காது? நம்ம கல்யாணத்துக்கு ஒரு மாசமிருக்குது. அதுவே எனக்கு ஒரு யுகம்போலத் தோணுது. அப்புறம் நாம் ரண்டுபேரும் எப்பவும் இங்கே சேர்ந்தே இருப்போம்.

தெய் : அத்தான், இப்பமுதலே உங்களோடு இருந்துவிடணும்னு எனக்கு ஒரே ஆசை.

மரு : தெய்வானை, எனக்கும் அதுதான் ஆசை... ஆனால்... இன்னும் ஒரு மாசந்தானே?... அம்மா எங்கே?

தெய் : அத்தை சுள்ளிஎடுத்து வரப் போனாங்க.........அதோ அவங்கதான் வாருப்போல இருக்குது.

*[மருத முத்துவின் தாயார் உள்ளே நுழைகிறாள். வயது முதிர்ந்த கிழவி அவள்.]*

மரு : அம்மா, ஒரு முக்கியமான சேதி...ரொம்ப அவசரம்...

கிழவி : என்ன சேதி? தெய்வானை வந்திருக்கிறா......... அது தானே சேதி?

மரு : அது முக்கியந்தானம்மா... ஆனால் நான் வேறொரு காரியமா வந்திருக்கிறேன் ...... சீக்கிரத்திலே இருபத்தஞ்சு பேருக்கு சமையல் ஆகணும்?

கிழவி : (சிரித்துக் கொண்டே) இது என்னடா, இன்னைக்கே கலியாணத்தை வச்சுட்டியா என்ன?

மரு : இது கலியாணத்தை விட ரொம்ப முக்கியம்... அம்மா, நம்ம கட்டபொம்மு ராஜா இல்லே...... அவருக்கும் அவருடைய வீரர்களுக்கும் சோறு கொண்டு போகணும்.

கிழவி: மருதமுத்து, நீ என்ன சொல்றே - புரியும்படியாத்தான் சொல்லேன்.

மரு: அம்மா, நம்ம கட்ட பொம்முராஜா ஒரு சண்டையிலே ...தோத்துப்போனாரு. கோட்டையை இங்கலீசுக்கம்பெனிக் காரன் பிடிச்சுட்டான். இப்போ நம்மராஜா தலைமறைவா இருக்காரு. மறுபடியும் கோட்டையைப் பிடிக்க ஆள் சேர்த்துக்கிட்டு இருக்காரு...

கிழவி: அது உனக்கு எப்படித் தெரியும்?

மரு: (அடங்கிய குரலில்) இன்னைக்கு நான் பெரிய காட்டிலே ஆடு மேய்ச்சுக்கிட்டு இருந்தேன்... எப்பவும் போலே பாடிகிட்டே மரத் தடியிலே உட்கார்ந்திருந்தேன். அப்போ ஒரு ஆள் எங்கிட்டே வந்து இந்தச் சேதியச் சொன்னான். கட்ட பொம்மு மேலே பாட்டுப் பாடவே அவனுக்கு என்னிடத்திலே நம்பிக்கை பிறந்துட்டுது...

தெய்: கட்ட பொம்மு ராஜா எங்கே ஒளிஞ்சிக்கிட்டிருக்காரு?

மரு: அவரும் அவர் ஆள்களும் வடக்கே அந்த...

கிழவி: உஸ் ... மருதமுத்து அதையெல்லாம் நீ வெளியிலே சொல்லாதே.

மரு: என்னம்மா, தெய்வானை யிடங்கூடச் சொல்லக் கூடாதா?

கிழவி: எதுக்கும் நீ எச்சரிக்யா இருக்கணும். அவள் சிறுசுதானே? இந்த ரகசியம் வெளியாகவே படாது.

மரு: இப்போ அவங்களுக்கு சாப்பாடு உடனே பண்ணணும்... ரெண்டு நாளா பட்டினியாம். வெளியிலே தலை காட்ட முடியிலையாம்.

கிழவி: ஏன், கும்பெனிப் படை அவங்களைத் தேடி அலைஞ்சிட்டு இருக்குதா?

மரு: ஆமாம். கட்டபொம்மு ராஜாவைப் பிடிச்சுக் கொடுத்தா லட்ச லட்சமாப் பணம் கிடைக்குமாம். அவரைக் கொண்ணுட்டாக்கூடப் போதுமாம்... அவர் தோத்துப்போன சமயத்திலேயே பிடிச்சுக்கிடணும்ணு எங்க பார்த்தாலும் கும்பெனி சிப்பாய்கள் தேடராங்களாம்.

தெய்: அத்தே, நான் அடுப்புப் பத்த வைக்கட்டுமா?

கிழவி: ஆமாம், நீ இங்கே வந்தது நல்லதாச்சு. இல்லாத போனா இருபத்தஞ்சு பேருக்கு அவசரமான சமையல் பண்ண என்னலாகுமா?

மரு: அம்மா, சீக்கிரமா ஆகணும்...மானத்திலே மேகம் கவிஞ்சிகிட்டு வருது. மழை வந்தாலும் வரும்...மழைக்கு முன்னாலே அவங்களுக்கு சாப்பாடு கொண்டு போகணும். இருட்டு வேறே கருகும்ணு வருது.

தெய்: அத்தான், உங்களுக்கு இருட்டைக் கண்டால் பயமா?

மரு: அதெல்லாம் ஒண்ணுமில்லே. இந்த இருட்டைப் போல எத்தனையோ பாத்திருக்கேன். மழைக்கு முன்னாலே போகணுமின்னுதான் அவசரம்.

அதோ மானம் மின்னுது. பாத்தியா? காத்து வேறே ஆரம்பமாகுது. (காற்றடிக்கும் ஒலி கேட்கிறது.)

கிழவி: தெய்வானே, அந்தக் கதவை மூடு...இன்னைக்கு புயலே வந்திடும்போல இருக்குது. வா, சீக்கிரமா சமையல் ஆரம்பிக்கலாம்...

மரு: நீங்க சீக்கிரமா எல்லாம் பண்ணுங்க. நான் போய் ஆடுகளையெல்லாம் பத்திரமா பெருங்காட்டிலே அடைச்சிவிட்டு வாரேன். காத்து வேகமா அடிக்குது.

கிழவி: ஆட்டுப் பட்டியை நல்லாக் கட்டி வந்தாயா?

மரு: இல்லம்மா. அவசரத்திலே வந்து விட்டேன். அதோடு இப்படிக் காத்தும் மழையும் வரும்னு யாரு கண்டா?

கிழவி: சரி, அப்படியானுப் போய்ட்டு வா. குட்டிகளை யெல்லாம் நனையாமே சாலைக்குள்ளே அடைச்சு வை.

மரு: சாப்பாடு தயாரானதும் அந்தப் பந்தத்தைக் கொளுத்தி இந்தப் பலகணி வழியாக் காட்டுங்க. அதைப் பார்த்ததும் நான் வந்துடறேன்.

கிழவி: மருதமுத்து, இந்தா, இந்தச் சாக்குப் பையை மேலே போட்டுக்கிட்டுப்போ...... மழை வந்தா நனைஞ்சு போவே...

மரு: சரியம்மா. தெய்வானே, சீக்கிரமா சாப்பாடு ஆயிடணும்.

[கதவைத் திறந்து வெளியே போகிறான். காற்று வேகமாக உள்ளே அடிக்கிறது.]

## காட்சி இரண்டு

[திரையிலிருந்து மறுபடியும் அதே காட்சியோடு விலகுகிறது.]

தெய்: அத்தே, பந்தத்தைக் கொளுத்தட்டுமா?

கிழவி: அதற்குள்ளே என்ன அவசரம்? இன்னும் குழம்பு அடுப்பிலிருக்குதே?

தெய்: பலகணி வழியா இப்போ தீப்பந்தத்தைக் காட்டினால் அத்தான் இங்கே வந்து சேர்றதுக்குள்ளாகக் குழம்பு ஆயிடாதா? வெளியிலே ஒரே இருட்டாக இக்குதே. அவுக வழிகண்டு பிடிச்சு வர்றதுக்கு நேரஞ் செல்லும்...

கிழவி: சரி, ஒன் இஷ்டம்போல செய்.கொஞ்சம் என்னெயை விட்டுப் பந்தத்தைக் கொளுத்து.

தெய்: பலகணி வழியா மேலேயும் கீழேயும் பந்தத்தை ஆட்டட்டுமா? அத்தானுக்கு இந்த வெளிச்சம் தெரியுமா?

[தெய்வானை பந்தத்தைக் கொளுத்தி சமிக்கை செய்கிறாள்.]

கிழவி: நல்லா தெரியும். ஆட்டுக்கிடை கரட்டுமேலே உயரத்திலே இருக்குது.

தெய்: நல்லவேளையா மழை இன்னும் வரல்லே. காத்துத்தான் இப்படி வேகமா அடிக்குது.

கிழவி: பாவம்,கட்டபொம்மு ராஜா எங்கே ஒளிஞ்சிக்கிட்டு கஷ்டப்படுகிறாரோ?

தெய்: இந்தக் கும்பெனிக்

காரனுக்கு நம்ம தேசத்திலே என்ன சோலி, அத்தே?

கிழவி : ஊருரெண்டுபட்டாக் கூத்தாடிக்குத் தொக்கு தானே? நம்மதேசத்து ராசாக்களெல்லாம் ஒருத்தருக் கொருத்தரு சண்டைப் போட்டுக்கிட்டு வெள்ளக்கார னுக்கு ஆளாகப்போராங்க. கட்ட பொம்மு ராஜாத்தான் தைரிய மாக் கும்பெனிக்காரனெ எதித்து நிக்கிருரு.

தெய் : அத்தே, கதவை தட்ட றது யாரு?

கிழவி : இத்தனே சீக்கிரத்திலே மருத்முத்துவரமுடியாதே? என்ன வேகமா வந்தாலும் இன்னும் ஒரு நாழியாவது ஆகுமே.

[மறுபடியும் உரத்துக்கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது.]

தெய் : கதவைத்திறக்கட்டுமா?

கிழவி : சரி, திற. யாரா இருந்தா தான் என்ன?

[தெய்வானை கதவைத்திறக் கிருள். கும்பெனி வீரர்களின் தலைவன் உள்ளே நுழைகிருன்]

தெய் : (பயப்பட்டு) ஹா, யாரு? அத்தே, யாரோ வெள்ளக் காரன்...

கும்பெனிவீரர்தலைவன்: [அதட் டும் குரலில்] ஏய் யார் வீட்டிலே? டேய் சார்ஜண்ட், உள்ளே வாடா. இந்சவீட்டே சர்ச் பண்ணு. கத வைத் தாளைப் போடு...யாரையும் விடாதே.

[சார்ஜண்ட் உள்ளே வருகி ருன்.]

கிழவி : (அமைதியாக) அய்யா, நீங்கள் யார்?

தலைவன் : நானு? நான்தான் உங்க பாட்டன். (சிரிக்கிருன்.)

சார்ஜண்ட் : அம்மா, இவர் கும்பனிப் படைக்குத் தலைவர். இந்தத் துரை கட்டப்பொம்மனைப் பிடிக்க வந்திருக்கிருரு.

தலைவன் : இங்கே கட்டப் பொம்மன் வந்தானு? என்ன கிளவி, உனக்கு என்னமாவது தெரியுமா?

கிழவி : எனக்கு அதெல்லாம் எப்படி ஐயா தெரியும்? நாங்க ஏழைகள், ஆடு மேய்ச்சுப் பிழைக் கறவங்க...

தலைவன் : இப்போ தீப்பந் தம் காண்பிச்சு ஜாடை பண்ணி னையே-அது யாருக்கு?

கிழவி : (திகைத்து) தீப்பந் தமா? அது வீட்டிலே வெளிச்சம் போடத்தான் வச்சிருக்கிறேம்.

தலைவன் : டேய் சார்ஜண்ட், ஏண்டா சும்மா நிற்கிருய்? சுத்திப் பாரடா.

சார்ஜண்ட் : அம்மா, இந்த வீட்டிலே வேறே யாராவது இருக்காங்களா? இங்கே ஆண் பிள்ளை ஒத்தரும் இல்லையா?

கிழவி : இங்கே வேறு யாருமே இல்லே.

சார்ஜண்ட் : உம்மகன் எங்கே?

கிழவி : அவன் ஆட்டுக் கிடைக்கு போயிருக்கிருன்.

தலைவன்: ஆட்டுக்கிடைக்கா? இல்லேக் கட்டப்பொம்மன் கிட்டயா?

கிழவி: அவுங்களையெல்லாம் அவனுக்குத் தெரியவே தெரியாது. அவன் ஆடு மேய்க்கிறவன்.

சார்ஜென்ட்: கட்டபொம்மன் இந்தப்பக்கத்தில்தான் எங்கேயோ ஒளிந்திருக்கிறனென்று தெரியுது. உங்களுக்கு யாரும் சொல்லலேயா?

கிழவி: நாங்க தனியா இந்தக் காட்டுக்குள்ளே இருக்கிறோம். எங்களிடம் யாரு வந்து சொல்லுவாஹ? எங்களுக்கு ஒண்ணுமே தெரியாது.

தலைவன்: இந்தக்குட்டி யாரு?

கிழவி: அவள் என் மருமக.

தலைவன்: ஓகோ, உன் மகனுக்குக் கலியாணம் ஆச்சா? ஏ புள்ளே - உன் புருசன் உங்கிட்டே அந்தக் கட்டபொம்மனைப் பத்தி சொல்லலலேயா?

கிழவி: அவளுக்கென்ன தெரியும்? அவளுக்கு இன்னும் கலியாணம் ஆகல்லே - அடுத்த மாசந்தான் கலியாணம்.

தலைவன்: (சிரித்து) ஓகோ கலியாணத்துக்கு முன்னேயே இங்கே வந்துட்டாளா? கிளவீ - என்னுடைய சிப்பாய் இருபத்தஞ்சு பேருக்கு நீ இப்போ சோறு போடணும்.

கிழவி: அத்தனை பேருக்கு நான் சோத்துக்கு எங்கே போவேன்?

தலைவன்: டேய் சார்ஜென்ட், வீட்டை நல்லா சோதனை போடடா. போட்டுட்டு போகலாம் - நேரமாகுது.

[சார்ஜென்ட் அடுப்பங்கரையில் பார்க்கிறான்.]

சார்ஜன்ட்: ஸார், இங்கே பாருங்கோ - சோறு நிறைய பண்ணியிருக்குது.

தலைவன்: ஆ அப்படியா? கிளவீ, இத்தனை சோறு யாருக்குப் பண்ணினாய்? அப்பவே எனக்கு சந்தேகம் வந்தது.

கிழவி: (சட்டென்று) அது எங்களுக்குத்தான்.

தலைவன்: ஏய் கிளவீ, பொய்யா சொல்றே? இங்கே இருக்கிறது அம்பது பேருக்காகுமே.

கிழவி: நாளைக்கெல்லாம் சேத்துப் பண்ணியிருக்கிறேன்.

[கதவைத்தட்டும் சத்தம் கேட்கிறது.]

தலைவன்: யாரடா தட்டரவன். டேய்சார்ஜென்ட், கதவைத் திறந்து பாரடா?

[சார்ஜென்ட் கதவைத் திறக்கிறான். மருதமுத்து உள்ளே நுழைகிறான்.]

சார்ஜென்ட்: ஸார், இதோ கிழவி மகன் வந்துட்டான்.

தலைவன்: ஏண்டா பையா? கட்டபொம்மனுக்கு நீயோ சோறு கொண்டுபோய்க் கொடுக்கிறே?

மரு: நீங்க யாரு? எதுக்கு இங்கே இன்னேரத்திலே.......... சுற்றிலும் (பார்க்கிறான்.)

தலைவன் : டேய், சமாச்சாரத்தை முதல்லே சொல்லு. எல்லாம் எனக்குத் தெரிஞ்சு போச்சு. இந்தக் கிளவி எல்லாம் சொல்லிப்புட்டா.

கிழவி: (சட்டென்று) நானென்ன சொன்னேன்? எங்களுக்குஒண்ணும் தெரியாதுன்னுதான் சொன்னேன்.

தலைவன் : கிளவி, இதெல்லாம் எனக்குத் தெரியும். மகனுக்கு உஷார் பண்ணரையா? டேய் பையா, யாருக்கடா இத்தனை சோறு பண்ணச் சொன்னே

மரு : (மிடுக்கோடு) அது யாருக்கானாலும் உனக்காக அல்ல.

தலைவன் : ஓகோ அத்தனை துடுக்குக்காரனு நீ? - உள்ளதை ஒளிக்காமல் சொல்லிவிடு. இல்லாப்போனு நீ அந்தக் குட்டியை கலியாணம் பண்ணிப் பிழைக்க மாட்டாய்.

மரு : இந்தப் பேச்சிலே நான் மிரண்டுடமாட்டேன்.

தலைவன் : கட்டபொம்மன் ஒளிந்திருக்கிற இடம் உனக்குத் தெரியாதா ?

மரு : என் ஆட்டுப்பட்டியிலே அவர் கிடையாது. வேணும்னு வந்து பார்.

தலைவன் : பின்னே எதுக்கு இத்தனை சாப்பாடு ?

மரு : அதைப்பத்தி உனக்கென்ன கவலை? என்னேடே ஆடுமேய்க்கிறவங்களுக்கெல்லாம் நான் போடுவேன்.

தலைவன் : எங்கே ஒத்தரையும் காணமே? பொய்தானே சொல்றே ?

மரு : அந்த வழக்கம் எங்க கிட்டக் கிடையாது.

தலைவன் : டேய், சார்ஜெண்ட் இவனைப் பிடித்துக்கட்டு. இன்னும் நாலு சிப்பாயைக் கூப்பிடு.

[சார்ஜெண்ட் வெளியேபோய் உறத்துக் கூவுகிறுன். நான்கு சிப்பாய்கள் வருகிறுர்கள்.]

தெய் : (இரங்கிய குரலில்) ஐயா, அவரை எதுக்குக் கட்டுறீங்க ?

தலைவன் : என்னகுட்டி, புருசன்மேலே அத்தனை அக்கரையா?

கிழவி : சும்மா வாயிலே வந்ததெல்லாம் பேச வேண்டாம். அவளுக்கு இன்னும் கலியாணம் ஆகல்லே.

தலைவன் : ஓகோ, கிளவி ரொம்ப தைரியசாலி போலிருக்குது. சார்ஜெண்ட், இந்தப் பயலை வெளியிலே கொண்டுபோய் நிறுத்து. உண்மையை சொல்லாதபோனு அவனைத் துப்பாக்கியாலே சுட்டுவிடு

சார்ஜெண்ட் : இவனையா சுடுவது ? இவன்...

தலைவன் : டேய், ஷட் அப். நான் சொல்றபடி செய்.

தெய் : (பயந்து) ஆ......அத்தான்......

கிழவி : தெய்வானை, நீ சும்மா பயப்படாதே. காரணமில்லாமே

என் மகனே அவன் சுடமுடியாது. அதைத் தெய்வம் பொறுக்காது.

தலைவன் : டேய் பையா, நீ உண்மை சொல்லமாட்டாயா ? இப்போ உன் உயிர் என் கையிலே இருக்குது.

மரு : இந்த மிரட்டலுக்கு நான் பயப்படுகிறவனல்ல.

தலைவன் : சார்ஜெண்ட் வெளியே இவனை நிறுத்து. நாலு வீரர்களை துப்பாக்கியை லோடு பண்ணச்சொல். சுடறத்துக்குத் தயாரா நிறுத்து. பிறகு இங்கே வா.

[சிப்பாய்கள் மருதமுத்துவைக் கட்டியிழுத்துச்செல்லுகிறார்கள். சார்ஜெண்டும் வெளியே போகிறான்.]

தலைவன் : கிளவி,இதோபார் நீ உள்ளத்தை சொல்லாத போனு உன்மகனைச் சுடும்படி ஆர்டர் செய்வேன். வீணு அவன் செத்துப் போவான்.

கிழவி : (நிதானமாக) சாகிறதும் பிழைக்கிறதும் நம்மகையிலா இருக்குது ? அவனுக்கு ஆயுசு முடிஞ்சா உன்னுலே கூட அவனைப் பிடிச்சு வைக்க முடியாது.

தலைவன் : என்ன வேதாந்தமா பேசரே ? கட்ட பொம்மன் இருக்கிற இடத்தைச் சொன்னல் உனக்கு நிறையப்பணம் கிடைக்கும். நீயும் உன் மகனும் மருமகளும் சொகமா இருக்கலாம். உனக்கு லட்சம் வராகன் இப்பவே கொடுக்கிறேன்...இதோ பார்.

கிழவி : லட்சம் வராகஞ ? அது என்னத்துக்கு ? நாலு ஆட்டுக்குட்டியிருந்தா எனக்குப் போதும்.

தலைவன் : (கோபமாக) டேய் சார்ஜெண்ட், இங்கே வாடா. இந்த கிளவி எதுக்கும் மசிய மாட்டேங்கரு. அந்தப் பயலைப் போலவே பிகுவா இருக்கிரு.

சார்ஜெண்ட் : ஸார். வெளியே அந்தப் பையனை நிறுத்தியிருக்கிறேன். நாலு சிப்பாய் துப்பாக்கியோட ரெடியா இருக்கானுக.

தலைவன் : இந்தா, இந்தக் கிளவியை புடிச்சு இழுத்துப்போ. அவ மகன் சாகிறதை கண்ணிலே பாக்கட்டும், கிட்டக் கொண்டு போய் நிறுத்து.

தெய் : (கலவரத்தோடு) அத்தே, ஐயோ - நான் என்ன செய்வேன்.

கிழவி : தெய்வானை, பயப்படாதே. கடவுள் நம்மைக் காப்பாத்துவார்.

[கிழவியைப்பிடித்து வெளியே தள்ளிக்கொண்டு போகிறார்கள்.]

தலைவன் : என்ன புள்ளே நீயும் அவன் சாகிறதைப் பார்க்கணுமா ?

தெய் : ஐயா, உங்களுக்குக் கொஞ்சங்கூட இரக்கமில்லையா?

தலைவன் : உள்ளத்தை சொல்லீட்டா, நான் உங்களை ஒண்ணும் செய்யமாட்டேன்.

தெய் : அவருக்குத்தான் தெரியாதுன்னு சொன்னரே ?

தலைவன் : அதை நான் நம்பவே முடியாது. நீ பண்ணியிருக்கிற சாப்பாடு விசயத்தைச் சொல்லாதே. தீப்பந்தம் காட்டிஜாடை பண்ணினதும் அந்தப் பயல் பேசர பேச்சும் எனக்குத் தெரியாதா ?

தெய் : ஐயா, என்மீது இரக்கங் காட்டுங்க.

தலைவன் : உனக்காகத்தான் பாக்கரேன். அந்தப் பையனை கலியாணம் பண்ணிக்கிட்டு வாளணும்னு ஆசையிருந்தா நீயாவது சொல்லிப்புடு. பணம் வேற கிடைக்கும்.

தெய் : (சில விநாடிகள் தாமதித்து பிறகு சட்டென்று) ஐயா, நான் சொல்லிட்டா அவரை விட்டுடறீங்களா ?

தலைவன் : உடனே விட்டுடறேன். இல்லாப்போனா இதோ இந்த விசிலே ஊதினால் உடனே நாலு குண்டு அவன் நெஞ்சிலே பாயும். சிப்பாய்கள் நீட்டிய துப்பாக்கியோடு தயாரா இருக்காங்க.

தெய் : இல்லே, இல்லே, சொல்லிப்பிடறேன் - கட்டபொம்மு இங்கதான் ஒளிஞ்சிருக்காரு.

தலைவன் : ம்...அப்படி வா வளிக்கு. அவனுக்குத்தானே இந்த சாப்பாடு?

தெய் : ஆமா. சத்தமாப் பேசாதிங்க. அத்தாங் காதிலே படக் கூடாது.

தலைவன் : அவன் எங்கே இருக்கிறான்?

தெய் : இங்கிருந்து தெக்காலே போனா அங்கே ஒரு ஓடை இருக்குது...அங்கே பாறைக்குகை ஒன்று இருக்கும். அதிலேதான்.

தலைவன் : (சிரித்துக்கொண்டு) ம்...பேஷ். காதலா?...அதுதான் விஷயம் வெளியாய்ட்டுது...டேய் சார்ஜெண்ட் இங்கே வாடா.

சார்ஜெண்ட் : ஸார் உண்மை தெரிஞ்சுதா?

தலைவன் : ஆமாம். அந்தப் பயலைக் கட்டி இளுத்துக்கினு போ. தெக்காலே—அங்கேதான் இருக்கான் அந்தக் கட்டத்துரை.

சார்ஜெண்ட் : விசயம்தான் தெரிஞ்சுதே, இன்னும் அந்தப் பையன் எதுக்கு?

தலைவன் : அவன்கூட இருக்கட்டும். இவள் பொய் சொல்லியிருந்தா அந்த இடத்திலேயே அவனைச் சுட்டுத்தள்ள வேணும். என்ன குட்டி தெரிஞ்சுதா? சார்ஜெண்ட் புறப்படு போகலாம். பணம் கிடைக்கும்னு பாத்தியா? அடி பயித்தியக்காரி (உரக்கச் சிரித்துக்கொண்டு வெளியே போகிறான். சார்ஜெண்டும் அவனைப் பின் தொடர்கிறான்.)

## காட்சி மூன்று

கிழவி : நல்ல வேளை. மருதமுத்து உன்னிடம் கட்டப்பொம்மு ராஜா இருக்கிற இடத்தைச் சொல்லாதது நல்லதாச்சு.

தெய் : சொல்லியிருந்தாலும் அந்த ராக்ஷதர்களுக்கு உண்மையைச் சொல்லுவேனே?

கிழவி : யார் கண்டா. என் மகன் மேலிருக்கிற ஆசையிலே.

தெய் : போங்க அத்தை. இப் பக்கூட நான் உண்மையைச் சொல்லலையே. அத்தான் வடக்குப் பக்கம் சொன்னரு. நான் தெக்கேன்னுதான் சொன்னேன்.

கிழவி : அந்தப் பொய்யிலே என்னரும். நிஜம் சொன்னலும் பொய் சொன்னலும் எல்லாம் ஒண்ணுதான்.

தெய் : கட்டப்பொம்மு ராஜா தப்பித்துக் கொள்ளுவாரில்ல.

கிழவி : அதைப் பொறுத்த வரையிலும் எனக்கு சந்தோஷந் தான்.

தெய் : அத்தானே என்னமாவது செய்துடுவாங்களா?

கிழவி : அவனைப்பற்றித்தான் நான் சொல்றேன். பொய் சொன்னலும் நிஜம் சொன்னலும் அவனைப் பொறுத்தமட்டிலே எல்லாம் ஒண்ணுதான். ஆனல் என் மகன் உயிர் போனலும் நம் ராஜாவை காட்டிக் கொடுக்க மாட்டான்.

தெய்: (கவலையோடு) அத்தே, அத்தானுக்கு ஏதாவது ஆபத்து வருமா?

கிழவி : அவனைப்பத்தி இனிமே நீ கவலைப்படக்கூடாது. நீ என்னைப்போலப் பெருமைப் படவேணும்.

தெய் : நீங்கள் சொல்றது எனக்கு புரியல்லையே ?

கிழவி : நேத்து வரையிலும் என் மகன் வெறும் ஆடு மேய்க்கிற பையன். இன்னைக்கு அவன் வீரன். அவன் இனிமே சிரஞ்சீவி.

தெய் : அத்தே, ஓடைக்குப் போய்பார்த்ததும் அந்தவெள்ளக்காரன் என்ன செய்வான் ?

கிழவி : என்ன செய்வான் ? இங்கே என்ன செய்ய நினைச்சானே அதைத்தான் அங்கேயும் செய்வான்.

தெய் : ஐயோ, அத்தை எனக்குப் பயமா இருக்குதே.

கிழவி : தெய்வானை, நீ விசனப் படாதே. கழுகு கையிலே சிக்கின குஞ்சு திரும்பிவராது. அந்தக் கும்பெனியான் வீட்டுக்குள்ளே வந்ததும் எனக்கு இது தெரிஞ்சு போச்சு.

தெய் : (அழுது கொண்டே) உங்களுக்கு பெத்தவயிறு நோகல்லையா? அத்தே, எப்படி இப்படிப் பொறுமையோடு பேசுறீங்க.

கிழவி : என் வயிறுந்தான் பற்றி எரிகிறது. என் நெஞ்சு வெடிச்சுப் போனலும் போகும்... இந்தத் தள்ளாத வயசிலேஎனக்கு இனி யாரு கதி? ஆனல் மருதமுத்துவை நான் மகனப் பெற்றது என்னுடைய தவப்பயன்தான். அந்த நினைப்பிலே நான் சந்தோசமா இருப்பேன்.

தெய் : அத்தே, என் ஆசையெல்லாம் போச்சா? இனிமேல் இந்த உலகிலே எனக்கு வாழ்வு இல்லையா ? என் அத்தான் திரும்பி வரமாட்டாரா?

கிழவி : அவனைப்போல ஆயிரம் ஆயிரம் பேர் உயிர் கொடுத்தாத்தான் இந்த தேசம் மறுபடியும் நம்ம கைக்கு வரும். அதுக்கு

நம்ம ராசா கட்ட பொம்மு இருக்கிருரு. பயப்படாதே.

[துப்பாக்கி வெடிச் சத்தம் தூரத்திலே கேட்கிறது.]

தெய் : ஐயோ அத்தான் (அலறித் துடித்து விழுகிருள்.)

கிழவி : தெய்வானை, அழுக வேண்டாம். என் மகனை இன்று வரையிலும் நாலு பேருக்குத் தான் தெரியும். நாளையிலிருந்து அவனுடைய புகழ் நாடெல்லாம் தெரியும். தாய்மார் தொட்டிலாட்டும் போது அவன் புகழைப் பாடி மகிழ்வாங்க. அவன் சிரஞ்சீவியாகிட்டான்.

தெய் : (விம்மி) அத்தே, அத்தே, நான் பொய் சொல்லியும் பயனில்லையா?

கிழவி : பொய்க்குப் பலனேது? ஆனல் என் மகன் உயிர் கொடுத்ததால் ஒரு பலன் ஏற்பட்டிருக்கிறது. அந்த வெடிச் சத்தம் கேட்டு கட்ட பொம்மு ராஜா எச்சரிக்கையாகப் பதுங்கிக் கொள்ளுவார். அது போதும் எனக்கு.

[ திரை ]

# போராட்டம்

"ஸகி"

அதோ, தமிழகத்தின் கலைச் சிறப்பைப்போல் வானளாவி நிற்கிறதே அந்த கோபுரம், அதனருகில் உள்ள ஓர் குடிசையில் தான் 'அவன்' பிறந்தான். தமிழர் திறமையின் சிகரம் அந்த கோபுரம். தமிழர் வறுமையின் சிகரம் அந்த 'அவனி'ன் அவல வாழ்வு. ஓர் நாயுடன் சென்று கொண்டிருந்த அந்த பிச்சைக்காரன், கதைகளில் வருவது போல் 'சறுக்கி' விழுந்தவன் இல்லை. அவன் பிறந்ததே மண்ணில் தான், ஏனெனில் அவன் தாய் படுத்திருந்த பாய் கூட கிழிந்திருந்தது! அப்பொழுதிருந்தே ஆரம்பித்தது அந்த போராட்டம். மண்ணின் வாசனையை முகர்ந்தது முதல் மரணத்தின் மணத்தை அடைவது வரை அவனை பாராட்டியோ, அன்புடன் அணைத்ததோ இரண்டு தான். ஒன்று வறுமை; மற்றொன்று, அவன் அந்திம வாழ்வில் குறுக்கிட்ட ஓர் நாய். நாக்கை நீட்டிக் கொண்டு, வாலைக் குழைத்து ஒரு நாள் அவனைப் (இல்லை யில்லை, அவன் குவளையைப்) பார்த்து நின்றான் அந்த 'வாயில்லா நண்பன்; அன்றிலிருந்து இன்று வரை இருவரும் நண்பர்கள்.

வெகு நாட்களுக்குப்பிறகு இப்பொழுது தான் அவன் சொந்த ஊருக்கு வந்திருக்கிறான். முடியுமானால் அவன் உள்ளத்துடன் பேசிப்பாருங்கள். இந்த பேட்டியின் மூலம் உங்கள் வரண்ட உள்ளத்தையும் அவன் வரண்ட வாழ்க்கையையும் ஒப்பிட்டு பார்க்க முடியும். 'உம். அவன் என்னசினிமா ராணியா, அல்லது பெரிய அரசியல் தலைவரா! அவனுடனாவது, பேட்டியாவது:என்று நீங்கள் சிரிக்கலாம். ஆனால் அவர்களிடமிருந்து நீங்கள் பெறுவதைப் போலில்லாமல் இங்கு நீங்கள் உண்மையைப் பெறலாம். அதோ அந்த ஆற்றங்கரையருகில் உட்கார்ந்திருக்கிறான் அவன் தன் நாயுடன். பிறந்த மண்ணை அடைந்ததில் தான் அவனுக்கு என்ன திருப்தி!

'இந்தாப்பா, உன் பெயர் என்ன?'

'என் பெயரா, ஹூம். எனக்கு பல பெயர் உண்டு. பெரிய அரண்மனைபோல இருக்கும் பங்களாக்கள் முன்னால் நின்னா சனியனே, சோம்பேறியே என்று பேரு உண்டு. சில இடங்களிலே நாயே, கழுதையே என்று கூப்பிடுவாங்க. இன்னும் பல பேரு உண்டு. நான் எந்தப் பேரை சொல்வேனுங்க......'

'எதற்கு இந்த நாயைக்கூட அழைச்சிண்டு போறே!'

'உம். அது, அநேகமாக எல்லா இடங்களிலும் என்னை நாயேன்னு கூப்பிடறாங்க. அவங்க கண்களுக்கு வித்தியாசம்

தெரியணும்னுதான் இதைக்கூட அழைச்சிண்டு போறேன்!'

அவன் உள்ளம் இதை என்னிடம் கூறியபொழுது அது வறட்டு சிரிப்பு சிரித்தது. அந்த சிரிப்பைக் கண்டவர்களோ, கேட்டவர்களோ அப்பொழுது கட்டாயம் தங்கள் துடிக்கும் மார்பை அழுத்திப் பிடித்துக் கொள்வார்கள்.

'உன் வாழ்வின் ஜீவன் எது?'

'என்னை வஞ்சிக்கும் மனமில்லாமல் அன்புப் பார்வையை அளிக்கும் இந்த ஒரே நாய்தான்!

'உன் வாழ்வின் உடல்?'

'வறுமை. அதில்தான் என் வாழ்க்கையே வளர்கிறது'

உங்கள் பேட்டியில் இம்மாதிரி பதில்களைத்தான் அடைவீர்கள். அவனும் வாழவேண்டும் என்று தான்பார்க்கிறான். ஆனால் ஒருவன் வாழ்வதற்கு ஒரு முட்டுக்கட்டையானால் பரவாயில்லை. ஆனால்

ஃ ஃ ஃ

முதன் முதலில் அவன் கண்ட போராட்டம் அவன் தாய். இவனைப் பூமியில் அழைத்து எமனுடன் போராடினாள்.

தோற்றுவிட்டாள்.
பூமியில் விழுந்துவிட்ட இவனைக் காப்பாற்ற வறுமையுடன் போராடினார் தந்தை.
தலைகுனிந்து விட்டார்.
முடிவு?

சின்னஞ்சிறு வயதிலேயே தலைமையை ஏற்றுக் கொண்டு போராட்டத்தை தொடர்ந்து துவங்கினான் அவன். முதன் முதலில் அவன் எழுப்பிய குரலிலிருந்து முடிவில் கிளம்பிய மூச்சின் சப்தம் காற்றோடு காற்றாக கலக்கும்வரை அவன் அறிந்தது அந்த 'போராட்டம்' தான். கூழுக்குக் கூவும் அவன் விருந்து என்பதை நினைப்பதே பாபம் என்று எண்ணினான். புழுதியிலுள்ள புழுக்களுடன் விளையாடும் அவன் விளையாட்டு பொம்மைகளை அணுகுவதே தவறு என்று எண்ணினான்.

பள்ளிக்கூடத்திற்கு அவன் சென்றது ஒரு நாள் தான். அதற்குப் பிறகு அவன் உண்மை நிலை தெரிந்துவிட்டது, அவன் சுதந்திரவாதி. அவன் இவ்வுலகிலேயே ஒருவனுக்குத்தான் அடிமை. பணத்திற்கல்ல; வறுமைக்குத் தான்,

'உலகம் சுற்றிக் கொண்டேயிருக்கிறது' இது படிப்பின் பெயரால் அவனுக்கு போதிக்கப் பட்ட பாடம்.

'பணம் உலகத்தைச் சுழல வைக்கிறது.' இது வாழ்வின் பெயரால் அவனுக்கு போதிக்கப் பட்ட உண்மை.

பாவம், இந்த உண்மையை பொய்யாக்கத்தான் போராட்டம். வாழ்க்கையில் புயலும், சூறாவளியும் அமைதியை அடைய பாடுபட்டான். உலகத்தில் உள்ள ஆசையைத் துறந்து சாந்தியை அடையும் தறுவாயில் மறுபடியும் ஆரம்பித்துவிட்டது அது! அப்பொழுது அவன் வாழ்க்கையில் ஓர் 'அவள்' குறுக்கிட்டாள். அவள் நாகரீக மங்கையல்ல.

வண்டுபோல் மலருக்கு மலர் தாவும்இனத்தவளுமல்ல. கிராமத்தின் இயற்கை வளத்தில் பூத்துக் குலுங்கி, காற்றில் அசைந்து நறுமணம் வீசும் பூக்கள் நடுவில் தானும் ஒன்ருக நின்ற சாதாரண பெண்தான்! அவளும் ஏழைதான், ஆனல் அழகு அவளை அடைந்துவிட்டது, அது அவனை வஞ்சித்தும் விட்டது.

'அவன்' வாழ்க்கையில் சில நாட்கள் நறுமணத்தை வீசிவிட்டு அந்த நறுமணம் எங்கே என்று தேடும்படி செய்துவிட்டு, சினிமாவில் சேர்ந்து விட்டாள் அவள்!

அதைத் தேடி அலைந்தான். ஆனல் அவன் கண்டது எல்லாம் சாக்கடையின் துர்நாற்றமும், மனிதர்களின் உள்ளத்தில் அமிழ்ந்து இருக்கும் மிருக வாசனையும் தான். அழகிய பெண்கள் அரவணைப்பில் உள்ள நாய்களைக் கண்டு பெருமூச்சு விடுவான்.

நீங்களும் நானும் பணம் கொண்ட சமூகத்தின் முன்பு ஒன்று தான். நீங்களும் நானும் பணத்தால் கட்டப்பட்டிருக்கிறோம். ஆனல் நீங்களாவது தங்கச் சங்கிலியும், அழகான ரிஸ்ட் வாச்சுகளும், கொண்ட பெண்களால் அன்புடன் அணைத்துக் கொள்ளப்படுகிறீர்களே எனக்கு அந்த பாக்கியம் கூட இல்லையே. என்று அது பெரு மூச்சுக்கூறும்.

எப்பொழுதாவது அவனுக்கு வேலை கிடைக்கும். அப்பொழுது தான் அவன் சாப்பாட்டை பார்ப்பான். மற்ற நாட்களில் அவன் உடலுக்கும் வயிற்றுக்கும் ஓய்வு!

ஒரு நாள் தாடி மீசையுடன் பசியுடன் சென்னையில் அலைந்து கொண்டிருந்தான். "தாத்தா" இந்தா இந்தப் பையனைப் பிடிச்சுக்கோ, குரல் கேட்டு திடுக்கிட்டு திரும்பினன். ஓர் சிறுமி கையிலிருந்த சாப்பாட்டை சாப்பிட மாட்டேன் என்று கூறும் குழந்தையொன்றை பயமுறுத்திக் கொண்டிருந்தாள். அவன் "தாத்தா" வாக ஆனன். அப்பொழுது குழந்தையிடம் குலாவ வேண்டும் என்று எவ்வளவு ஆசை! கையை நீட்டினர். எத்தனையோபேரிடம் எத்தனையோ விதமாக கையை நீட்டியிருக்கிருர்! ஆனல் வாஞ்சையுடன், வாத்சல்யத்துடன் கையை நீட்டியது இதுதான் முதல் தடவை! சிறுமி மருண்டு விட்டாள். நைவேத்யம் வைத்ததை தெய்வம் கைநீட்டி எடுத்து விட்டால், நைவேத்யத்துடன் ஓடுவார்களே பக்தர்கள், அந்த விதமாக ஓடினள்...உடனே உள்ளேயிருந்து ஓர் அம்மாள் அதட்டலுடன் வந்தாள்.

அவனுக்கு ஆச்சர்யம் மேலிட்டது. 'அவள்' தான், சந்தேகமேயில்லை. 'நீயா' என்று கத்தினன். அவ்வளவுதான் அவனுக்குத் தெரியும்.

அவனுக்கு விழுந்த அடிகளைத் தாங்க முடியாமல் ஓடினன்......

பிறகு தான் அந்த நாய் அவன் வாழ்வில் குறுக்கிட்டது. இருவரும் சேர்ந்தே செல்வார்கள். சேர்ந்தே படுப்பார்கள். சேர்ந்தே உணவு கொள்வார்கள்.

வெகு நாட்களுக்குப் பிறகு தான் பிறந்த இடத்திற்கு எப்ப

டியோ வந்து விட்டான் அவன். எத்தனையோ மாறுதல்கள்! ஆனால் அவன் நிலையில் மாறுதலே இல்லை. கிடையாது. அவன் வாழ்வு அப்படியேத்தான் இருக்கிறது. நாலைந்து நாட்கள் அலைந்தான். குவளை காலியாகவே இருந்தது. தெய்வ நம்பிக்கை அவனுக்கு பசியை பொறுமையுடன் சமாளிக்கக் கற்றுக்கொடுத்தது. அவனை தீய வழிகளில் தூண்டும் உணர்ச்சிகளுக்கு அணையாக விளங்கிற்று.

களைப்பினால் அயற்சியுடன் ஓர் மரத்தினடியில் படுத்தான் அவன். அவன் 'நண்ப'னும் பட்டினிதான். ஆனால் 'அவன்' நிலையைக் கண்டு வருந்தி ஓர் குவளையில் தண்ணீர் மொண்டு வந்தது. எங்கேயோ சென்று அவனுக்கு ஓர் தின்பண்டம் எடுத்து அளித்தது.

'சில்லென்ற உணர்ச்சியில் அவன் எழுந்தான். தள்ளாடிக் கொண்டே உட்கார்ந்தான். நண்பன் வைத்திருந்ததைப் பார்த்தான். மனிதன் மிருகமானான். பசியுடன் இருக்கும் அந்த நாயையும் மறந்து அந்த தின்பண்டத்தைத்தின்றுவிட்டான். பசியால் துடித்தாலும் தன் நண்பனுக்கு ஓரளவு பசியை நீக்கிவிட்டோம் என்ற இன்ப உணர்ச்சிதான் தழைத்தோங்கி யிருந்தது, அந்த நாய்க்கு. அன்புடன் அந்த அணைத்துக் கொண்டான்.

திடீரென்று நாலைந்து மனித உருவில் உள்ள மிருகங்கள் வந்தன. ஒருவன் சிரித்தான். ஒருவன் கனைத்தான். ஒருவன் உறுமினான். மற்றொருவன் தன் கையிலிருந்த தடியால் அந்த நாயை ஓங்கி அடித்தான. அவர்கள் அந்த தின்பண்டத்தின் சொந்தக்காரர்கள்! இரண்டு கூக்குரல்கள் எழுந்தன.

ஒன்று அந்த நாயின் மரணச் சிரிப்பு. மற்றது அந்த மனிதர்களின் வெற்றிச் சிரிப்பு. இது தானே வாழ்கை! ஒருவனுக்கு விளையாட்டாக இருப்பது மற்றவனுக்கு வாழ்வின் விளக்காக இருக்கும்.

அவர்கள் அந்த இடத்திலிருந்து மறைந்துகொண்டிருந்தார்கள். அந்த இடம்: அவன்' கண்களிலிருந்து மறைந்துகொண்டிருந்தது. அவன் 'வறுமையிடமிருந்து மறைந்துகொண்டிருந்தான்.

'நண்பனி'ன் கடைசி குரலோடு அவன் மார்பின் துடிப்பும் அடங்கி விட்டது. எங்கும் அமைதி அவனும் வாழ்வின் நிரந்தரமான அமைதியை அடைந்து விட்டான். போராட்டம் ஓய்ந்து விட்டது!

# நல்வாழ்வு

## எல்லார்வி

"முதலியார் வீட்டிலே கல்யாணமாமே"

"எந்த முதலியார் வீட்டிலே? ராமலிங்க முதலியார் வீட்டுக் கல்யாணத்தைத்தானே சொல்கிறீர்கள்?"

"ஆமாம் ஆமாம். வேறு யார்? அவரைத்தானே இந்தப் பக்கங்களில் பேர் குறிப்பிடாமல், 'முதலியார்' என்று சொல்கிற பழக்கம்?"

"அதுதான் ஒரு மாச காலமாகத் திமிலோகப் படுகிறதே! பணம் பத்து விதமும் செய்யுமல்லவா? அருமை பெருமையுடன் வளர்த்த ஒரே பிள்ளைக்குக் கல்யாணம் என்கிறபோது தடபுடலுக்குக் கேட்பானேன்?"

"பதினைந்து வருஷத்திற்கு முன் இதே முதலியார் எந்த நிலையில் இருந்தார்; இன்று எந்த நிலையிலே இருக்கிறார் பார்த்தீர்களா?" அப்போது குடும்பச் செலவுக்கே பற்றாத வருமானமுடைய ஏழைக் குமாஸ்தா. இப்போது லட்சாதிப் பிரபு! எல்லாம் காலம் செய்கிற கோலம்!"

"அடுத்தாற்போல இவரோடேயே வேலை பார்த்த பாலகிருஷ்ண முதலியாருடைய குடும்பம் போன போக்கைப் பாருங்கள்! இருவரும் சம வயசு உடையவர்கள்தாம். அழகு, அறிவு, படிப்பு அனைத்திலுமே ஒரே மாதிரிதான். இருந்தும் அதிருஷ்டம் காரணமாக அவர் கம்பெனி மானேஜராகவும் இவர் அவர் கீழே உள்ள அநேகம் குமாஸ்தாக்களுக்கிடையே ஒரு சாமான்ய குமாஸ்தாவாகவும் இருந்தார்கள். அவர் பங்களாவிலே வசித்தார்; இவர் வெகு சாமான்யமான வீட்டிலே ஒண்டுக் குடியிருந்தார். இரு குடும்பங்களிடையேயும் அந்தஸ்தில் வெகு வித்தியாசம். இன்று நிலைமை அப்படியே தலை கீழாக மாறிப்போய் விட்டது. இந்த மாறுதலுக்கு மூல காரணம் என்ன என்பதைப்பற்றி நினைத்துப் பார்த்தால் மிகவும் ஆச்சரியமாக இல்லையா?"

"அந்தக் கட்டிட விபத்தைத்தானே சொல்கிறீர்கள்? பாவம், அத்தனைபேர் வேலை பார்த்த இடத்திலே கிருஷ்ணனைப் பொறுக்கி எடுத்துப் பலிகொண்டதே அந்தக் கட்டிடம்!"

"ஏன்? இன்னும் பல பேரைப் பலி கொள்ளவில்லையே என்று ஆயாசப் படுகிறீர்களா?

"சே சே. என்ன அப்படியெல்லாம் பேசுகிறீர்கள்? கிருஷ்ணனும் மற்றவர்களைப் போலத் தப்பியிருக்கலாகாதா என்றுதான் ஆதங்கப்படுகிறேன்."

நாம் ஆதங்கப்பட்டு என்ன பிரயோசனம்? அவருக்கு முடிவு அந்த வகையிலே போட்டிருக்

கிறது. விதியை வெல்ல யாரால் முடியும்?"

'அட, மனிதர் தாம் மாண்டு போனுரே, உடலின் ஒரு சிறு பாகங்கூடக் காணக்கிடைக்காதது தான் மிகவும் துக்ககரமான விஷயம்."

"எப்படிக் கிடைக்கும்? கட்டிடமோ மிகப் பெரிது. பழைய காலத்தது. நொடிப் பொழுதில் இடிந்துவிழுந்து தரை மட்டமாகி விட்டது. ஏகப்பட்ட ஆட்களை வைத்துப் பிரயாசைப் பட்டும் கல்லையும் மண்ணையும் அப்புறப் படுத்தக்காலம் அதிகம் பிடித்தது."

"என்னதான் கால தாமதமானலும் இப்படியா உறுப்புகளில் ஒன்று கூடக் கிடைக்காமல் போய் விடும்? அவ்வளவுதான் அவர்களுடைய அக்கறை."

"நீங்கள் அதைச் சொல்கிறீர்கள். தவறு அடிப்படையிலேயே இருக்கிறது. கட்டிட வேலை நிறைவேறுவதற்குள் அவர்கள் அங்கே ஆபீஸ் நடத்தத்தொடங்கியதே பெருந்தவறு. எங்கே என்ன கோளாறோ, திடீரென்று அப்படி நேர்ந்தது. நல்ல வேளை! பகல் நேரத்திலே பலரும் வேலை செய்து கொண்டிருக்கையில் அந்த விபத்து நேர்ந்திருந்தால்? எத்தனை உயிர்கள் மாண்டிருக்கும்? எவ்வளவு குடும்பங்கள் நடுத்தெருவிலே நிற்க நேர்ந்திருக்கும்? நினைத்தாலே மெய் சிலிர்க்கிறதே!

"சில இடங்களில் இந்த மாதிரி ஏதாவது நடந்தால் ஸ்தாபனத்தார் கஷ்டத்திற்குள்ளான ஊழியர் குடும்பத்திற்கு உதவுவதுண்டு. இங்கே அதுவும் இல்லை."

"எப்படி எதிர்பார்க்க முடியும்? கிருஷ்ணன் அந்தக் கட்டிடத்திலே சிக்கி மாண்டுபோனார் என்பது ஊகமே தவிர ஆதாரம் எதுவும் இல்லையே?"

"பாவம், கிருஷ்ணன் மனைவி சின்னஞ்சிறு பெண் குழந்தையும் கையுமா திண்டாடினதற்கு இந்த ராமலிங்கம் மட்டும் கைச் கொடுக்கவில்லை என்றால் என்ன ஆகும்?"

"அதிலும் கிருஷ்ணன் இருந்த வரையில் ராமலிங்கம் கசக்கிப் பிழிந்து கொடுமைப் படுத்தினராம். அப்படிப் பட்டவரின் மனைவியையும் ராமலிங்கம் இப்படி ஆதரிப்பது வெகுவாகப் பாராட்டத்தகுத்ததுதான்."

"அதுமட்டுமா? இப்போது லட்சாதிபதியான தம் மகனுக்குப் பிச்சைக்காரி கொப்பானவறின் மகளை மணம் செப்வித்துக் கொள்கிருரே, அதைச் சொல்லுங்கள்."

"ஏழையாயிருந்த பொது நல்லவர்களாயிருந்தவர்கள் பணக்காரரான பின் தலை கீழாக மாறி விடுவர். ராமலிங்கம் இந்த கதிக்கு விலக்கு. என்னவோ, அவர் நல்ல குணத்திற்கு அவரும் அந்தக் குழந்தைகளும் மற்றும் அவர் குடும்பத்தினரும் நீடூழி காலம் சுகமாக வாழ வேண்டும்."

ஃ ஃ ஃ

அந்தப் பிராந்தியத்தில் எங்கே பார்த்தாலும் இதே பேச்சாத் தான் இருந்தது. ஊராரிடையே சதாகாலமும் இதே பேச் சென்

ருல் சம்மந்தப் பட்டவர்களிடையே கேட்கவும் வேண்டுமா? ராமலிங்கம் பரபரப்புடன் ஏற்பாடுகளை ப்பிரமாதமாகச்செய்து கொண்டிருந்தார். அவர் மனைவி அபிராமிக்கு எல்லையற்ற சந்தோஷம். மகன் கோபாலனோ, தன் காதல் ஈடேறப்போகும் காலம் சமீபித்துவிட்டதை எண்ணி எண்ணிக் குதூகலித்தவண்ணம் இருந்தான். ஆம், லீலாவதியிடம் அத்தனை பிரேமையை வளரவிட்டிருந்தான் அவன்.

அங்கே லீலாவதியின் நிலையும் அப்படியேதான் இருந்தது. எந்நேரமும் ஆனந்தத்தால் துள்ளிக்கொண்டே இருந்தது அவள் உள்ளம். ஆயினும் இடையிடையே தாயின் நிலைகண்டு சிறிது கண் கலங்கவும் செய்தாள். 'அடடா! அப்பா இருந்தால் இப்போது எப்படி இருக்கும்!' என்று. ஆம், தாயின் நிலை கண்டுதான் அவள் தகப்பனை நினைந்து வருந்தினாள். அதற்குக் காரணம், தகப்பனாரை அறியாத காலத்திலேயே அவள் பறி கொடுத்துவிட்டதுதான்.

ஆனால் சுந்தரியின் நிலை அப்படியா? பத்து வருஷகாலம் உடனிருந்து ஆண்டு அனுபவித்தவள் அவள். அந்த நாளில் கணவனின் முழு அன்பிற்கும் அவள் பாத்திரமாக இருந்தாள் என்று சொல்ல முடியாது தான். என்றாலும் அவள் அன்பு உள்ளம் என்றுமே கணவனிடம் வெறுப்புக் கொண்டதில்லை. அன்புடனோ அன்பின்றியோ கணவனோடு கூடி வாழ்ந்தவள், எதிர் பாராத விதமாகப் பேரிடியால் தாக்குண்டாள். எப்போதுமே துக்கம் அவள் நெஞ்சிலே நிறைந்திருந்தது. இப்போது - அருமை மகளுக்குக் கல்யாணம் என்றதும் - அந்தத் துக்கம் நெஞ்சிலே பிரம்மாண்டமாக வளர்ந்து நெஞ்சைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட முயன்று கொண்டிருந்தது. சுபகாரியம் எதிரே நிற்கும்போது துயரம் கொண்டாடக் கூடாதென்று அவள் மனசை அடக்கப் பாடுபட்டாள். அது அத்தனை சுலபமானதாக இல்லை.

ஏதோ காரியமாக அவளைக் காணவந்தாள் அபிராமி. வீட்டிலே சந்தடியே இல்லை. உள்ளே போய்ப்பார்த்தால் ஓர் அறையிலே படுத்துக் கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தாள் சுந்தரி. அதைக் கண்டதும் அபிராமிக்கும் சகிக்க முடியாத வேதனை உண்டாகி விட்டது. வந்த சுவடு தெரியாமலே திரும்பி விட்டாள். மனத்திலே சுழன்று கொண்டிருந்த வேதனையின் சாயல் முகத்திலே நிழலாட ஏதோ பெயரளவில் வீட்டு அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

இரவு வீடு திரும்பிய ராமலிங்கம் மனைவியின் முகத் தோற்றங் கண்டு துணுக்குற்றார். 'என்ன, ஏது' என்று விசாரித்தார். "ஒன்றும் இல்லை' என்று மழுப்ப முயன்றாள் அபிராமி. பலிக்கவில்லை. விவரம் உரைத்தாள். அதைக் கேட்டு ராமலிங்கம் பெருமூச்செறிந்தார்.

இரவு நடு நிசிக்கு மேலாகியும் ராமலிங்கமும் அபிராமியும் தூங்கவில்லை. அத்தனை சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்த

னர். தூங்கிக் கொண்டிருக்கும் கோபாலன் தற்செயலாக விழித்துக் கொண்டால் அவன் காதில் பட்டுவிடப் போகிறதே என்கிற அச்சத்தால் மிகவும் ரகசியமாகப் பேசிக் கொண்டனர் அவர்கள். அப்படிப் பட்ட பேச்சு வேறு எதைப் பற்றியும் எவரைப் பற்றியும் அல்ல; எல்லாம் கிருஷ்ணனைப்பற்றித்தான், அவர் மறைவைப் பற்றிதான். அபிராமிக்குத் தன் கணவன் சொல்லிக்கொண்டு வருகிற விஷயங்களைக் கேட்கக் கேட்க ஆச்சரியம் தாங்க முடியவில்லை. இப்படியும் நடக்குமா?' என்று அதிசயிப்பவளைப் போல வியப்பே வடிவாய் அமர்ந்து கணவன் சொல்வதையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். ராமலிங்கம் நிதானமாகச் சொல்லிக் கொண்டே போனார்.

ஃ ஃ ஃ

"அபிராமி, கிருஷ்ணன் இறந்து விட்டதாக நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய்; சுந்தரி நினைத்துக் கொண்டிருக்கிறாள்; ஏன், உலகமே தான் நினைத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் என் வரையில் அவர் இறக்கவில்லை. சொல்கிறேன் கேள்.

"கிருஷ்ணன் பரமத் துவேஷங் கொண்டிருந்தார். துவேஷத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாமல் உள்ளடக்கி வைத்துக் கொண்டு மேலுக்கு மிக அன்புடன் நடந்து கொள்வது போல நடித்து வந்தார். இதை நான் வெகு சீக்கிரத்திலேயே உணர்ந்து கொண்டேன். மிகவும் ஜாக்கிரதையுடன் நடந்து கொண்டு வந்தேன். இதையெல்லாம் உன்னிடமும் அப்போதைக்கப்போது சொல்லி வந்திருக்கிறேன். அப்போதெல்லாம் உன் நெஞ்சில் அளவற்ற கவலை தோன்றும். அதன் சாயை முகத்திலே பயங்கரமாக நிழலாடும். 'ஜாக்கிரதை'! 'ஜாக்கிரதை! என்று என்னை எச்சரித்துக் கொண்டே வந்தாய். இதெல்லாம் இப்போதும் உனக்கு நினைவிருக்கும் என்றே நினைக்கிறேன். கடைசியில் ஒரு நாள் நாம் கவலைப் பட்டது நிகழ்ந்தே விட்டது.

"அன்று எல்லோரும் வீட்டுக்குப்போன பின்பும் கிருஷ்ணன் என்னை மட்டும் நிறுத்திக்கொண்டு ஏராளமான கடிதங்களைக் கொடுத்து டைப் அடிக்கச் செய்தார். இடையிடையே வாட்சுமேனைக் கொண்டு காபி முதலியன தருவித்து உபசரிக்கவும் செய்தார். எனக்கென்னவோ மனசு சரியாகவே இல்லை. ஏதோ பெரிய விபத்து எதிரே காத்துக் கொண்டிருப்பதாக அந்தராத்மா அறிவுறுத்திக் கொண்டே இருந்தது.

"இரவு பதினேரு மணி. கிருஷ்ணன் வாட்சுமேனை ஏதோ வேலை ஏவி எங்கோ அனுப்பினர். அவன் சென்றதும் என்னையும் அழைத்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினர். இருவரும் கீழே இறங்கி வந்தோம். ஊரோசை நன்கு அடங்கி விட்டது. தெருவிலே நின்று வாட்சுமேன் வரவை எதிர்பார்த்தோம். கிருஷ்ணன் திடீரென்று, "அடாடா! பர்ஸை மேஜைமீதே வைத்து விட்டு வந்து விட்டேனே. கொஞ்சம் போய் எடுத்து வருகிறீர்களா?" என்ருர். நான் மாடிப் படிகளில் ஏறினேன்.

உடனே கிருஷ்ணன் என்ன செய்தார் தெரியுமா? கட்டிடத்தின் கீழ்த்தளத்திலே மத்திய பாகத்திலே இருந்த ஹாலை நோக்கி விரைந்தார். அந்த ஹால் எப்போதும் பூட்டியே இருக்கும். ஏனென்றால் அதன் மத்தியிலே தான் கட்டிடத்தின் பிரதான முட்டுக்கட்டை இருந்தது. அதன் வசந்தான் இருந்தது கட்டிடத்தின் வாழ்வு. அதற்கு ஹானி ஏற்பட்டால் அந்தக் கட்டிடமே நாசமடைந்துவிடும். முழுவேலையும் பூர்த்திபெற ஆறு மாதத்திற்கு மேல் ஆகும். அதன் பிறகுதான் முட்டுக்கட்டையை தட்டவேண்டும். எனவே அந்த ஹாலின் சாவி கிருஷ்ணனிடமே பத்திரமாக இருந்தது. அந்த நடு இரவிலே அவருக்கு அங்கே என்ன காரியம்?

"மாடிப்படியிலே ஏறத் தொடங்கிய நான் இரண்டாவது படியிலே காலை வைத்ததுமே, 'ஆ' என்று உட்கார்ந்து விட்டேன். அங்கே கிடந்த குண்டூசி என் காலிலே எறிவிட்டது. உட்கார்ந்து அதைப் பிடுங்கலானேன். மறைவிலே இருந்த என் உருவம் கிருஷ்ணன் கண்ணிலே படவில்லை. ஆனால் அவரை என்னால் நன்கு கண்காணிக்க முடிந்தது. அதனாற்றான் இன்று உன்னோடு இப்படி அளவளாவும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

"கிருஷ்ணன் பரபரப்புடன் ஹாலைத்திறந்துகொண்டு உள்ளே போனார். நான் உற்றுக்கவனித்தேன். முன் ஏற்பாடாக எல்லாம் செய்துவைத்திருந்தார் போலும். வலுவான கயிறு ஒன்று முட்டுக் கட்டையிலே கட்டப்பட்டிருந்தது. அதன் மறுதலைப்பைக் கையிலே கொண்ட கிருஷ்ணன் வேகமாகத் தெருவுக்கு ஓடித் தம் பலங் கொண்டமட்டும் இழுக்கலானார். அதைக்கண்ட நான் அவர் அறியாமலே இருளில் மறைந்து தெருவின் மற்றொரு பகுதியை அடைந்து மறைந்து நின்றுபார்த்தேன்.

"அத்தனை பெரிய கட்டிடத்திற்கு ஆதாரமாக உள்ள முட்டுக் கட்டை, கேவலம் ஓர் ஆசாமி இழுத்தால் விழுந்து விடக்கூடியதாக ஒருபோதும் இராது. அவர் முன் யோசனையுடன் அதில் ஏதோ விஷமஞ்செய்து வைத்து, இழுத்ததும் விழுந்து விடும்படிச் செய்திருக்கிறார்.

"கண் இமைக்கும் நேரத்துள் காரியம் மிஞ்சி விட்டது. திடு திடு வென்று கட்டிடம் இடிந்து விழ ஆரம்பித்தது. என் உடம்பு பயத்தால் வெட வெடத்தது. மறு கணம் கிருஷ்ணன் மீது பழி தீர்க்கும் ஆக்கிரோஷம் உக்கிரமாகப் பிறந்தது. அவரை நோக்கிப் பாய்ந் தோடினேன். பிரமை பிடித்தாற் போல நின்றிருந்த அவர் தொலைவில் என்னைக் கண்டதும் யாரோ, என்னவோ என்று உளறியடித்துக் கொண்டு ஓட ஆரம்பித்தார். நானும் தொடர்ந்து ஓடினேன்.

"அவர் திரும்பியே பார்க்க வில்லை. நான் அந்தக் கட்டிடத்திலே சிக்கி மாண்டு போயிருப்பேன் என்பது தானே அவர் எண்ணம்? ஆகவே வேறு யாரோ தம்மைத் துரத்தி வருவதாகத் தான் எண்ணி ஓடியிருக்க வேண்டும். வழியிலே ஓரிடத்தில் நான்

இடறி விழுந்தேன். எழுந்து தொடருவதற்குள் அவர் வெகு தூரம் போய்விட்டார். இடையே ஒரு ஸ்டேஷன் குறுக்கிட்டது. அங்கே புறப்படத் தயாராக ஒரு ரெயில் நின்று கொண்டிருந்தது. கிருஷ்ணன் அதில் தாவி ஏறினர். நான் செல்வதற்குள் ரெயில் போய் விட்டது. சோர்ந்த உள்ளத்துடன் நான் வீடு திரும்பினேன். இது தான் நடந்த கதை—"

"இதை ஏன் மூடி வைத்து விட்டீர்கள்? பாவம் சுந்தரி விதவைக் கோலம் பூண்டு துக்கத்தில் மூழ்கித் துடிக்கிருளே?" என்று பரபரப்புடன் கேட்டாள் அபிராமி. ராமலிங்கம் சிரித்தார். பிறகு சொன்னர்.

"அபிராமி, நான் அதைச் சொல்லியிருந்தால் என்ன ஆகியிருக்கும் தெரியுமா? இப்போது பொய்யாக விதவைக் கோலம் பூண்டுள்ள சுந்தரி அப்போது மெய்யாகவே விதவை ஆக நேரிடலாம். அல்லது அவளுக்குப் பைத்தியம் பிடிக்கலாம். குழந்தை லீலாவதியின் கதி பரிதாபமாகலாம். ஒருவனைக் கொலை செய்ய முயன்ற குற்றம், லட்சம் பெறுமானமுள்ள கட்டிடத்தை நாசமாக்கிய குற்றம் இரண்டினின்றும் கிருஷ்ணன் தப்ப முடியாது. அதனுற்றான் அன்று முழுப் பூசனிக்காயை இலைச் சோற்றிலே மறைத்து நடித்தேன் நினைவிருக்கிறதா?....... அன்றிரவு ஒரு மணிக்கு வந்து கதவு தட்டினதும் திறந்து நீ கவலையோடு, "ஏன் இவ்வளவு நேரம்?" என்று கேட்டாய். சினிமாவுக்குப் போயிருந்ததாகப் பொய் சொன்னேன். சிறிது நேரத்திற்கெல்லாம் வாட்சுமேன் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடிவந்தான். என்னைக் கண்டதும் திகைத்து, "எப்போ வீட்டிற்கு வந்தீர்கள்?" என்ருன். நான் மிக்க அமைதியை வரவழைத்துக் கொண்டு, "மானேஜர் உன்னை வெளியே அனுப்பிய உடனேயே என்னையும் வீட்டுக்கு அனுப்பிவிட்டார். மனசு அலுப்பாய் இருந்தது. சினிமாவுக்குப் போனேன். அவர் மட்டும் தனியே மாடியில் அமர்ந்து வேலை செய்து கொண்டிருந்தார்" என்று கூறி விட்டு, "ஏன்? என்ன விசேஷம்?" என்று வினவினேன். இதெல்லாம் கூட உனக்கு நினைவிருக்குமே? அவன் உடனே நாக்குழற, "கட்டிடம் இடிந்து விழுந்து தரை மட்டமாகி விட்டது; மானேஜர் வீட்டுக்கு ஓடிப் போய் பார்த்தேன். அங்கே அவர் இல்லே. அதனுல் அவர் அந்தக் கட்டிடத்திலே சிக்கி இறந்து போயிருப்பார் என்று நினைக்கவேண்டி இருக்கிறது. பாவம் மானேஜர் சம்சாரம் புழுவாய்த் துடிக்கிருங்க" என்ருன். உடனே நான் அவனேடு கிளம்பிச் சென்றேன்.

இப்படி நடிக்காமல் நான் அன்று உண்மையைச் சொல்லியிருந்தேனுனல் கிருஷ்ணனைப் போலீஸ் சல்லடை போட்டுச் சலிக்கத் தொடங்கியிருக்கும். அவர் கட்டாயம் போலீஸிடம் சிக்கியிருப்பார். அதனுல் அவருக்கும் கஷ்டம், அவர் குடும்பத்துக்கும் கஷ்டம், உனக்கும் கஷ்டம், எனக்கும் மான நஷ்டம். அபிராமி, சொல்லப் போனுல் உன்னை உத்தேசித்துத் தான் நான் அப்படி நடந்து

கொண்டேன் என்பதுதான் முற்றும் பொருந்தும். நீ மட்டும் அடிநாளிலேயே அந்த விஷயங்களை என்னிடம் சொல்லியிராவிட்டால்''...என்று நிறுத்தினார் ராமலிங்கம். அபிராமி சிந்தனை வசப்பட்டுச் சிலையாய்ச் சமைந்து போனாள். அவள் நினைவோட்டத்திலே பழைய சம்பவங்கள் அடுக்கடுக்காகப் 'பளிச்சிடத் தொடங்கின.

ஃ ஃ ஃ

கிருஷ்ணனும் அபிராமியும் சிறுபிராயத்தில் நட்பு உடையவர்கள். ஆனால் அவர்களுடைய திருமணப் பருவத்திலே பெற்றோரிடையே தோன்றிய மனஸ்தாபம் காரணமாக அபிராமி ராமலிங்கத்தின் மனைவியானாள். கிருஷ்ணன் துடியாய்த் துடித்தான். ஜகத்தையே அழித்து விடுகிறாற் போலக் கோபங் கொண்டு கொதித்தார். 'நான் ஆள வேண்டிய அபிராமியோடு எவனோ ஒருவன் குலவுவதா? அவனை ஒழித்துக் கட்டி விடுகிறேன்' எனப் பொருமினார். ஒன்றும் நடைபெறவில்லை. அபிராமிக்கு ரகசிய கடிதங்கள் எழுதினார், இருவருமாக வெளிநாடுகளுக்கு ஓடி விடலாமென்று. அவள் பல கடிதங்களுக்குப் பிறகு வெகு சாந்தமாக, விவேகமாக, கிருஷ்ணனுக்குப் புத்திமதி கூறி ஒரு கடிதம் எழுதினாள். அதைக் கண்டு கிருஷ்ணன் திருந்தி அடங்கி விட்டார். அல்ல; அடங்கி விட்டாற் போல நடந்து கொண்டார். உள்ளே தீயும் மேலே சாம்பலுமாக.

வெகு காலத்திற்குப் பிறகு—அபிராமி கோபாலனுக்குத் தாயாகவும், கிருஷ்ணன் லீலாவதிக்குத் தகப்பனாகவும் ஆன பிறகு—விதி மீளவும் அவர்களைக் கூட்டி வைத்தது. கிருஷ்ணன் மானேஜராக வேலைபார்த்த பிராஞ்சு ஆபீசுக்கு ராமலிங்கம் மாற்றலாகி வந்தார். வந்த பிறகுதான் கிருஷ்ணன் அங்கு மானேஜர் என்பது அபிராமிக்குத் தெரியும். முன்பே தெரிந்திருந்தால் அவள் போதிய முயற்சி எடுத்துக் கொண்டு தகுந்த பரிகாரம் தேடியிருப்பாள். பின்னர் அது சாத்தியமில்லாது போய்விட்டது.

ராமலிங்கத்தை மணந்து கொண்ட உடனேயே அபிராமி கிருஷ்ணனுக்கும் தனக்கும் இருந்த பால்ய நட்பைப் பற்றி விவரமாகக் கூறி விட்டாள். கூறாமலே இருந்து விடலாம் என்று தான் பார்த்தாள். ராமலிங்கத்தின் கரை கடந்த அன்புக் கெதிரில் அவள் உள்ளத்தில் எந்த ரகசியமும் தங்கவில்லை. விவரமறிந்த ராமலிங்கமும், இது சகஜம் என்று கன அலட்சியமாகக் கூறினாரே தவிர அதை ஒரு பொருட்டாக எண்ணவேயில்லை. அபிராமி தன் கணவனின் பெருந்தன்மையான போக்கைக் கண்டு உள மகிழ்வு கொண்டாள். ஆனால்—

கனவுபோல் தேய்ந்து மறைந்து போன ஒரு விஷயம் பல வருஷங்களுக்குப்பின் புத்துயிர் பெற்றுப் பிரம்மாண்டமான உருவத்துடன் எதிரே வந்து நின்றபிறகு அபிராமியால், ஏன்? ராமலிங்கத்தினால்கூடத்தான் அசட்டையாக இருக்க முடியவில்லை.

கிருஷ்ணனை முன்னதாக அறியாத ராமலிங்கம் மனத்தில் சிறிதும் கபடற்ற முறையிலே நடந்து கொண்டார். இரண்டொரு நாட்களுக்குப் பின்னர் குசலப் பிரச்சனத்தின் மூலம் ராமலிங்கத்தை இன்னார்என்றறிந்துகொண்ட கிருஷ்ணன் கபடத்துடன் நடந்து கொள்ளத் தலைப்பட்டார். பழைய நினைவுகள் தோன்றி அவரைத் தகிக்க ஆரம்பித்தன. ஏதேதோ முயற்சிகளை மேற்கொண்டார். ராமலிங்கம் காரியாலயத்தில் இருக்கக்கூடிய சமயமாகப் பார்த்து அவர் வீட்டுக்குச் சென்று அபிராமியோடு உறவாட முயன்றார். சாம தான பேதம் ஆகிய பல முறைகளையும் கைக்கொண்டார். அபிராமி சரியானபடி நடந்துகொண்டாள். தோல்வியிலே எழுந்த தீ ஜ்வாலை விட்டெறிய வெகுட்சியுடன் திரும்பினார் கிருஷ்ணன். உரிய காலத்தில் வீட்டையடைந்த கணவனிடம் அபிராமி நடந்ததை நடந்தபடி கூறினாள். அம்போது தான் ராமலிங்கம் தமது மானேஜரைப் புரிந்துகொண்டார்.

அன்று முதல் ஆரம்பமாகி விட்டது ராமலிங்கத்திற்கு கஷ்டகாலம். கிருஷ்ணன் மறைமுகமாகப் பற்பல இன்னல்களை விளைத்து வந்தார். அந்த அளவிலே அவர் உள்ளம் திருப்தியுறுவதாயில்லை. தனக்கு உதவாத பாலைக் கொட்டிக் கவிழ்த்து எவருக்கும் உதவாததாகச் செய்துவிடுகிற முறையில் ராமலிங்கம் அபிராமியின் வாழ்க்கையை அடியோடு நாசம் செய்துவிடத் திட்டமிட்டார். அதன் விளைவு தான் அந்தக் கட்டிட விபத்து. ஆனால் அது எப்படி முடிந்தது? தனக்குத்தானே வெட்டிக் கொண்ட புதை குழியாக ஆகி விட்டது.

ஃ ஃ ஃ

நீண்ட நேரத்திற்குப் பின் சிந்தனையிலிருந்து விடுபட்ட அபிராமி தன்னைச்சுற்றி நோக்கியபோது அங்கே ராமலிங்கத்தைக் காணவில்லை. தெருபக்கம் அவர் குரல் கேட்டது. கல்யாண ஏற்பாடு சம்பந்தமாக யாருடனோ பேசிக் கொண்டிருக்கிறார் என்று தெரிந்தது. நீண்ட பெருமூச்சுடன் இருக்கையை விட்டெழுந்தவள் "கடவுளே! உன் திருவுள்ளம் ஏதோ! கிருஷ்ணன் போய்விட்டார் என்பது ஒருவகையில் மனசுக்குத் துன்பத்தையளித்தாலும் ஒரு வகையில் நிம்மதியாயிருந்தது. அந்த நிம்மதியை அடிப்படையாகக் கொண்டு குழந்தைகளின் மனக்கோட்டையைத் தகர்க்கக் கூடாதென்று இந்த ஏற்பாட்டிலே இறங்கிற்று. கிருஷ்ணன் இருக்கிறார் என்றால்? திடீரென்று எங்கிருந்து, எப்போது, எப்படி வருவாரோ, என்ன செய்வாரோ, என்ன விளையுமோ!... கடவுளே! நீதான் எங்களைக் காப்பாற்ற வேண்டும். குழந்தைகள் சந்தோஷமாக வாழ அருள் புரிய வேண்டும்." என்று மனசுக்குள் புலம்பியவாறு அலுவல்களைக் கவனிக்கச் சென்றாள்.

வாத்தியங்களின் கோஷம் வானைப்பிளக்க, தெருவடைத்து அலங்காரத்துடன் விளங்கிய கொட்டாரப் பந்தலில் ஜே ஜே என்று கூட்டம் நெரியக் கனமோக்களாவாக ராமலிங்க முதலி

யார் வீட்டிலே திருமண வைபவம் நிகழ்ந்து கொண்டிருந்தது. கோபாலனும் லீலாவதியும் தம்மை மறந்து ஆனந்த நிலையிலே மணவறையிலே அமர்ந்திருந்தனர். சுந்தரி இன்பமும் துன்பமும் கலந்த உணர்ச்சி வெள்ளத்திலே மூழ்கியவளாய் ஒரு புறமாக இருந்து வைபவத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள்கண்கள் தாரையாக நீரை வழியவிட்டபடி இருந்தன. ராமலிங்கமும் அபிராமியும் புத்தாடை தரித்துப் பூரித்த உள்ளத்துடன் காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தனர். இடையிடையே சுந்தரியைக் காணும் போது மட்டும் அவர்கள் உள்ளம் துணுக்குறும். 'பாவம்' என்று மனம் அங்கலாய்க்கும். அவளிடம் ரகஸியமாக விஷயத்தைத் தெரிவித்துச் சந்தோஷமாக இருக்கும்படி சொல்லலாமா எனப் பல தடவை ஆலோசித்தனர் தம்பதிகள். பின்னர் அது சரியல்லவென்று அந்த யோசனையைக் கைவிட்டனர்.

தாலி கட்டும் நேரம். அப்போது திடீரென்று வாசற் புறத்திலே ஏதோ குழப்பம். ராமலிங்கம் என்னவென்று விசாரித்தார். யாரோ பைத்தியக்காரக் கிழவன் உள்ளே புக முயன்றதாகவும் சிப்பந்திகள் தடுத்ததாகவும், பைத்தியம் முரண்டினதாகவும் சிப்பந்திகளில் ஒருவன் பைத்தியத்தைப் பிடித்து நெட்டித் தள்ளினதாகவும் கிழவன் கீழே விழுந்து மூர்ச்சையாகி விட்டதாகவும் தகவல் கிடைத்தது. ராமலிங்கத்தின் உள்ளத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் மின்னலிட்டது. வேகமாக வாசற்புறம் சென்றார். கூட்டத்தை விலக்கிக் கொண்டு கிழவனிடம் சென்றார். ஏற இறங்கப் பார்த்தார். அருகில் இருந்த சிலர் "இந்த ஆசாமியைப் பார்த்தால் அந்தக் கட்டிடத்தில் அகப்பட்டுக் காலமான கிருஷ்ணன்மாதிரி இல்லை" என்றார்கள்.

ராமலிங்கம் கிழவனைக் கொண்டுவந்து ஓர் அறையில் கிடத்தி யாரையும் அங்கே அணுக விடாதபடிச் செய்து கிழவனை ஆசுவாசப்படுத்தத் தொடங்கினார். அபிராமி மட்டுமே அருகில் இருந்து உதவினாள்.

கிழவனுக்குப் பிரக்ஞை வந்தது. ஒரேபார்வையில்ராமலிங்கம் அபிராமி இருவரையும் யாரென்று நிதானித்துக்கொண்டு சக்தியனைத்தையும் திரட்டிக் கொண்டு எழுந்து தடாலென்று அவர்கள் முன் விழுந்து பணிந்து மௌனக் கண்ணீர் வடித்தார். இடையே சுந்தரியிடம் சுருக்கமாக அனைத்தையும் கூறி அவளை மறைவாக நிறுத்தியிருந்தாள் அபிராமி. ராமலிங்கம் விஷயத்தைப் பலரறிய பகிரங்கப்படுத்த விரும்பவில்லை. எனவே நால்வர் அறிந்த ரகசியமாக அதை வைத்துக்கொண்டு ஆகவேண்டியதைக் கவனித்தார். கூட்டத்தில் குழப்பம் நீங்கி அமைதி நிலவிற்று.

ஜாம் ஜாம் என்று கல்யாணம் நடந்தது. கிருஷ்ணன் கண் குளிரக் கண்டார். மணமக்களுக்கு சாவதானமாக, போதிய அளவில் விஷயத்தைத் தெளிவு செய்தார் ராமலிங்கம். லீலாவதிக்கு எல்லையற்ற ஆனந்தம். எல்லாவற்றி

லும் அதிக ஆனந்தம் பெற்றவள் அபிராமிதான். காரணம் வேறென்ன? கிருஷ்ணனின் மனம் தூய்மை பெற்றதுதான். அவள் கவலைப்பட்டபடி எதுவும் நிகழவில்லை. இரு குடும்பங்களும் அன்று முதல் ஒரே குடும்பமாக எல்லையற்ற ஆனந்த வாழ்விலே ஈடுபட்டதைக் கண்டு ஊரே வியந்தது.

# மகிழம்தோப்பு

## "உமா சந்திரன்"

*[பின்னணியில்மெல்லியஸிதார் ஒலி]*

பூபதி: அப்பா என்ன ஆனந்தம், என்ன இன்பம், எத்தனை நாளாகிறது இந்த வாசனையை அனுபவித்து. இளம் தென்றலோடு கலந்து வரும் இந்த இனிய சுகந்தம் எத்தனை யெத்தனையோ ரம்யமான நினைவுகளை என் மனதில் எழுப்பி என்னைப் பரவசப் படுத்துகிறது. இவ்வளவு காலம் கழித்துத் திரும்பி வரும் என்னை வரவேற்பதற்காக, எல்லா மகிழ மரங்களும் ஏககாலத்தில் பூத்து நிற்கின்றனவா? எங்கெங்கோ அலைந்தேன், எங்கெங்கோ திரிந்தேன், ஆனால்நாம் எங்கிருந்தாலும் என் மகிழம் தோப்பு என்னை அழைத்து கொண்டுதானிருந்தது. கடைசியில் வந்தேவிட்டேன். (ஸிதார் ஒரு கணத்திற்கு உயர்ந்து ஒலித்துத் தணிகிறது.) அல்லது அவ்வளவும் பிரமைதானோ? நான் கனவு காணவில்லையே. இல்லை, இல்லை. அதோ தெரிகிறதே மரங்களுக்கு நடுவே அந்த வெளிச்சம் அதுதான் வீடு. முனிசாமி என்னை எதிர் பார்த்துத் தான் வீட்டில் விளக்கேற்றி வைத்திருக்கவேண்டும்.—அப்பா இந்த மகிழ மலர்களின் மெல்லிய நறுமணத்திற்கு ஈடாக எதைச் சொல்ல முடியும்? என் வயதைப் பற்றிய நினைவு எங்கோ மறைந்து விட்டதே. முப்பதுவருஷங்களுக்கு முன்பிருந்த தெம்பும் துடிப்பும் என்ரத்தத்தில் பரவுகின்றன. வீட்டுக்குத் தோப்பென்று பெயர் சூட்டிய இந்த மகிழ மரங்கள் எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து இப்படியே மணம் பரப்பிக்கொண்டு நிற்கின்றன. இன்னும் எத்தனை வருஷகாலம் நிற்குமோ, யார் கண்டது?

வாழ்வின் உதயத்தை இங்கு கண்டேன். அஸ்தமனத்தை நாடி இன்று வந்திருக்கிறேன். நான் வந்து சேர்ந்திருக்கும் நேரமும் பொருத்தமாகத்தான் இருக்கிறது. மங்கலான நிலா இந்த மரங்களுக்கு எத்தகைய கம்பீரத் தன்மையைத் தந்து விடுகிறது. ஆனால் இந்த அமைதி ஒரு சுமைபோல் என் நெஞ்சை யழுத்துகிறது. பக்ஷிகளெல்லாம் தூங்கிக்கொண்டிருக்கின்றன. காலையானதும் எப்படிக் கூச்சலிட ஆரம்பித்து விடும். மரத்துக்கு மரம் பறந்து தேனையுறிஞ்சும் சிட்டுக் குருவிகளை நாளைக் காலை பார்ப்பேன். சிட்டுக் குருவி யொன்றை எப்படியாவது பிடித்துவிடவேண்டும் என்று அந்த நாளில் எவ்வளவு பாடு பட்டிருக்கிறேன். கடைசியில் என் முயற்சியெல்லாம் வீணாயிற்று. கைக்கெட்டாத சிட்டுக் குருவி போலவே அவளும்... ஆனால் அந்த நினைவு இப்போது எங்கிருந்து வந்தது.

முனிசாமி: யாரது?

பூப: முனிசாமியா?

முனி: சின்ன எசமானு? ஒரு குரல் குடுத்தா விளக்கை எடுத்துக்கிட்டு ஓடி வந்திருப்பேனே இருங்க, விளக்கைப் பெரிசாக்கிடறேன்—இதென்ன சின்ன எசமான்?

பூப: இதென்ன முனிசாமி?

முனி: நீங்கதான்னு நம்பவே முடியலியே.

பூப: நீ தான்னு நம்ப முடியல்லியே!

முனி: அப்பபாத்த முனிசாமியாகவே இன்னிக்கும் இருப்பேன்னு நினைச்சிங்களா?

பூப: நான் மட்டும்?

முனி: ஆமா, உங்களை இப்படிப் பாக்கப்போறேம்னு நான் சொப்பனத்திலேகூட நினைக்கலே, சின்ன எசமான்.

பூப: முப்பது வருஷம் ஆகியும் பழய பட்டம் போகலேன்னு சொல்லு.

முனி: அதெப்படிங்க? முப்பது வருஷமென்ன, முன்னூறு வருஷமே ஆகட்டும், எங்க சின்ன எசமான் எப்போதுமே சின்ன எசமான்தான் எங்களுக்கு.

பூப: இதுக்கு என்னசொல்ல?

முனி: உக்காருங்க சின்ன எசமான், கூடத்து விளக்கை ஏத்திட்டு வந்துடறேன். (போகிறான். ஸிதார் ஒலி)

பூப: சின்ன எசமான், முனிசாமியின் இந்த அழைப்பு எத்தனையெத்தனை எண்ணங்களைக் கிளறி விடுகிறது. அந்தப் பெயருக்குப் பொருத்தமாக நான் இருந்த காலத்தில் வாழ்க்கை எவ்வளவு ரம்யமாயிருந்தது. மனதில் எல்லையில்லாத நம்பிக்கையும் குதூகலமும் குடி கொண்டிருந்தது. வாழ்வு ஓர் இன்பச் சோலையாய், தெவிட்டாத மகிழ்ச்சி நிறைந்ததாயும், என்முன்னே பரந்து கிடந்தது. ஆனால், இன்று வாழ்க்கை ஒரு சுமை, தவிர்க்க முடியாத பாரம் எனக்கு. (ஸிதார் ஒலி கேட்டு சட்டென்று நிற்கிறது)

முனி: கூடத்திலே விளக்கேத்திட்டேனுங்க. அங்கே உக்காரதானே.

பூப: பரவா யில்லே. இங்கேயே சௌகரியமாயிருக்கு.

முனி: சின்ன எசமான், இந்தச் சாய்மானத் திண்ணையிலே சாஞ்சுக்கிட்டு நீங்க உக்காந்திருக்கறதைப் பாத்த உடனே, சட்னு என் மனசு எப்படி பிரமை தட்டிப் போச்சுங்கறீங்க?

பூப: என்ன?

முனி: பெரிய அய்யாதான் உக்காந்திருக்காங்களோன்னு தடுமாறிட்டேன். தத்ரூபம் அப்படியே இருந்துட்டுது. அவங்களையே உரிச்சு வைச்ச மாதிரி கையைச் சாய் மானத்து மேலே வச்சு கழுத்தைத்தாங்கலா பிடிச்சிட்டிருக்கற தோரணை கூட அவங்க தோரணைதான்.

பூப: ஆமாம்பா, இப்போ நானும் தாத்தாவா யிட்டேன் இல்லையா?

முனி: அதுக்குச்சொல்லலிங்க. நீங்க இப்படிச் சாஞ்சு உக்காந்

திருக்கறதைப் பாத்ததும் குப்புன்னு என்னென்னமோ பழய ஞாபக மெல்லாம் வந்து, மனசை என்னமோ வேதனை பண்ணிச்டுசிங்க.

பூப : வேதனையா ?

முனி : அந்த நாளையிலே பெரிய அய்யா ராத்திரிச் சாப்பாடானதும் இப்படித்தான் உட்காந்திருப்பாங்க. தோப்பு வீடு இப்படிப் பாழடைஞ்சு போரும்னு, அந்த நாளையிலே யாரானும் நினைச்சிருப்பாங்களா ? வரவங்களும் போரவங்களும், குழந்தைகளும் குட்டிகளும், எப்பப் பாத்தாலும் வீடு எவ்வளவு கலகலப்பா இருந்திட்டியிருக்கும். மாசம் தவறும வீட்டிலே ஏதேனும் விசேஷம் இருக்கும். அதையொட்டி ஒரு வாரம் முன்னும் பின்னும் வீடு திருவிழாப்பட்டபாடு படும். அந்த நாளையும் பாத்தாச்சு, இப்போ இந்த நாளையும் தான் பாத்கிட்டிருக் கேன்.

பூப : அதை நினைச்சு என்ன செய்ய, முனிசாமி.

முனி : மன்னிச்சுக்குங்க சின்ன எசமான். ஏதோ மனசிலே தோணினதை அப்படியே கொட்டிட்டேன்.

பூப : அதிலே என்ன தப்பு, இத்தனை நாள் கழிச்சுத் திரும்பி வந்த சின்ன எசமான் தனிக் கட்டையாத் திரும்பி வந்திருக் காரேன்னு உனக்கு ஏமாத்தமா யில்லையா ?

முனி : நீங்களாவது திரும்பி வந்திங்களேன்னு நான் சந்தோஷம்தான்படறேன் சின்ன எசமான். ஆனு ஒன்னு, நாடெல்லாம் சுத்தினிங்க, எங்கெங்கேயோ பெரிய பெரிய வேலையெல்லாம் பாத்திங்க. இவ்வளவு காலத்திலே, ஒரு குடும்பம்னு ஏற்படுத்திக்கிட்டு, குழந்தை, குட்டி, பேரன் பேத்திகளோடே நீங்க வந்திருக்கலாம். ஆனு அதுக்கு இந்த வீடு குடுத்துவைச்சிருக்கணும் பாருங்க.

பூப : என் மனசு உனக்குத் தெரியாது. முனிசாமி.

முனி : தெரியாம என்னங்க? ஆனு அதெல்லாம் இப்பப் பேசிக்கிட்டு நின்னு?—தங்கம்மா, தங்கம்மா ?

தங் : (தூரத்தில்) இதோ வந்திட்டேம்பா.

பூப : உன் மகளா?

முனி : ஆமங்க. அவ அம்மா தவறிட்டதிலேருந்து இந்தப் பொண்ணு என்கூடவேதான் வந்து இருக்குது.

பூப : வள்ளி தவறிட்டாளா? அடாடா.

முனி ; தெய்வம் என்னை எப்படி எப்படியோ சோதிச்சிடுத்துங்க.

பூப : உனக்கும் அவளுக்கும் கலியாணம் நடந்தது நேத்து நடந்தமாதிரி இருக்கு!

முனி : ஆமங்க, நீங்க தானே கூட இருந்து நடத்தி வச்சிங்க— அதான் சொல்றேனே, அந்த நாள் இனிமே திரும்பி வராதுங்க.

தங் : கூப்பிட்டியாப்பா.

முனி : வெறுங்கையோடவா

வந்தே? சின்ன எசமான் வந்திருக்காங்க, பாரு.

தங் : இவங்களா?

முனி : இவங்க நம்ம தெய்வம் மாதிரி, தங்கம்.

தங் : கும்பிடறேனுங்க.

பூப : அட இதென்ன எழுந்திரம்மா.

முனி : ஓடு தங்கம், மோரும் பழமும் எடுத்திட்டு வா, சீக்கிரம்.

தங் : இதோ கொண்டு வந்திட்டேனுங்க. (ஓடுகிறாள்)

பூப : அதெல்லாம் தேவையில்லே, முனுசாமி.

முனி : உங்களுக்காக இல்லே, எங்க திருப்திக்காக.

பூப : தோப்பிலே குடிசை போட்டுக்கிட்டா இருக்கே? வீட்டிலேயே ஒரு பக்கம் இருக்கக் கூடாது?

முனி : அரமனை மாதிரி வீடு காலியாத்தான் கிடக்கு, இல்லேங்கலே, ஆனா வந்து இருக்க என் மனசு சம்மதிக்க வேண்டாமா? எப்படி எப்படியோ இருந்த வீடாச்சே—இருங்க, ஒரு நிமிஷத்திலே வந்திடறேன். (போகிறான்.)

(ஸிதார் ஒலி)

பூப : ஆம் எப்படியெப்படியோ இருந்த வீடு தான் இப்போது இப்படி இருக்கிறது. தோப்புவீடென்றால் அந்த நாளில் ஜனங்கள் எவ்வளவு கௌரவத்துடன் பேசிக் கொள்வார்கள். ஊரில் எந்த காரியம் நடந்தாலும் அதற்குக் கேந்திரமாயிருந்தது மகிழம்பூ தோப்பு. தாத்தா தெய்வம் போலிருந்து எல்லோரையும் ஒன்று படுத்தி வைத்தார். அவர் உட்கார்ந்த அதே திண்ணையில் நானும் உட்கார்ந்திருக்கிறேன். அவரைப் போலவே இருக்கிறேனும். அதில் திருப்தி யடைய வேண்டியதுதான்.

மயில் கத்தும் சத்தமா? மகிழந்தோப்பில் இன்னும் மயில் இருக்கிறதா என்ன? ஏன் இராது தாத்தா வளர்த்த மயிலின் சந்ததிதான், சந்தேகமில்லை. அந்த மயிலிடம்தான் தாத்தா எப்படி அன்பு வைத்திருந்தார். அவர் திண்ணையில் வந்து உட்கார்ந்தால் போதும், அதுவும் எங்கிருந்தாவது வந்து அவரது அவர் காலடியில் நிற்கும். மயிலிடம் மட்டுமா? ஒரு கவர்ச்சியும் இல்லாத ஓணானிடம் கூட, அவர் எவ்வளவு பாசம் காட்டி வந்தார். அவருடைய தெய்வீக அன்பல்லவா இந்த வீட்டிற்கு, அவ்வளவு மகிமை கொடுத்தது. அது போன பின்பு வீடே களையிழந்து விட்டது.

[ஸிதார் ஒலி நிற்கிறது]

முனி : இப்படி வை, தங்கம்.

பூப : போதும், மோர் மட்டும் போதும்.

முனி : ஸ்டேஷனுக்கு வண்டி அனுப்பியிருந்தேனுங்களே, வரலியா ?

பூப : வண்டிக்காக நான் காத்திருக்கலே. இந்த நிலாவிலே நடந்தே வரணும்னு ஆவலாயிருந்தது. வண்ர வந்தா சாமானை

மட்டும் ஏத்தி அனுப்பச்சொல்லிட்டுநான் முன்னலேயே நடந்து வந்திட்டேன்.

தங் : நாலு மைல் தூரம் நடந்தா வந்தீங்க.

முனி : இதைத் சொல்றயே, தங்கம். படிக்கற நாளேயிலே ரசாவுக்கு ஊருக்கு வருவாங்களே, அப்பவும் இப்படியேதான் நான்தான் டேசனுக்கு வண்டி கட்டிக்கிட்டுப் போய்க் காத்திருப்பேன். ஒரு நாளாவது வண்டியிலே வர்ர பழக்கம் கிடையாது. நடந்துதான் வருவாங்க. பெட்டி படுக்கை மட்டும்தான் வண்டியிலே வரும்.

பூப : இப்போ நடந்து வரும் போது அந்தப் பழய நாளேயெல்லாம் எண்ணிப் பார்த்துக்கிட்டே தான் நடந்து வந்தேன்.

முனி : அதெல்லாம் நினேச்சுப் பாத்தா சொப்பனம் மாதிரில்லே இருக்கு.

பூப : தோப்பிலே மயில்கூட இக்காப்பலே இருக்கே, முனி சாமி.

முனி : ஆமாங்க. பெரிய அப்பா நாளேயிலே இருந்திச்சே, அதுக்கும் இதுக்கும் துளிக்கூட வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது. நீங்க பாத்தா அதுவேதான்னு சொல்லுவிங்க.

[சலங்கை சத்தம்]

பூப : அதோ சாமான்கள் கூட வந்திட்டாப்பலே இருக்கு.

முனி : என்னங்க, ஒரு பெட்டியும் படுக்கையும் மட்டும்தானு?

பூப : பின்னே, நான் ஏகாங்கிதானே இந்த ஆஸ்தி போதாதா?

முனி : நீங்க இப்படிப் பேசும் போது என் மனசு என்ன வேதனேப்படுது தெரியுமா ?

பூப : நம்ம வேதனே உண்மையை மாத்த முடியுமா சொல்லு.

முனி : உலகத்தையே வெறுத்த மாதிரில்லே பேசறிங்க.

பூப : உண்மையிலே முனிசாமி, ஒரு சந்நியாசிபோல என் கடைசி நாட்களேக் கழிக்கத்தான் மகிழந்தோப்பைத் தேடி வந்திருக்கேன்.

முனி : நீங்க களேச்சுப் போயிருக்கிங்க சின்ன எசமான். படுக்கை போட்டுடறேன், படுத்துக்குங்க. மத்தது நாளேக்குப் பேசிக்கிடலாம்.

பூப : வெளியே அந்தக் கல் மேடை இருக்குபாரு, அதிலேயே படுக்கையை விரிச்சிடு.

முனி : திறந்த வெளியிலேயா படுத்துக்கபோறிங்க? காலேயிலே பனி பெய்தாலும் பெய்யுமே.

பூப : பாதகமில்லே. அந்தப் பனியெல்லாம் எனக்குப் பழக்கமானதுதான்.

முனி : சரிங்க, உங்க இஷ்டம். [போகிருன்]

பூப : நீ ஏன் நிக்கறே தங்கம்? இதெல்லாம் எடுத்திட்டுப்போ.

தங் : பழமெல்லாம் சாப்பிடாம வச்சிட்டிங்களே.

பூப : இப்போ வேண்டாம்.

நாளைக்கு எவ்வளவு குடுத்தாலும் சாப்பிடறேன்.

தங்: இதோ அப்பாகூட வந்திட்டாங்க.

முனி: படுக்கை போட்டாச்சு, கின்ன எசமான்.

பூப: நான் படுத்துக்கறேன், நீங்க போங்க.

முனி: நிம்மதியாத் தூங்குங்க. காலையிலே எழுப்பறேன்.

[ஸிதார் ஒலி]

பூப: என் மனம் ஏன் இப்படி வேதனையடைகிறது? எதை நினைத்து வேதனையடைகிறது? வாழ்வில் ஏதோ சக்தி என்னைப் பிடித்துத் தள்ளிக் கொண்டிருக்கிறது. வாழ்வு முடியும்வரை என் மனம் எதிலும் நிலைபெறுமல் இப்படியேதான் தத்தளித்துக் கொண்டிருக்குமோ? என்னளவில் வாழ்வில் இன்பமும் சாந்தியும் வெறும் கானல் நீராய்த்தானே முடிந்திருக்கிறது. அமைதியை நாடி இங்கு வந்தேன். வந்த கணத்திலிருந்து மனது அமைதியிழந்து தவிக்கிறது. அதே வீடு. அதே தோப்பு, தென்றலும் மாறவில்லை. மகிழ மலர்களின் இனிய மணமும் மாறவில்லை. ஆனல் என் இன்பச் சோலை எங்கே? இந்தக் கல் மேடையில் படுக்கை போடச் சொன்னேனே, ஏன்? ஒரு காலத்தில் இந்த மேடை எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தந்திருக்கிறது. சிலு சிலுவென்று தென்றல் வீசும் மாலை நேரத்தில் இதே கல்மேடைமேல் உட்கார்ந்து என் சுந்தரி வீணையில் இனிய நாதம் எழுப்பிக் கொண்டிருப்பாள். அந்த நிலையில் அவள் வனதேவதையோ என்ற பிரமிப்பு எனக்கு ஏற்படும். இதோ, இந்த மகிழமரத்தில் சாய்ந்து கொண்டுதான் எத்தனையோ நாட்கள் அவளுடைய அழகிலும் இசையிலும் மனதைப் பறிகொடுத்து நின்றிருக்கிறேன். எவ்வளவு இன்பமான நாட்கள் அவை.

[வீணை இசை]

இதென்ன, இந்த வீணையின் நாதம் எங்கிருந்து வருகிறது. சுந்தரி.

சுந்: என்னை நீங்கள் அறிந்து கொள்ளவில்லையா?

பூப: நீ எங்கிருக்கிருய், சுந்தரி.

சுந்: நீங்கள் எட்ட முடியாத இடத்தில்.

பூப: உன்மேல் நான் கொண்டிருக்கும் அன்பு உனக்குத் தெரியாதா. சுந்தரி உன்னுடைய நினைவல்லவா என்னை இங்கு இழுத்து வந்தது.

சுந்: சிட்டுக் குருவி யென்று எனக்குப்பெயர் வைத்தீர்களில்லையா? உங்கள் சிட்டுக்குருவி எட்டாத கொம்பிற்குப் பறந்து சென்றுவிட்டது.

பூப: கவலை சிறிதும் இல்லாமல் மகிழ்ச்சியும் குதூகலமுமே உருவாயிருந்த உன்னைச் சிட்டுக்குருவி யென்று நான் அழைத்தது தப்பா?

சுந்: சிட்டுக்குருவியின் மேல் உங்களுக்கு ஆசை அதிகமென்று

எனக்குத் தெரியும். ஆனால் எந்தச் சிட்டுக்குருவியையாவது உங்களால் பிடிக்க முடிந்ததா ?

பூப : ஒருதரம் நான் கோடை லீவுக்கு வந்திருந்தபோது, நீ என்னைப் பார்க்க ஸ்டேஷனுக்கு வந்திருந்தாயே, நினைவிருக்கிறதா? முனிசாமியை முன்னால் அனுப்பிவிட்டு நீயும் நானும் ஸ்டேஷனிலிருந்து நடந்து மகிழந்தோப்புக்கு வந்தோம். வழியெல்லாம் என்னென்ன கதைகள் பேசிச் சிரித்துக்கொண்டு வந்தாய் நீ.

சுந் : எனக்கு நீங்கள், உங்களுக்கு நான் என்று அவ்வளவு உறுதியாயிருந்தோமில்லையா? அதனால்தான் தெய்வம் நம்மை இப்படி சோதித்துவிட்டது.

பூப : தாத்தா மட்டும் அப்போது இருந்திருந்தால், நமக்கு இந்த ஏமாற்றம்நேரச்சம்மதித்தேயிருக்கமாட்டார். உன் தகப்பனை எந்த விதத்திலாவது இணங்கச் செய்திருப்பார்.

சுந் : என் தகப்பனாரின் பிடிவாதத்திற்கு, நம் வாழ்வு பலியாயிற்று. என் தாயார், உங்கள் அத்தையாவது, உயிரோடிருந்தால் எனக்கு இந்த கதி நேர்ந்திராது.

பூப : நீ அடைந்த வாழ்வைப் பற்றி உனக்குத் திருப்தியில்லையா, சுந்தரி ?

சுந் : உங்கள் தகப்பனாரிடம் கொண்ட துவேஷத்தால் என் தந்தை என்னை ஒரு மூர்க்கனுக்கு மணம் செய்வித்தார். அதன் பிறகு கொடுமையிலும் துன்பத்திலும் வாழ்நாளைக் கழிப்பதைத் தவிர வெறென்ன செய்ய முடியும் ?

பூப : உன்னுடைய குணங்களை ரகிக்கத் தெரிந்த கணவன் உனக்குக் கிடைத்தாலும் நான் திருப்தியுடனிருப்பேன். கடைசியில், கடைசியில்......

சுந் : ஆனால் நீங்கள் ஏன் இத்தனை காலம் சொந்த வீட்டைத் திரும்பிக் கூடப் பாராதிருந்துவிட்டீர்கள்?

பூப : நானடைந்த ஏமாற்றத்திற்குப் பிறகு இங்கு காலடி வைக்க என் மனது எப்படி ஒப்பும் ?

சுந் : அவ்வளவு கொடிய ஏமாற்றமா ?

பூப : உனக்குத் தெரியாதா சுந்தரி. என் வாழ்வில் ஒளியே நீ யென்று நினைத்திருந்தேன். நீ இல்லாத வாழ்க்கையில் என் மனது என்றாவது லயிக்க முடியுமா ?

சுந் : இன்று ஏன் திரும்பி வந்தீர்கள் ?

பூப : எனக்கே தெரியவில்லை. ஏதோ ஒரு சக்தி என்னை இழுத்து வந்தது. உன் நினைவுக்காகவே வந்தேனோ என்னவோ.

சுந் : என் நினைவு தான் வேதனை நிறைந்ததாயிற்றே.

பூப : ஆனால் அந்த வேதனையிலும் ஓர் இன்பம் இருக்க முடியாதா ?

சுந் : (சிரிப்பு)

பூப : ஏன் சிரிக்கிறாய் சுந்தரி.

சுந் : வாழ்க்கை விசித்திரத்தை நினைத்தால், சிரிக்காமல் என்ன செய்ய ?

பூப : வாழ்க்கை விசித்திரமா?

சுந் : பின் இல்லையா? என் நினைவுக்காக வாழ்நாள் முழுதும் சந்நியாசி போலிருக்கும் நீங்கள் ஒரு பக்கம். இன்னொரு பக்கம் என் நினைவே வேம்பாய்க் கசக்கும் என் கணவர். நடுவில் நான். வாழ்க்கை விசித்திரமில்லையா ? (நீண்ட சிரிப்பு)

பூப : சுந்தரி, சுந்தரி இதென்ன, என் பிரமைதானா? என் நினைவே கனவாகி யெழுந்ததா?

தங் : கூப்டிங்களா, சின்ன எசமான் ?

பூப : தங்கமா ? நான் கூப்பிடலையே.

தங் : சின்ன எசமான் கூப்பிடருங்க. என்னன்னு கேட்டு வான்னு அப்பா அனுப்பிச்சு.

பூப : இன்னும் தூங்கலே நீங்கல்லாம் ?

தங் : இல்லே. வீட்டிலே விருந்தாளிங்க வந்திருக்காங்க. அப்பா அவங்க கூடப் பேசிட்டிருக்கு.

பூப : விருந்தாளுங்களா ? இந்நேரத்திலேயா ?

தங் : சித்த முன்னதான் வந்தாங்க.

பூப : இதிலே என்ன வெக்கம் தங்கம் ? உனக்குப் பரிசம் போட ஏற்பாடு நடக்குதா ?

தங் : அப்பாவையேகேளுங்க. (ஓடிவிடுகிறுள்)

பூப : வாழ்க்கை விசித்திரம் தான். ஒரு பக்கம் சென்றுபோன நினைவில் நிராசையை மறக்க முயற்சி. இன்னொரு புறம் புதிய நம்பிக்கையில் குதூகலிக்கும் மனம். கணத்துக்குக் கணம் மாறி மாறிப் புதுமைகாட்டுகிறது. (ஸிதார் ஒலித்து மறைய)

முனி : என்ன எசமான், சின்ன எசமான்.

பூப : என்ன, அதற்குள் பொழுதுவிடிஞ்சிடுத்தா ?

முனி : இதோ, இந்த அய்யா உங்களைப்பாக்க வந்திருக்காங்க.

பூப : யாரு ?

நண்பர் : என்னைத் தெரியலியா பூபதி? நான் சோமு இல்லே.

பூப : சோமுவா ? கீழவீட்டுச் சோமுவா ?

நண் : பின்னே யாருன்னு நினைச்சே ?

பூப : எப்படி மாறிப் போயிட்டே.

நண் : எத்தனை நாளாச்சுப் பாத்து. நீ தான் இந்தப் பக்கம் திரும்பியே பாக்கறதில்லேன்னு பிடிவாதமாயிருந்திட்டே.

பூப : இப்போ ஏன் திரும்பி வந்தோம்னு இருக்கு.

நண் : இதென்ன பூபதி, நீ திரும்பி வந்ததைப்பற்றி நாங்களெல்லாம் படற சந்தோஷமென்ன; இத்தனை நாளுக் கப்புறமாவது மகிழந்தோப்புக்கு விடிவு காலம் வந்துதேன்னு நினைச்சா...

பூப : அதிக நாள் என்றலே இங்கே இருக்க முடியாது போலே இருக்கு. ஏன், இன்னிக்கு முழு தும்கூட இருப்பேணுங்கறது சந் தேகம் தான்.

நண் : எப்படி இருந்த குடும் பம் எப்படிச் சிதறிப்போச்சு. கடேசிலே வீடு மட்டும்தான் மிஞ் சித்து.

பூப : அதுக்கு வாரிசு நான் ஒருத்தன் மிஞ்சினேன். இந்தத் தனிமை என்னைப் பைத்தியம் பிடிக்க அடிச்சிடும்.

நண் : நிஜமாத்தான் சொல் றயா பூபதி ?

பூப : என் மனது எனக்கே புரியலே.

முனி : சின்ன எசமான், காலங்கார்த்தாலே இந்த ஆளு ஒரு பெண்ணை அழைச்சுக்கிட்டு உங்களைப் பார்க்கணும்னு வந் திருக்காங்க.

பூப : யார் இந்தப்பொண்ணு? சுந்தரி மாதிரியே இருக்கு.

ஆள் : பக்கத்து கிராமத்தி லேருந்து வரேனுங்க. இந்தப் பொண்ணை நிர்கதியா விட்டுட்டு இவங்க பாட்டி தவறிப் போயிட் டாங்க.

பூப : அடாடா, உன் பேரென் னம்மா ?

பெண் : சுந்தரி.

பூப : சுந்தரியா? குரலும் அவ குரல் மாதிரியே இருக்கு.

ஆள் : அந்தம்மா ரொம்பக் கஷ்ட தசையிலே இருந்தாங்க. உடம்பு ரொம்ப அசௌக்கிய மானதும் என்னைக் கூப்பிட்டு இந்தப் பெண்ணை உங்க கிட்டே ஒப்படைக்கச் சொல்லிட்டுக் கண்ணை மூடிட்டாங்க.

பூப : சந்தேகமில்லை, இந்தப் பெண் யாரென்று இப்போ தெரி கிறது. இப்படி வா குழந்தாய். ஆதாரமில்லாமல் தத்தளித்த என் வாழ்க்கைக்கு இனிமேல் நீதான் ஆதாரம். என் சுந்தரி என்னிடம் திரும்பி வந்துவிட்டாள். அஸ்த மனத்தை நாடி இங்கு வந்தேன். வாழ்வின் உதயத்தைக் காண் கிறேன். இப்படி வாம்மா, அருகே வா.

நண் : பூபதி.

# இரத்த ரோஜா

*மூலம் :*
**ஆஸ்கார் ஒயில்டு**

*தமிழாக்கம் :*
**கோமேதக வேலு**

நான் ஒரு இரவுக்குயில்! நான் பேசுவது உங்களுக்கு அதிசயமாக ஆச்சர்யமாக இருக்கலாம்! நான் பேசுவேன்—உங்களைவிட அழகாக, அருமையாக எனக்குப் பேசத் தெரியும்! நீங்களோ மூன்று அங்குல நீள நாக்கை வைத்துக்கொண்டு அதைச் சரியாக உபயோகிக்கத் தெரியாமல் நலிகின்றீர்கள்! நான் அப்படியல்ல!

நான் ஒரு பெண் இரவுக்குயில்! அதுவும் பருவத்தின் குறுத்துப் பருவத்தில் இருப்பவள்! நான் ஒரு இளம் அழகிய ஆண் இரவுக் குயிலால் காதலிக்கப்பட்டேன்! காதலின் தன்மையை அறிந்தவள் நான். நானும் என் காதலனும், மேக மண்டலங்களிலே, பூலோகத்தின் நாற்றம் அணுகாத சூரிய வெளியிலே, உல்லாசமாகப் பறந்து பாடித்திரிவோம். இரவிலே—சுந்தர நிலா தன் சுடாத கிரணங்களைப் பொழிந்துக் கொண்டிருக்கும் சுகமான நிலாவின் நீல நிழலிலே—நானும் என் காதலனும் காதல் பண்களைப் பாடி அந்த இன்ப இரவுக்கு அழகைக் கூட்டுவோம்.

ஒருநாள்! மரணம் என்னிடமிருந்து என் காதலனை பிடுங்கி விழுங்கிக்கொண்டது. யாரோ ஒரு மனித மிருகம் என் காதலனை அம்பால் குறிவைத்துக் கொன்றுன்—என்னைக் கொல்லாமல் வாழ்க்கை முழுவதும் நான் வருந்த வேண்டி விட்டுவிட்டான்! என் காதலனின் பிரிவினுல் வேதனை கப்பிய வெறுமை உள்ளத்தோடு வாழ்ந்து வருகிறேன். நான் இங்கு சொல்லப்போவது என் சோகக் கதையை அல்ல; உங்களில் ஒருவனின் காதலுக்காகச் செய்த தியாகத்தைத்தான் சொல்லப்போகிறேன்!

உலகத்தைப் படைத்த ஆண்டவன் எனக்கு ஆறுவது அறிவைக் கொடுக்க மறந்துவிட்டான் போலும் — மறுத்து விட்டான் என்றே நினைக்கிறேன்! அதற்குக் காரணம் என்ன என்பது எனக்குத் தெரியவில்லையே. இதற்காக ஆறறிவு படைத்த நீங்கள் ஐந்தறிவு கொண்ட என்னை மதிக்காவிட்டாலும் நான் சொல்வதை சற்று கவனமாகக் கேளுங்கள்.

அன்று ஒருநாள்!—

மாலைச் சூரியனின் மஞ்சள் நிற ஒளி மழையில் உலகம் நனைந்து கொண்டிருந்த மாலை நேரம். காலையிலே வண்ண இதழ்விரித்து மலர்ந்த மலர்க்கூட்டம் நாளெல்லாம் பொன் வண்டுகளுடன் மகிழ்ந்த மந்தகாசத்தால் மாலையில் மயங்கிச் சோர்ந்து தம் இதழ்களின் ஒளியை இழந்துவிட்டிருந்தன. அந்திச் சூரியனும் மெல்ல

மெல்ல தன் ஒளி அம்புகளைக் குடைத்திசைப் பெட்டியில் அடுக்கி வைக்க ஆரம்பித்தான். உயர்ந்து ஓங்கி நின்ற ஒரு மரத்தின் பொந்தில் வீடமைத்து வாழ்ந்து வந்த நான் அப்பொழுது என் 'வீட்டின் வாயிலில்' உட்கார்ந்து கொண்டிருந்தேன்.

எனக்குக் கீழிருந்த பசும்புல் பரப்பில் ஒரு அழகிய வாலிபன் வந்து உட்கார்ந்தான். நான் அவனின் தோற்றத்திலிருந்து அவன் ஒரு மாணவன் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

அவன் பேசினான் தன் உள்ளத்து உணர்ச்சிகளுக்கு ஓசை சேர்த்து. "அவளுக்கு நான் சிவப்பு நிற ரோஜா மலர்களைக் கொடுத்தால் என்னுடன் நடனமாடுவதாகச் சொன்னாளே! ஐயோ! இந்த முழு மலர்க்காட்டில் ஒரு சிவப்பு வர்ண ரோஜா கூட மலர்ந்திருக்கவில்லையே! அதுபோல என் ஆசையும் மலராமல் கருகிய மொக்காகவேகரிந்து போக வேண்டியதுதானே?"—

மரத்தின் பச்சை இலைகளின் வழியாக என் கண்கள் இமை மூடாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தன.

அவன் மீண்டும், "என் மலர் வனத்தில் ஒரு சிவப்பு ரோஜாவைக் கூட எந்த ரோஜாச் செடியும் பிரசவிக்கவில்லையா?" என்று பரிதாபமாக முணகினான். அவன் கண்களைக் கண்ணீர் திரைமறைத்தது. மேலும் அவன் பேசினான்." மகிழ்ச்சியும், இன்பமும் எவ்வளவு சிறிய பொருள்களை தொடர்ந்திருக்கின்றன! இந்த உலகிலே, நம்மை ஞானிகளென்றும், அறிவின் தீபங்களென்றும், அறிஞர்களென்றும் அழைத்துக் கொள்ளும் பிரகிருதிகள் எழுதியிருக்கும் நூற்களையெல்லாம் படித்துத் தெளிந்த நான்-வேதாந்தத் தத்துவங்களின் மர்மங்களையும், நுட்பங்களையும் அலசிப் பார்த்து அவைகளின் கருத்துக்களைப் பூரணமாகப்புரிந்துக்கொண்டிருக்கும் நான்—ஒரு சிவப்பு ரோஜா கிடைக்காதக் காரணத்தால், என் கரும்பு வாழ்க்கையைக் கசப்பாக்கிக் கொள்ளத்தான் வேண்டுமா?" என்றான். அவன் குரலில் சொல்லிமுடியாத ஏக்கமும், வேதனையும் கலவையிட்டிருந்தன.

அவன் பேசியது கேட்டு என் விழியின் விளிம்போரத்தில் இரு துளி கண்ணீர் துளிர்த்து நின்றன. நான் நெடுங்காலமாக உங்களைச் சேர்ந்த ஒரு தூயக் காதலனைக் காணவேண்டும் என்ற ஆசையுடன் வாழ்ந்து வந்தேன். அந்த வாலிபனைக் கண்டதும் "ஆம்! இவன் ஒரு உண்மையான காதலன்" என்று என் உள்ளக் குரல் கூவி ஓய்ந்தது. ஒரு உண்மையான காதலனைக் காண்பதற்காக நான் எத்தனையெத்தனையோ இரவு நேரங்களில் என்னைமறந்து பாடிக்கொண்டிருந்திருக்கின்றேன். உண்மைக் காதலனின் மனநிலைபற்றி இரவிலே—இரவின் இன்ப அமைதியிலே நீலவான் பரப்பில் நின்று—கண் சிமிட்டிடும் வைர நித்திலங்களிடம் கதை சொல்லியிருக்கிறேன். இத்தனை நாட்களாக நான்காணத் துடித்துக் கொண்டிருந்த தூய காதலனை இன்று என் கண்களாலேயே கண்டுவிட்டேன். அவன்

கேசம் செந்நிறப் பூங்கொத்து போலவும், அவனின் உதடுகள் அவன் ஆசையுடன் தேடும் பட்டு ரோஜா மாதிரியும் நிறம் பெற்றிருந்தன. தணியாத காதல் அவன் முகத்தை வெளிறச் செய்துவிட்டிருந்தது. வேதனை தன் அடையாள ரேகைகளை அவனின் அழகிய நெற்றியில் பதித்திருந்தது.

அவன் மீண்டும் பேசினன்: "நாளைக்கு இளவரசன் விருந்து நடத்தப்போகிருன். என் இதய ராணி அங்குவருவாள், வானத்து மோகினி போல! நான் அவளின் தங்கநிறக் கூந்தலை அலங்கரிக்க ஒரு சிவப்பு ரோஜாவைக் கொண்டு சென்ருல், அவள் என்னுடன், இரவுக்குப்பின் வானம் ரோஜா நிற ஒளி ஆடையை அணியத் துவங்கும் அருணேதயப் பொழுதுவரை நடனமாடுவாள்! அவள் என் திரண்ட தோளின் கீழ் தனது முகத்தைப் புதைத்துக் கொண்டு என் கரமும் அவள் கரமும் சேர்ந்திருக்க, கொழு கொம்பின் மேல் படர்ந்துள்ள முல்லைக் கொடிபோல என் மீது படர்ந்திருந்தே நடனமாடுவாள். எனக்குத்தான், அவள் ஆசையையும், என் ஆசையையும் அலங்கரிக்க ஒரு சிவப்பு ரோஜாகூடகிடைக்கவில்லையே! நான் விருந்தில் தனிமையில்அமர்ந்திருப்பேன். அவள் என்னைப் பார்த்தும் பார்க்காதது போல எனக்கு முன் நடந்து போவாள். அவளின் பாரா முகம், என்உள்ளத்தை உடைத்து என்னை ஆத்மவதைக்குள்ளாக்குவது அவளுக்கு எங்கே தெரியப் போகிறது?" என்ருன். அவன் கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் கன்னங்கள் வழியாக இறங்கி ஓடி பசும்புற்களின் மீது விழுந்தது கூரான புற்களின் முனைகளில் உள்ள பனித்துளிகளைப்போல!

என் மனம் அவன் நிலை கண்டு விம்மிப் புலம்பியது. 'இவன்தான் உலகத்தின் ஒரே உண்மையான காதலன்! புனிதமான காதலின் தன்மையைப் பூராவும் உணர்ந்தவன்' என்று என் உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து ஒரு குரல் கூவியது. அதே குரல் மீண்டும் 'நான் பரிசுத்தமான காதலின் இன்பத்தைப்பற்றி எத்தனையோ இரவுகளில் பாடிவந்திருக்கிறேன் ஆனல் இந்தத் தூய காதலனே காதலியின் வேண்டுகோளை பூர்த்திசெய்ய இயலாமல் வேதனைத் தீயில் வெந்துருகுகிருன். நான் காதலின் தென்றலைப்பற்றிப் பாடினேன்; இவனே காதல் சூருவளியில் சிக்கிச் சீரழியும் சிறு துரும்பாக அலைக்கழிக்கப் படுகிருன்! நிச்சயமாக காதல், உலகத்திலேயே மிகவும் ஆச்சர்யமான ஒரு பொருள்; உலகத்தின் விலையுயர்ந்த பொருள்களாலே வாங்கப்பட முடியாத பொருள்; அது சந்தைக் கடையிலே விற்கப்படும் சரக்கும் அல்ல; அதற்கு ஈடாக எந்தப் பொருளும் இல்லை இவ்வுலகில்!"—

அந்த வாலிபன் திரும்பவும் பேசினன்!— "விருந்தில்—மேடை மீது சங்கீதக் கருவிகளை மீட்டுவதால்—அழகான நாட்டியப் பண்கள் எழும்பும். அந்த கானத்திற்கேற்ப என் காதலி நடனமாடுவாள். அவளின் சிவந்த பாதத்தால் முத்தமிடப்படும் தரைகூட என்னைவிட அதிர்ஷ்டசாலியாக இருக்கிறது! அவளின் ஒயிலான நாட்டியத்தைக் கண்டு அங்கு உள்

ளோர் மயங்கிக்கிடப்பார்கள். அவள் யாராலும் தீண்டப்பட முடியாத வானக்கொம்பிலுள்ள நறுமணமும், நறுந்தேனும் நிறைந்த, நளின மலர்; அவளைச் சுற்றிலும், அவன் விழியின் விளிம்போரத்தில் ஒரு தூசியின் நிழல் போலாவது படமாட்டோமா என்று ஏங்கிக் கொண்டு, அவளைச் சுற்றிலும் அலங்கார ஆடைகள் அணிந்த அரச சபையினர் ஆசை நிறைந்த கண்களுடன் அவளையே விழுங்கிக் கொண்டிருப்பார்கள். நானோ அபாக்கிய சாலி!" என்று சொல்லி பசும் புல் தரையில் படுத்து அழ ஆரம்பித்தான்.

மரத்தின் கிளையில் தன் வாலை வளைத்து உட்கார்ந்து கொண்டிருந்த பச்சைநிறப் பல்லி ஒன்று "அவன் எதற்காக அழுகிறான்?" என்று என்னைப் பார்த்து கேட்டது. மறையப்போகும் கதிரவனின் கடைசி ஒளிக் கிறல்களில் ஒன்றைச் சுற்றிச் சுற்றி வந்துக் கொண்டிருந்த அழகிய பலவர்ண வண்ணாத்திப் பூச்சி ஒன்று அதே கேள்வியை மீண்டும் என்னிடம் கேட்டது.

நான் எனக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த பசுங்கிளி ஒன்றைப் பார்த்து "அவன் தான் விரும்பிய ஒரு சிவப்பு ரோஜா இடைக்கவில்லை என்பதற்தாக அழுகிறான்" என்றேன். இது கேட்டு அங்கிருந்த பறவைகள் கேலியாகச் சிரித்துக் கும்மாள மிட்டு ஓய்ந்தன.

அந்தக் காதலனின் இதயக் குமுறல் அவைகளுக்கு எங்கே தெரியப்போகிறது! நான் ஒருத்தி தான் அவனின் மனவேதனையைப் புரிந்து கொண்டேன். நான் காதலின் புதிர்பற்றி சிந்திக்கத் துவங்கினேன். காதல் அனுபவத்தைப் பெற்றவள் அல்லவா நான்?

என் வண்ண சிறகுகளை விரித்து காற்றிலே மிதந்தேன். உயரப் பறந்தேன்; அந்த மலர் வனத்தின்மேல் நிழல் போலப் பறந்தேன். தோட்டத்தின் நடுவே அழகிய ரோஜாச் செடி ஒன்று நின்று கொண்டிருந்தது. அதைக் கண்டவுடன் அதை நோக்கிக் கீழே தாவினேன்.

அந்த ரோஜாச் செடியை அணுகியதும் அதைப் பார்த்து, எனக்கு ஒரு சிவப்பு ரோஜா வேண்டும்! ரோஜா செடியே! அதைக் கொடுத்தால் நீ மகிழும் வண்ணம் உனக்கு நான் ஒரு மிக அழகிய பாட்டு பாடுவேன்!" என்றேன்.

அந்த ரோஜா செடி தன் தலையை அசைத்தது! "வண்ணக் குரல் எழுப்பும் இரவுக் குயிலே! என் செடியில் இதழ் பிரித்து மலரும் ரோஜா மலர்கள்எல்லாம் வெண்ணிறமானவை! நீலக்கடலின்மேல் உள்ள நுரையைப் போலவும், தூரத்து மலைகளின் உச்சியில் உறைந்து கிடக்கும் வெண்பனி நிறத்தைப் போன்றும், வெண்ணிறமானவை! அதோ, தூரத்தில் உள்ள என் சகோதரியிடம் போனால் அவள் உனக்கு வேண்டிய மலரைத் தருவாள்!" என்றது.

சிறிது தூரத்திற்கப்பாலிருந்த மற்றொரு ரோஜாச் செடியிடம் பறந்து சென்றேன். அந்தச்

செடியைப் பார்த்து, "ஏ! ரோஜாச் செடியே! எனக்கு ஒரு சிகப்பு வர்ண மலரைக் கொடுத்தால் உனக்கு மிக அழகான ஒரு பாட்டு பாடுவேன்!" என்றேன்.

அந்தச்செடி என்னைப் பார்த்து, "தித்தித்திக்கும் தேன் குரல் எழுப்பும் இரவுக் குயிலே! என் கிளைகளிலுள்ள மொக்குகள் தம் இதழ் முகத்தை நீக்கிக் காண்பிக்கும் பொழுது அவை மஞ்சள் நிறமாயிருக்கும்! அழகான அரியாசனத்தில் அமர்ந்து அரசோச்சும் அரசியின் பொன்னிறக் கூந்தல் போலவும், கடற்கன்னியின் மெல்லிய தங்க இழைகளாலான கேசத்தின் நிறம்போலவும்-மஞ்சள் நிறம் கொண்டவை அவை! அந்த மாணவனின் அறை ஜன்னலின் கீழ் உள்ள என் சகோதரியிடம் சென்றால் அவள் உனக்கு அந்த சிவப்பு நிற ரோஜாவைத் தருவாள்" என்றது.

நான் அந்த மாணவனின் அறையின் ஜன்னல் அருகில் இருந்த ரோஜா செடியிடம் பறந்து போனேன்.

அந்தச் செடியைப் பார்த்து, "ஏ, ரோஜாச் செடியே! எனக்கு ஒரு சிவப்பு வர்ண ரோஜா மலர் கொடுத்தால் நான் அழகான பாட்டு ஒன்று பாடுவேன்" என்றேன்.

ரோஜாச் செடி தன் தலையை அசைத்தது!

"மதுரகீதம் பாடும் மரகத வர்ண இரவுக் குயிலே! என் செடியிலே மலரும் ரோஜா மலர்கள் அழகிய மாடப் புருவின் பாதத்தின் நிறம் போன்றவை! நீலக்கடலின் அடிமட்டத்தில் குவிந்து கிடக்கும் பவழ மணிகளின் நிறம் ஒத்தவை! ஆனால் குளிர் காலம் என் நாளங்களில் ஓடும் ஜீவ ஓட்டத்தை உறையச் செய்து விட்டிருக்கின்றன! குளிரின் கொடுமை என் மொக்குகளின் இயற்கை நிறத்தைக் கருகச் செய்துவிட்டது! கூதல் ஏற்றிக்கொண்ட சூறவளி என் கிளைகளை ஒடித்துவிட்டது! இந்த வருஷம் பூராவும் ஒரு ரோஜா கூட என் செடியில் மலரவில்லை' என்று விசனத்துடன் சொன்னது.

"எனக்கு ஒரே ஒரு ரோஜா இருந்தால் போதும்" என்றேன் அழமாட்டாக் குறையாக. "அந்த மலர் எனக்குக் கிடைக்க வேறு வழியொன்றும் கிடையாதா?" என்று கேட்டேன்.

"ஒரே ஒரு வழியிருக்கிறது! அது மிகவும் கொடுமை நிறைந்த வழியாதலால் அதை உன்னிடம் வாய்விட்டுச் சொல்ல என்னால் இயலாது" என்றது.

"ஐயோ; பரவாயில்லை! அதைச் சொல்லிவிடு!" என்று நான் கெஞ்சினேன்.

"உனக்கு ஒரு சிவப்பு ரோஜா வேண்டுமானால், நிலவின்ஜோதி வெள்ளம் எங்கும் பிரவசித்துள்ள இந்த நீல இரவிலே, நீ இன்ப கீதம் இசைக்கவேண்டும். உன் இரத்தத்தால்தான் அந்த ரோஜா மலர வேண்டும்! நீ என் செடியின் கிளைமீது உன் மார்புக் கூடு படும்படி உட்கார்ந்து பாடவேண்டும்! இரவு முழுவதும் நீ பாடிக்

கொண்டே யிருக்கவேண்டும்! என் முள் உன் நெஞ்சின் வழியே புகுந்து இருதயத்தைத் துளைத்து அதிலுள்ள இரத்தமெல்லாம் என் கிளைகளுக்கு வந்த பிறகு அதிலே மலரும் ரோஜா நிச்சயமாக சிகப்பு நிறம் கொண்டதாயிருக்கும்'' என்றது.

என் மனம் பேசியது: 'ஒரு சிவப்பு ரோஜாவுக்காக ஒருஉயிர் பலியாக வேண்டுமா? வாழ்க்கை எல்லோர்க்கும் விலையற்ற பொக்கிஷம்! மேலும் என் வாழ்க்கை - பச்சை நிறப் பசும் பூங்காவிலே, அழகிய மரக்கிளைகளின்மீது அமர்ந்து, சூரியன் தன் பொன் தேரில் பவனி போகும் காட்சியையும், நிலாதேவி இரவில் வைரங்களால் இழைக்கப்பட்ட தேரில் அமர்ந்து வான வீதியிலே நட்சத்திரத் தோழிகளுடன் பவனிவரும் காட்சியையும் கண்டு கொண்டிருப்பது—மலர்களின் மணமும் மலை உச்சியில் பிறந்து வீசும் இளம் தென்றலும் எனக்குமகிழ்ச்சியைத் தருபவை! இருந்தாலும் வாழ்க்கையைவிட காதல் சிறந்தது! மனிதனின் இருதயத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது ஒரு பறவையின் இருதயம் எம்மாட்டு?''

நான் மீண்டும் இறக்கைகளைப் பிரித்து காற்று வெளியில் நீந்தினேன். நிழல்போலப் பறந்துத் தவழ்ந்தேன் மலர் வனத்தின் மேல்!

நான் அவனை விட்டு வந்த இடத்தை அடைந்தேன். மாணவன் தரையிலே படுத்து இன்னும் அழுது கொண்டுதானிருந்தான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் முத்துகள் உதிர்ந்துகொண்டேயிருந்தன.

நான் அவனைப் பார்த்து, "தூய காதலனே! கவலையை விட்டொழி! உனக்கு நான் ஒரு சிவப்பு ரோஜாவைத் தருவேன்! இரவெல்லாம் பாடி—என் இரத்தத்தால் ஒரு இரத்த ரோஜாவை உண்டுபண்ணித் தருவேன்! என் குருதியைக் குடித்து என் சவத்தின்மேல் மலரும் மலரை உன் காதலுக்காக அர்ப்பணம் செய்வேன். எனக்கு வேண்டுவதெல்லாம் நீ காதலின் தெய்வீகத் தன்மையை உணர்ந்து உண்மைக் காதலனாகவேண்டும் என்பதுதான்! காதல், தத்துவத்தைவிட சிறந்தது—உயர்ந்தது! காதல் பலத்தைவிட பலமானது! காதலின் சிறகுகள் நெருப்பு வர்ணமுள்ளவை—காதலின் உடலே நெருப்பு வர்ணம்தான்! காதலின் அதரங்கள் தித்திப்பானவை—காதலின் மணம் உலகத்திலேயே சிறந்த மணம்.'' என்று பேசினேன்.

அந்த மாணவன் என்னைப் பார்த்தான். என் பாட்டு அவனுக்குக் கேட்டிருக்கும். ஆனால் நான் சொன்னது அவனுக்கு எப்படிப் புரியும்? அவன்தான் புத்தகங்களில் எழுதியுள்ளதை மட்டும் அறிந்தவனாயிற்றே!

என் வீடு இருந்த மரம் நான் செய்யப்போகும் தியாகத்தைக் கேட்டு வருந்தியது. ஏனென்றால் அது என் நீண்ட நாள் நண்பன்.

அந்த மரம் என்னைப் பார்த்து:

"என் அழகு இரவுக் குயிலே! பறவைகளின் ராணியே! உன் பிரிவு எனக்குத் தாளமுடியாத சோகத்தைத்தரும். என்ன செய்வது கடைசியாக ஒரு அழகான பாட்டைப் பாடினேன். மரம் மகிழ்ந்து தன் கிளைகளையும் இலைகளையும் அசைத்தது. என் பாட்டை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்த மாணவன் அது முடிந்தவுடன் பக்கத்திலிருந்த புத்தகங்களை எடுத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான். நானும் அவனுக்கு மேலேயே பறந்தேன். அவன் தனிமையில் தனக்குத் தானே பேசிக்கொண்டு போனது என் காதுகளுக்கு நன்ருகக் கேட்டது. "அந்த இரவுக் குயிலுக்கு அழகான உருவம் உள்ளது; ஆனல் அதற்கு உணர்ச்சிகள் கிடையாதோ? அந்த இரவுக் குயில், இன்றைக்கு கலையை சிருஷ்டிப்பதாக சொல்லிக்கொள்பவர்களுக்கு ஒப்பானது! இன்றைக்குப் படைக்கப்படும் கலையில் பகட்டு உள்ளது—ஆனல் அதில் உண்மை அடங்கியிருப்பதில்லை.

அந்த இரவுக்குயில் பிறருக்காகத் தன்னை தியாகம் அற்ற சுயநலப் பட்சி; இன்றைய கலைபோல அதுவும் சுயநலம் கொண்டது! இருந்தாலும் அதன் குரலில் இனிமை இழைகின்றது.ஆயினும் அந்த இனிய குரலில் உள்ள உயிர்த்துடிப்பு எனக்குப் புரியவில்லையே!"—

அவன் தன் அறைக்குச்சென்று விரக்தியுடன் படுக்கையில் படுத்து உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டான்.

சுவர்க்கலோகத்தின் முற்றத்திலே முழுநிலா தன் மோகன ஒளி வெள்ளத்தை வர்ஷித்துக் கொண்டிருந்தது. நான் அந்த ஜோதி வெள்ளத்துடன் கலவையிட்டிருந்த மென் தென்றலில் பறந்து ரோஜாச் செடியிடம் போனேன். ரோஜாச் செடியின் ஒரு பெரிய கூரிய முள்ளின் மீது என் மார்புக்கூடு அழுந்தும்படி உட்கார்ந்து படுத்துக் கொண்டேன். என் குரலை எழுப்பினேன்—ரோஜா முள் என்னைக் குத்தியது—அதைக் கொஞ்சமும் கவனியாமல் குதூகலத்துடன் பாடத் துவங்கினேன். பளிங்கு நிலா வானத்திலிருந்து என் பன்னீர் பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தது. இரவெல்லாம் என் இனிய கீதம் அந்த மலர்க் காட்டின் முழுமையிலும் பரவிக் கொண்டிருந்தது. ரோஜாச் செடியின் முள் என் மார்பினுள் மெல்ல மெல்ல நுழைந்துகொண்டேயிருந்தது! என் இருதய இலைகளிலிருக்கும் குருதியை அந்த முள் உறிஞ்சிக் கொண்டேயிருந்தது! நான் பாடிக்கொண்டேயிருந்தேன்.

முதலிலே ஒரு இளம் பையனுடையவும் ஒரு இளம் பெண்ணினுடையவும் உள்ளத்திலே உதயமாகும் பிஞ்சுக்காதலைப் பற்றிப் பாடினேன். நான் பாடிக்கொண்டேயிருந்தேன். ரோஜாச் செடியின் கொண்டைக் கிளையில் ஒரு அழகிய ரோஜா, தன் பச்சை மொக்கிலிருந்து வெடித்து இதழ் விரித்து மலர்ந்தது. முதலிலே அது ஒருவித நிறமற்ற இதழ்களுடன் இருந்தது!—அருணோதய காலத்திலே நீல நதியின் மேல் படுத்துக்கிடக்கும் பனி மூட்டத்தைப்போல,—சூரியக் குழந்தை

பிறப்பதற்கு முன் கிழக்குவானம் பிரசவ வேதனையினால் வெளிறி யிருப்பதுபோல-வைகறை என்ற பறவையின் பால்நிற இறக்கை களைப்போல — வெண்ணிறத்துட னிருந்தது. ரோஜாச் செடியின் உச்சியில் உதித்த மலர்—வெள் ளிக் கண்ணாடியில் காணப்படும் ரோஜாவின் பிம்பத்தைப் போல, வளைந்தோடும் நதியின் கரையோ ரத்திலிருக்கும் செடியில் மலர்ந் திருக்கும் ரோஜாவின் நிழல் அந்த நதியின் நீரில் காணப்படும் நிழல் போல—பனி நிறத்துடன் பளபளத்திருந்தது.

என்னை நன்றாக முள் மீது அழுந்திப்படுக்கும்படி ரோஜாச் செடி கூச்சலிட்டது. "நன்றாக முள்ளின் மேல் அழுந்தியிரு!" என்றது. "இல்லாவிட்டால் பொழுது புலர்ந்துவிடும்; விடி வெள்ளி முளைப்பதற்குள்ளாக மலர் மலர்ந்தாக வேண்டும்!" என்று செடி கூவியது.

ரோஜாச் செடியின் முள் மீது மரண வேதனையுடன் பாடிக் கொண்டு என் நெஞ்சுக்கூட்டை அழுத்தினேன். வேதனையை மறைக்க என் குரல் முன்னிலும் பன் மடங்கு இனிமை ஏறியது! ஒரு இளம் வாலிபனின் உள்ளத் திலும் ஒரு இளம் யுவதியின் மன திலும் முளைக்கும் காதலைப்பற்றிப் பாடினேன்.

ரோஜா மலரின் இதழில் இளம் சிவப்பு நிறம் படிந்தது—மண மகளை முதல் முறையாக முத்த மிடும் மணமகனின் முகத்தில் நாணம் செம்மை பூசும் நிறத்து டன்! ரோஜாச் செடியின் முள் இன்னும் என் இருதயத்தைத் தீண்டவில்லை! அதனால்தான் இன் னும் ரோஜா இரத்த நிறத்துடன் மாறவில்லை! ஏனென்றால் என் இருதயத்தின் குருதியால்தான் ரோஜாவின் நிறத்தை சிவப்பாக மாற்ற முடியும்!

மீண்டும் ஒரு முறை ரோஜாச் செடி என்னைப் பார்த்து, "இன் னும் நன்றாக முள்ளின் மீது உன் மார்பை அழுத்திப்படு! ஏனென் றால் கீழ் வானத்திலே மல்லிகை வர்ணம் படிவதற்குள் ரோஜா மலர்ந்தாக வேண்டும்" என்றது.

நான் இன்னும் நன்றாக அழுந் திப் படுத்தேன். ரோஜாச் செடி யின் முள் முனை என் இருதயப் பழத்தைக் குத்தியது. வேதனை தாள முடியவில்லை! என் உள்ளம் குமுறியது.

ஓரே வேதனை! வேதனை பெரு கியது! என் குரலில் இப்பொழுது முன்னிலும் அதிக பலம் ஏறியது. கல்லறையின் மேல் மலரும் மனோ கரமான காதல் மலரைப்பற்றி, கல்லறையின் அணைப்பில் அழுந் தாத அமர காதலைப்பற்றி பாடி னேன்!—பாடினேன்! பாடி னேன்! பாடிக்கொண்டேயிருந் தேன்! முள்ளின் கூர்முனை என் நெஞ்சைக் குத்தியது! குத்தியது! குத்தியது! குத்திக் கொண்டே யிருந்தது.

ரோஜா மலர் கருஞ்சிவப்பாக மாறியது. வைகறைப் பொழு திலே, வைகறையின் இரத்தச் சிவப்பிலே மலரும் ரோஜா மல ரின் நிறத்தை இந்த மலர் பெற் றது. மலரின் இதழ்கள் கருஞ் சிவப்பு நிறத்தைத் தாங்கி நின் றன.

என் குரல் சோர்வின் மிகுதியால் ஒடுங்கியது—குன்றியது! குரல் குன்றிக்கொண்டே வந்தது. என் சிறகுகள் இறங்கிச் சோர்ந்தன. என் கண்களுக்கு மேல் ஏதோ ஒரு இருள்திரை கப்பியது! என் குரல் குன்றியது—தொண்டைக்குழி அடைத்துக் கொண்டது.

அணைந்து போக இருக்கும் விளக்கின் அந்திம ஒளியைப் போல கடைசி முறையாக உரக்கப் பாடினேன். இரவெல்லாம் பவனி வந்ததால் வெண்ணிலா விடியற்கால் மேகங்களால் மறைக்கப்பட்டு கொஞ்சங் கொஞ்சமாக மறைய ஆரம்பித்தது. அப்படி மறைந்து போகும் அந்த நிலவுக்கு என் இறுதிக் குரல் கேட்டிருக்கும்!.......என் இரத்தக் குளத்திலே உதித்த இரத்தரோஜாவும் என் கடைசிக் குரலைக் கேட்டிருக்கும்.

வைகறையில் பனிக் கடலிலிருந்து வீசிய தண்ணெற்றஇளம் தென்றல் ரோஜாவை முத்தமிட்டதால்-அந்தமுத்தத்தின் சுவையால் பரவசமடைந்த ரோஜா களிப்புப் பெருக்கால் தன் இதழ்களை நன்றுகப் பிரித்து தென்றல் தன்னை நன்றுக அணைக்க அநுமதித்தது.

என் அந்திமக் குரலின் ஒலி தூரத்து மலைகளின் நடுவே செறிந்துக் கிடந்த நீல இருளினுள் நுழைந்து கேட்டது. இரவின் இன்பக் களைப்பால் சோர்ந்து கனவுக் கண்டு கொண்டிருக்கும் ஆடு மேய்க்கும் இடையர்கள் அவர்களின் கனவுத் தூக்கத்திலிருந்து எழுப்பியது. என் கடைசிக் குரல் நதிகளின் வழியே பாய்ந்தோடி கடலுக்கு இந்தச் செய்தியைத் தெரிவித்தது.

"பார்! பார்! நீ கேட்ட இரத்தரோஜாவைப் பார்! என்றது ரோஜாச் செடி. என் உயிரற்ற ஊன் பிண்டம் தான் தரையில் கிடந்தது. நான் தான் இறந்து விட்டேனே? என் இரத்தமும், உணர்ச்சியும்தான் பிரிந்து விட்டனவே! நீண்ட புற்களின் மீது என் பிணம் படுத்துக் கிடந்தது! ரோஜாவின் முள் என் இருதயத்தை கிழித்து நன்றுகப் பிளந்து விட்டிருந்தது.

இறந்தபிறகும் நான் பேசுகிறேனே என்று ஆச்சர்யப் படுகிறீர்களா? அதற்கு இதோ என்விடை! என்இரத்தத்தால் முகிழ்ந்த மலரில் தானே என் உயிரும் உணர்ச்சியும் உள்ளன? உங்களிடம் பேசுவது இப்பொழுது இரவுக் குயிலல்ல; அதன் குருதியிலே ஒரு ஜீவனைப் பிறந்த இரத்த ரோஜா பேசுகிறேன்! என் தியாகம் பற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

மறுநாள் பிறந்தது! பகல் மணி பன்னிரெண்டிருக்கும்.

அந்த மாணவன் தன் அறையின் ஜன்னலைத் திறந்தான். நான் அவனைப் பார்த்துச் சிரித்தேன். "என்ன அதிர்ஷ்டம்! என்ன அழகான சிவப்பு ரோஜா! இது போன்ற ரோஜாவை என் வாழ்க்கை முழுமையிலும் கண்டதேயில்லையே! என்று என்னை 'மளுக்'கெனப் பறித்தான்.

இப்பொழுதும் நான் மடியவில்லை. மலரில்தானே என்

ஆத்மா சஞ்சரித்துக் கொண்டிருக்கிறது!

என்னை எடுத்துக் கொண்டு, அவன் தன் காதலியிடம் ஓடினான்.

அவனின் ஆசைக்காதலி அவன் வீட்டுவாசலில் அமர்ந்து, நீலப்பட்டு நூல் கொண்டு ஆடை நெய்து கொண்டிருந்தாள். அவளின் காலடியில் ஒரு நாய்க்குட்டி படுத்துக் கொண்டு தன் எஜமானியின் சிவந்த பாதங்களைத் தன் நாவால் நக்கிக் கொண்டிருந்தது.

அந்த மாணவன் என்னைக் கையிலே வைத்துக் கொண்டு. "என் இருதய அரங்கிலே அமர்ந்திருக்கும் அழகின் ஏகப் பிரதிநிதியே! நான் உனக்கு சிவப்பு ரோஜாவைக் கொண்டு வந்தால், என்னுடன் கைகோர்த்து நடனமாடுவதாகச் சொன்னாயே! இதோ சிவப்பு நிறத்தை யெல்லாம் தன்னகத்தே கொண்டுள்ள சிவந்த ரோஜா! உன் பட்டாடையில் உன் இருதயத்துக்கு-அருகாமையில் இதைச் சொருகிக்கொள்ள வேண்டும். இந்த மலரை உன் நெஞ்சுக்குப் பக்கத்தில் செருகிக் கொண்டு நீ நடனமாடினால் நான் உன்னை எவ்வளவு தூரம் காதலிக்கிறேன் என்பதை உனக்குச் சொல்லும்" என்றான்! நான் அவனின் கையிலிருந்து கொண்டே.

அவள் தன் பிறை நெற்றியை நெறித்து "நான் அணியப் போகும் பட்டாடைக்கும் இந்த ரோஜாவுக்கும் ஜோடியாயிருக்காது என்று நான் கவலைப் படுகிறேன்! மேலும் மந்திரியாரின் மகன் எனக்கு நகைகளை அனுப்புவதாகச் சொல்லியிருக்கிறான்! நிச்சயமாக இந்தப் பூவை விட அந்த நகைகள் உயர்ந்தவையல்லவா?" என்றாள் அந்தப் பெண் சர்வ சாதாரணமாக.

"நீ முன்பு சொன்ன வார்த்தைகளை மறந்து விட்டாயா? என்னை ஏற்றுக் கொள்ளமாட்டாயா?" என்றான் ஏக்கமும் பணிவும் கலந்த குரலில்.

"நான் உன்னை ஏற்றுக் கொள்வதா? நீ நடந்து கொள்ளும் பாவனையே தவறானது. அது சரியல்ல! மேலும் நீ ஒரு சாதாரண மாணவன் தானே?

ஒரு சாதாரண மாணவனுக்கும், பளபளப்பான ஆடை அணிந்துள்ள மந்திரி மகனுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கும் என்பது உனக்குத் தெரிந்த விஷயம் தானே? என்றாள் அந்த அழகி!

"காதல் மிகவும் முட்டாள்தனமானது" என்று கூறிக் கொண்டே என்னை வீதியில் வீசியெறிந்தான் அந்த வாலிபன்.

என் தேகத்தின் மேல் புழுதி படிந்தது! எங்கிருந்தோ வந்த ஒரு வண்டி என்னை மிதித்து கசக்கிவிட்டு ஓடியது, நான் மாண்டேன்.

# மயக்கம் தெளிந்தது

## சிதம்பர ரகுநாதன்

"காஞ்சனா!"

பதிலில்லை.

"கமலா!"

பதிலில்லை.

"ரத்னா!"

பதிலில்லை.

"ரங்கா!"

பதிலில்லை.

அவன் சோர்ந்துபோனான். ஒன்றா, இரண்டா? எத்தனை கதவுகள்! ஓங்கி ஓங்கித் தட்டி, அவன் முஷ்டிகூட வீங்கிவிட்டது!

அதோ, ரத்னாவின் வீட்டு மாடியில் விளக்கு எரிகிறது, அவள் தூங்கியிருக்கமாட்டாள்!

அதோ, காஞ்சனாவின் வீட்டுக்குள் காற்சிலம்போசை கேட்கிறது. அவள் தூங்கியிருக்க மாட்டாள்!

அதோ ரங்காவின் வீட்டுக்குள் பேச்சுக் குரல் கேட்கிறது. ஆண் குரல்!......அவளும் தூங்கவில்லை!

அதோ காஞ்சனாவின் வீட்டுக் கதவு திறக்கிறது. புதிதாக ஒரு ஆசாமி நுழைகிறான். சிரிப்பு கலகலக்கிறது. அவளும்......!

அவனுக்கு உடம்பெல்லாம் பற்றி யெரிந்தது. சப்த நாக்குகளையும் சுற்றிச் சுழலும் அக்னியைப் போல, உடம்பெல்லாம் கனன்று கொழுந்து விட்டுக் கொதிப்பதுபோலிருந்தது.

அவன் மனசில் ஒரே எண்ணம்: காமம்! உடம்பில் ஒரே நெருப்பு: காமம்!

அவர்கள் ஏன் கதவைத் திறக்கவில்லை? ஒரு காலத்தில் அவர்கள் இவனது இதழ் அமுதுக்காக, எச்சில் தம்பலத்துக்காக, இனிய வார்த்தைக்காகத் தவம் கிடக்கத்தான் செய்தார்கள். அந்த அமுது இன்று கசந்துவிட்டதா? அந்த ஆனந்தம் இன்று அழிந்துவிட்டதா? "ஏன் என்னை அவர்கள் உதாசீனம் செய்கிறார்கள்!" அவன் துடித்தான்.

அவன் ரோகி; குஷ்டரோகி! அவனோடு கலந்து அந்த ரோகத்தைத் தாங்களும் பெறத் தயாராயில்லை, குஷ்டரோகியோடு கூடிக் குலாவுவதா? ஆனால்......ஆனால் அந்த ரோகமே அவர்கள் தந்த வரப்பிரசாதம்தானே!

கொடுத்த தானத்தை திரும்பப் பெற்றால் என்ன? அவனிடமிருந்து அவர்கள் பணம் பெறவில்லையா? வைரம், வைடூரியம், முத்து, மாணிக்கம், கோமேதகம், மரகதம், எல்லாம் பெறவில்லையா? இதையும் பெற்றுக் கொண்டால் என்ன? இல்லை. அவர்கள் பெற்ற சாமானைத் திருப்பித் தரவும் மாட்டார்கள்; கொடுத்த நோயையும் திரும்பப்

பெறமாட்டார்கள்! அப்படித் தானு?

இல்லை. இல்லை, இப்போதும் பணம் கொடுத்தால், அவர்கள் அவனைக் கலப்பதற்குக் கூச வில்லை. அவனையா கலக்கிருர் கள்! பணத்தை! பணத்தை! பணம் தந்தால் பிணத்தையும்!.... அவர்கள் தாசிகள்! வேசிகள்!...

ஆனுல் பணத்துக்கு அவன் எங்கே போவது? கைமுதலைக் கொள்ளை கொடுத்துத் தான் அவன் காலமெல்லாம் அந்தச் சுகத்தை அனுபவித்தான். ஆனுல், ஆசை—இருபதிலும் அறுபதிலும் குறையாத அந்த ஆசை இற்று விட்டதா?.........

அவனுக்கு வேண்டியதுஒன்றே ஒன்றுதான்: ஒரு பெண். ஒரு சதைப் பிண்டம். இல்லை......... பிறந்த இடம் நோக்கும் பேதை மனதுக்கு ஒரு சாந்தி; கரந்த இடம் நோக்கும் கண்ணுக்கு ஒரு திருப்தி!

அவன் உடம்பெல்லாம் கொதித்தது. என்ன பண்ணுவதென்று தெரியாமல், அந்த வீட்டு முன்னல், அந்தத் தெருவிலே, நாயும் படுத்துறங்கும் அந்தத் திண்ணையிலே, கிடந்தான். இந்திரன் கண்களைப்போல் உறுத்தும் தொழும்புப் புண்களின் நமைச்சல். வேள்வித் தீயாய் நிமிர்ந்தெரியும் காமாக்கினி— அவன் நிலை கொள்ளாமல் புரண்டு கிடந்தான்.

அவனை யாரும் அழைக்க வில்லை.

அதோ யாரோ அழைக்கிருர் கள்?.........

நிலவொளியில் தூரத்தில் தெரியும் கோபுர கலசத்திலிருந்து கண்டாமணி ஓசை ஒலித்தது; வயல் வெளிகளை, வான வெளியை நீந்தி அலையலையாய் வந்த ஓசை அவனை 'வா வா' என்று அழைத்தது!

"என் வேகும் உள்ளத்துக்கு அந்தக் கோயிலாவது சாந்தியளிக்குமா? என் உடலைத் தகிக்கும் காம நெருப்பு, அந்த கண்ணுதலின் கருணையால் அணைந்து விடுமா? இனி எனக்குக் கோயில் தானு கதி? அங்காவது சாந்தி கிடைக்குமா?"

அவன் மனம் அல்லாடியது.

கண்டாமணி ஓசை வா வா வென்று அழைத்தது.

'வருகிறேன், வருகிறேன்' என்று உள்ளம் கூவியது.

அவன் எழுந்திருந்து வயல் வெளிகளில் ஊடாக ஓடினுன்; காலடியில் நத்தைக் கூடுகள் நொறுங்கின; நீர்ப் பாம்புகள் நசுங்கின; கதிர்த்தாள்கள் காலை யறுத்து ரத்தம் குடித்தன.

அவன் ஓடினுன்; கண்டாமணி ஒலித்துக்கொண்டே இருந்தது.

## 2

இதுதான் கோயில்.

ஓடிவந்த அவன் பெருமூச்சு இரைக்க நின்ருன்; நிமிர்ந்து கோபுரத்தைப் பார்த்தான்; உச்சியிலே விளக்கெரிந்தது. அந்த

நிலவொளியின் பகைப்புலத்தில் கோபுரம் மோகினித் தீவுபோலத் தோன்றியது.

'சே! இதென்ன கற்பனை! ஆண்டவன் சந்நிதியைத் தேடி வந்த இடத்திலுமா இப்படி-?'

அவன் கோவிலுக்குள் சென்றான்.

முன் மண்டப முகப்பில் ஒரே கூட்டம். ஒளி மயமான மேடையில், ஜாஜ்வல்யமாக வெட்டி மினுக்கி மின்னல் தெறிக்கும், பட்டுப் பாவாடை கட்டி ஒரு பெண் ஆடிக் கொண்டிருந்தாள். முன்னே திருநீறு நிறைந்த சிவ நேசர்கள் அந்த அபிநயத்தில் ஆத்மார்த்தம் கண்டு கொண்டிருந்தார்கள்!

அவன் அவளைப் பார்த்தான்!

வா வா என்று அபிநயிக்கும் அந்தப் பிஞ்சு விரல்கள்! செம்பஞ்சு தீட்டிய பாதத்தின் நாக படம் போன்ற நளினம்! கடைந்தெடுத்த திருமங்கிலியச் செப்பைப்போல் திரண்டு குவிந்த கச்சிறுக்கு!

"இதென்ன இது. என் மனம் மீண்டும் அல்லாடுகிறதே! இதென்ன கோயிலா, விபசார மடமா?"

அவன் அங்கிருந்து ஓடினான்.

மேலப் பிரகாரத்தில் பௌராணிகர் கதை படித்தார். சிற்றின்ப வேட்கையில் தீயும் மனத்துக்கு, அந்த கதாகாலக்ஷேபமாவது புண்ணிய வசனமாகக்காதில் விழுந்து சாந்தி தராதா?' என்று அவன் கருதினான்.

ஆனால், அவரோ சிவபெருமான் பார்வதியைக் கலந்து, அதனால் ஏற்பட்ட கொதிப்பை சரவணப் பொய்கையிலே, கார்த்திகைப் பெண்களின் கண்காணிப்பிலே விட்ட கதையை......

"அட, தெய்வமே! சரவணபவா! இதென்ன இது! கோயிலிலும் சிற்றின்பம் தானா? சிற்றின்பப் பிரசாரம் தானா?"

அவன் மீண்டும் ஓடினான்.

பக்கத்திலே முருகனின் திருக்கோயில் இருந்தது. அங்கு நுழைந்தான்.

இவன் சென்ற சமயம் புரோகிதர் சிலைகளைக் கழுவி, புத்தாடை புனைந்துகொண்டிருந்தார்.

அவன் கண் முருகனிடம் நிலைக்கவில்லை. பக்கத்திலே குறுஞ் சிறப்பு குமிழிட, சாயாதகொம்பு இரண்டும் வல்லீட்டைப்போலக் கண்ணை உறுத்த, ஒடிந்து விழப் போகும் இடையைத் தாங்க, கை தன்னையறியாமலே நீளும்படிச் செய்யும்படி ஒயிலாகக் காட்டி நிற்கும் அந்தக் கானக் குறத்தியிடம், வள்ளியிடம் நிலைத்தது.

"அந்தச் சிலை மட்டும் உயிருள்ள யுவதியாக இருந்தால்?—மீண்டும் அந்த எண்ணம்! அந்த நெருப்பு அவியாதா?"

அவனுக்கு அங்கு நிற்கக் கொள்ளவில்லை. வெளியே ஓடி வந்தான்.

எதிரே விநாயகப் பெருமான்—விக்நேஸ்வரர் இருந்தார். "ஆண்டவா? என்னைக் காப்பாற்று!" என்று உள்ளம் இரங்

கிற்று. ஆனால், விநாயகப் பெருமானைச் சுற்றி வரையப்பெற்ற சித்திரங்கள்!

அவை அவன் கண்ணை உறுத்தின.

அசுரர்களின் பிறப்பை ஒடுக்க எண்ணி, அரக்கியின் கருவாயிலைத் தன் துதிக்கையால் பந்தம் செய்துகொண்டிருந்தார் அந்த விநாயகர்; அவர் தான் உச்சிட்ட விநாயகர்!

"இதென்ன இது? தம்பியும் அப்படி! அண்ணனும் இப்படியா? இந்தத் தெய்வமா பிரமச்சாரி! எந்தத் தெய்வமுமே எனக்குச் சாந்தி தராதா? நான் இப்படியே வெந்து நீருக வேண்டியதுதானு?"

அவன் மீண்டும் ஓடினன்.

ஆனால், கோயிலில் எங்கு திரும்பினலும் இதே காட்சிகள். இதே சிலைகள். இதே சிற்பங்கள்.

அதோ மன்மதன் கரும்பு வில்லை வளைத்து அம்பு எய்கிருன். எதிரே ரதி கிளி வாகனத்தில் கச்சு மறைத்த துணி நெகிழ்ந்து சரிய, நெற்றிக்குத் திலகம் இடுகிருள்!

அதோ இரு காதலர்கள். வரிசை வரிசையாக காதல் காட்சிகள்! ஆலிங்கன வகைகள்! ராஜக் கிரீடை; காம உத்சவம்; காதல் நாடகம்!

"இதென்ன கோலம்? இதுவா கோயில்? இங்கேயா நான் சாந்தியைத் தேடிவந்தேன், இதைவிட, ஒரு தாசியின் மடியில் சாந்தி கிடைக்குமே. அட தெய்வமே!"

அவன் ஒன்றும் புரியாமல் கண்ணை மூடிக்கொண்டு மூலஸ்தானத்துக்குள் ஓடினுள். "கடவுளே! என்னைக் காப்பாற்று, என் காமப் பசியைக் கொன்று விடு. நீதான் கதி. நீ தான் சரண்" என்று வெறிபிடித்துக் கத்தினன்.

கண்களைத் திறந்து மூலபிதாவை ஏறிட்டுப் பார்த்தான்.

ஆனால், மூலபிதாவே அங்கு லிங்க உருவாய் நின்ருர்.

அவன் தலை கிறு கிறுத்தது!

மறுகணம் அவன் கால் அங்கு தரிக்க வில்லை ஓடியே வந்தான். கோயிலை விட்டு, மூலஸ்தானத்தை விட்டு, முருகக் கடவுளை விட்டு, விநாயகப்பெருமானைவிட்டு ஓடி வந்தான்.

அப்போது கண்டாமணி ஓசை அவனை அழைக்கவில்லை.

## 3

அவன் வீட்டுக்கு வந்தான்.

கதவு திறந்தே கிடந்தது.

அவன் மனம் கட்டுத்தறி இழந்த காளையைப் போல்தான் இன்னும் துள்ளியது. அதை அடக்க அவனுல் முடியவில்லை.

நெருப்புத்தான் நெருப்பை அணைக்கும். தனிமையில் வேகும் தன் உடல் நெருப்பை வான மண்டலத்தின் சுடு நிலாவாவது அணைக்கட்டும் என்று நிலாமுற்றத்துக்குச் சென்ருன்.

அங்கு அவன் கண்ட காட்சி—

நிலா முற்றத்தில் மாதவிப் பந்தலின் நிழலே துகிலாய், அவள் படுத்திருந்தாள். குங்குமம் தீட்டிய மார்புக் குவடு, சக்கரவாகப் பட்சி போலத் தெரிந்தது. அவிழ்ந்து தொங்கும் கருமேகக் கூந்தல் நிலவொளியில் அருவி போல மின்னிற்று, கண் மலர் குவிந்திருந்தது; இதழ் குவிந்திருந்தது. அதில் குறுஞ் சிரிப்பு. ஆனந்தக் கனவோ? அல்லது கடந்த கால அனுபவத்தின் நினைவில் வெடித்த நகையோ?

அவன் அவளையே பார்த்தான்.

அவன் கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் ஒரு பெண்; ஒரு பெண்ணின் சதைப் பிண்டம், பட்சியை வா வென்றழைக்கும் பழுத்த மாம்பழத்தின் மோஹனம்!

அவன் கைகள் விறைத்துத் துறு துறுத்தன. உடம்பு விண்ணென்று தெறித்தது, கண்ணில் ரத்தம் பாய்ந்து, ரேகைகள் துடித்தன; நெற்றிப் பொருத்துக்கள் புடைத்தன.

அவன் ஓடித் தாவினான்; அங்கு சொகுசாக ஆனந்த சயனம் பண்ணும் அந்தப் பெண்ணை, அந்த பெண்ணுடம்பை அள்ளியெடுத்தான்; அணைத்தான், ஆரத் தழுவினான்!

இதழ் ஈரம் பரிவர்த்தனையாயிற்று.

அவள் விழித்துக் கொண்டாள். திடுக்கிட்டு எழுந்தாள்; திகைத்தாள்.

அவள் கண்டத்திலிருந்து ஒரே வார்த்தைதான் வெடித்து விழுந்தது:

"தம்பீ!"

அவன் காதில் அது விழவில்லை அவன் மனம் அதைக் கேட்கவில்லை! அணைத்தான்! முயங்கித் தழுவினான்!

"தம்பீ!"

அவள் கத்தினாள்.

அதோ அவள் அழைக்கிறாள். அவன் காதில் அது விழவில்லை. ஆனால், அந்தக் குரலுக்கு மேலாக எங்கிருந்தோ மீண்டும் நிலவொளியைக் கீறிக்கொண்டு, பனிபடலத்தின் புகை மூட்டத்தைப் பிளந்துகொண்டு அந்தக் கண்டாமணி ஓசை வந்தது; வந்து அவனை அழைத்தது!

அவன் விழித்துக்கொண்டான். "தம்பீ!"

அந்தக்குரல் இப்போது கேட்டது. கண்டாமணி ஓசையும் கேட்டது.

"தம்பீ! இதென்ன காரியம்?" என்று அவள் கேட்டாள்; அதே கேள்வியை அவன் மனம் முந்திக் கேட்டு விட்டது.

அவனால் அங்கு நிற்கமுடியவில்லை; கண்டாமணி ஓசையின் அழைப்பை உதற முடியவில்லை. ஓடினான்; பதிலே பேசாமல் ஓடினான்; அவளை ஒரு முறைகூட நிமிர்ந்து பார்க்காமல் ஓடினான்!

நிலவு மேகச் சேற்றில் அமிழ்ந்து விட்டது. தெருவிலே ஒரே இருள். அவன் மனசிலும் இருள். அந்தக் கண்டாமணி

தான் அவனுக்கு வழி காட்டிற்று. ஓடினான்.

இருளில் எங்கோ இருந்து ஒரு கழுதை கத்துவதை அவன் கேட்டான்.

அதைத் தொடர்ந்து இரு குரல்கள் எங்கோ வார்த்தைகளை இருளில் தேங்கவிட்டன.

" கிளம்பு. கழுதை கனைக்குது. நல்ல சகுனம்!" என்றது முதற் குரல்.

" இல்லையடா ? அது கத்தித் தொலைக்குது!" என்றது பதிற் குரல். அந்தக் கழுதையின் சத்தமும், இந்தக் குரல்களும் அவனுக்கு ஞானசிரியக் குரல்களாகக் கேட்டது.

அவன் காதில் இந்த இரு குரல்களும் கேட்டன. அவன் மணியோசை வந்த திக்கை, கோயிலை நோக்கி ஓடினான்.

"முருகா !"

அவன் கத்திக்கொண்டே ஓடினான். அவன் குரல் எதிரொலித்துப் பதில் வந்தது.

கோயிலின் முன் கதவு திறந்து கிடந்தது. " கந்தா !"

குரல் எதிரொலித்தது; இரண்டாம் கதவும் திறந்து கிடந்தது.

"சண்முகா !"

குரல் எதிரொலித்தது; மூன்றும் கதவும் திறந்தே கிடந்தது.

" வேலவா!"

" சரவணபவா !"

" கார்த்திகேயா !"

எல்லாக் கதவுகளும் திறந்தே கிடந்தன; எல்லாக் குரலும் எதிரொலித்தது.

மூலஸ்தானம் நெருங்கிய போது ஓடிவந்த வேகத்தில் படி தட்டி விழுந்தான், அவன் பிரக்ஞை அவனைக் கைவிட்டது.

மயக்கம் தெளிந்து எழுந்த அவன் கண்டத்திலிருந்து பின் வரும் நாதம் எழுந்தது.

*அளகநிரை குலையவிழி*
*குவியவளை கலகலென*
*அழகுமொழி பதறியெழ*
*அணியாரம்*
*அழகொழுகு புளகமுலை*
*குழையஇழை துவள்மிக*
*அமுதநிலை அதுபரவ*
*அதிமோகம்*
*உளமுருக வருகலவி*
*தருமகளிர் கொடுமையெனும்*
*உறுகபட மதனில்மதி*
*அழியாதே......*

அவன் பாடினான். அவன் பாடியது திருப்புகழ்; அவன் அருணகிரி!

# புயலுக்குப் பின்

"கே. ஸ்ரீ."

தகப்பன் : விஜயா ! விஜயா !

விஜ : அப்பா! எழுந்திருக்காதீர்கள். வேண்டாம்.

தகப் : மகனே ! சாளரத்தை மூடு. இயற்கை புரியும் கோர லீலைகளை என்னால் காண சகிக்க முடியவில்லை. மூடி விடு. உடனே செய்......

விஜ : இப்போது......

தக : ஜன்னலைத்தான் மூட நம்மால் முடியும். ஆனால் இயற்கையின் சீற்றம் தானாகவல்லவா தணிய வேண்டும்.

விஜ : சதா சாந்தமாயிருப்பதற்கு அதற்கே அலுப்பு தட்டாதா !

தகப் : அதன் அலுப்பு தீருவதற்குள் எத்தனை பேர்களின் உயிரும் தீர்ந்து விடுகிறது. அதை தான் நீ சிந்திக்கவில்லை !

விஜ : அப்பா, என்னை மன்னியுங்கள். தாங்கள் சிந்தும் கண்ணீர் என்னை கலக்குகிறது. தெரியாமல் ஏதோ சொல்லிவிட்டேன்

தக : விஜயா !

விஜ : அப்பா !

தக : இப்பேர்ப்பட்ட பெரும் புயல்கள் வீசும் போதெல்லாம் என் மனப்புயல் வெறிகொண்டு வீசும்.

விஜ : மனப்புயலா ? என்?

தக : புயலுக்கும் என் வாழ்க்கைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு விஜயா?

விஜ : தங்கள் வார்த்தைகள் என்னை திகைக்க வைக்கின்றன.

தக : ஆம், விஜயா. ஆம். புயல் எப்போதெல்லாம் ஒரு அசாதாரண வேகத்துடன் வீசுகிறதோ, அப்போதெல்லாம் என் வாழ்க்கையிலும் ஒரு அசாதாரண சம்பவம் நிகழ்ந்தே தீருகிறது.

விஜ : அப்படியானால்......

தக : அதனால்தான் என்மனம் சஞ்சலப்படுகிறது. புயல் அகோரமாக வீசினால், என் மனம் நங்கூரம் இழந்த கப்பல் போல் பரிதவிக்கும். ஒரு மீள முடியாத சூழ்நிலையில் சிக்கிவிடும்.

விஜ : அப்பா, இது ப்ரமை என்றே நினைக்கிறேன்.

தக : நினைப்பது தவறு. விஜயா ! உன்னைக் காணும் ஒவ்வொரு பொழுதும் என் உள்ளம் எவ்வாறுபடபடக்கும் தெரியுமா?

விஜ : என்னைக் கண்டா?

தக : ஆம், உன்னைக் கண்ட ஒவ்வொரு கணமும்தான்.

விஜ : இன்று வரை தாங்கள் இதை எனக்குக் கூற வில்லையே!

தக: எடுத்துக் கூற சந்தர்ப்பம் நேரவில்லை.

விஜ: அப்பா, இப்போது தான் எனக்கு உண்மை விளங்குகிறது. அன்றுடம் உங்களைநான் சந்திக்கும்போது, தங்கள் கண்கள் சிறிது நேரம் துடித்து ஓய்வதற்குகாரணம் இன்றே விளங்குகிறது.

தக: மகனே, அதனுல்தான் இதுபோன்ற புயல்கள் வீசினுல் என் உள்ளம் நின்றுவிடும்போல் அடித்துக் கொள்கிறது.

விஜ: அப்பா, வேண்டாம், வேண்டாம், பேசாமலிருங்கள். மனதை அலேய விடாதீர்கள்.

தக: மகனே, உன்னிடம் இதைக்கூற வேண்டும் என்று தூண்டுகிறது இந்தப் புயல். ஆம், உன்னிடம் ஏன் இதை மறைக்க வேண்டும் விஜயா, நீ பிறந்தாய். மறு விஞடியே, ஒரு புயலும் பிறந்தது. ஒரு பயங்கர புயல் பிறந்தது.

விஜ: என் தாய், என் அருமைத் தாயின் கதி?

தக: அவள் உயிர் நீத்தாள்.

விஜ: தெய்வமே, ஒருவர் மரணத்திலா நான் பிறக்கவேண்டும்

தக: விஜயா, அதனுல்தான் நீயும் புயலும் இரட்டைப் பிறவிகள் என்றே கருதுகிறேன். அதுவும் இதுபோன்ற பயங்கரப் புயல் அகோரமாகவீசும் தோறும் என் மனம் பதறுகிறது. எனக்கு என்ன நேர்ந்து விடுமோ என்ற பயம் தான்.

விஜ: அப்பா, உங்கள் உடல் நடுங்குகிறதே, உங்கள் கண்கள் வலேயில் சிக்குண்ட மீன் போலல்லவா துடிக்கின்றன? கண்ணீர் சிந்தாதீர்கள். என்னுல் அதைக் காண முடியவில்லே.

தக: மகனே, இப்படி வா என் அருகில் வா.

விஜ: ஏன் உங்கள் உடல் இப்படிக் கொதிக்கிறது?

தக: மனதில் சாந்தி இருந்தால் அல்லவா?

விஜ: அப்பா, வேண்டாம், வீணுக மனதை குழப்பிக் கொள்ளாதீர்கள். நடந்தது நடந்து விட்டது.

[இடி இடிக்கிறது]

தக: என்ன பயங்கர இடி! என் உடலே உலுக்குகிறதே!

காஞ்சன: (தூரத்திலிருந்துகதவைத்தட்டி) கதவைத் திறவுங்கள்! கதவைத் திறவுங்கள்! கதவைத் திறவுங்கள்!

தக: விஜயா!

விஜ: அப்பா!

தக: உன் காதில் விழுந்ததா?

விஜ: எது, அப்பா?

தக: ஏதோ ஒரு குரல்?

விஜ: இல்லே. அது இடி ஓசை.

தக: இல்லே, இல்லே. அது...

காஞ்: திறக்க மாட்டீர்களா? ஐயோ தயை புரியுங்கள். உங்களுக்கு கோடி புண்ணியமுண்டு. ஒரு நிமிடம் தாமதித்தால் என்

உயிருள்ள உடலைக் காணமுடியாது. நிச்சயம், நிச்சயம்.

விஜ : ஆம், இது பெண் குரலல்லவா?

தக : அபயக்குரல், ஒரு அபலையின் குரல் மகனே, சீக்கிரம் அவளை உள்ளே அழைத்துவா. (கதவு திறக்கும் சப்தம். பயங்கர இடி)

தக : அம்மா வா, சொட்டச் சொட்ட நிற்கிருயே. அந்த திரைக்குப் பின் சென்று உன் ஆடைகளை மாற்றிக் கொள். போ, சீக்கிரம், அங்கே போர்வை இருக்கிறது.

காஞ் : ஸ்வாமி, இதோ வருகிறேன்.

தக : மகனே.

விஜ : அப்பா.

தக: அவளை அபலை என்றேமே, அவள் அழகு நம்மை உன்மத்தமாக்குகிறதே?

விஜ : இவள் புயலின் புத்திரி. இவள் தோற்றம் என் நினைவில் ஒரு அழியா மலராக புஷ்பித்து விட்டது. இவள் உருவை படத்தில் தீட்டினல், ஆஹா, நான் அமரத்வம் அல்லவோ லகுவில் அடைவேன்.

தக : உஸ், விஜயா, உன் கலா ரஸனையில் முன்பின் அறியாத ஒருத்தியை திகைக்க வைக்காதே. ஆம் அதோ அவளே வருகிருள். அம்மா... நீயார்?

காஞ் : ஸ்வாமி! நான் திக்கற்றவள். என் பெற்றேர்களை சிறு வயதிலேயே இழந்தேன். என் மாமன் வீட்டில் நேற்று வரை வளர்ந்தேன். மாமி கொடுமை பொறுக்க முடியாமல் எங்காகிலும் ஓடிப்போய் வாழலாம் என்ற துணிவுடன் கிளம்பினேன். புயலில் சிக்கிக் கொண்டேன். தாங்கள் காப்பாற்றுவிட்டால் என் கதி படுமோசமாக மாறியிருக்கும்.

தக : அம்மா! கவலைப்படாதே. இவன்தான் என் ஒரே மகன் விஜயன். ஒரு புத்திரி இல்லையே என்ற ஏக்கம் எனக்கு நெடு நாளாகவே உண்டு. அந்தக்குறை உன்னல் இன்றே தீர்ந்தது.

காஞ் : ஸ்வாமி! நானே பாக்யவதி! என்னை நீங்கள் ஏற்றுக் கொள்ள என்ன பாக்யம் செய்தேனே.

தக : அம்மா...உன் பெயர்...

காஞ் : காஞ்சன!

தக : காஞ்சன ! அமிழ்தினும் இனிய பெயர்...காஞ்சன! விஜயன் சைத்ரீகன். எது அழகாயிருந்தாலும் அதை திரையில்தீட்டிவிடவேண்டும்என்றுதுடியாய்த் துடிப்பவன்.

காஞ்: ஸ்வாமி, தங்கள் எச்சரிக்கைக்கு ரொம்ப சந்தோஷம்.

விஜ: காஞ்சன, அப்பா குற்றச்சாட்டை நம்பிவிடாதே.

காஞ்: ஸ்வாமி, நான் எந்த விஷயத்திலும் தீர ஆலோசித்தே நடப்பவள். விரைவில் எதற்கும் தீர்ப்பு அளிக்க மாட்டேன்.

தக: தீர்க்க தரிசனம் வாழ்க்கையின் திறவுகோல் காஞ்சன.

காஞ் : சந்தர்ப்பம் அறிந்தே

அதை பயன் படுத்திக் கொள் வேன். தங்களுக்குத் தயக்கமே வேண்டாம்.

தக : நீ கெட்டிக்காரி, உன் கண்களே அதற்கு சாக்ஷி கூறு கின்றன.

விஜ : காஞ்சனு.

காஞ் : ப்ரபோ.

விஜ : காஞ்சனு, என்னை அப் படி அழைக்காதே.

தக : விஜயா, உன் தனிமைக்கு நல்ல தோழி அகப்பட்டாள்...... என்ன, இன்னமும் புயல் அடங்க வில்லையா? என்னக்கொடியபுயல்.

காஞ் : புயலை இகழாதீர்கள். அது வீசா விட்டால் இந்த அப லைக்கு விமோசனம் கிட்டி இருக் குமா?

தக : காஞ்சனு, நீ களைப்புற் றிருக்கிருய். கொஞ்சம் பாலும் பழமும் மீதி யிருக்கின்றன. அதை சாப்பிட் டுவிட்டு உறங் கப்போ அம்மா.

காஞ் : அப்படியே ஸ்வாமி.

## காட்சி 2

[காஞ்சனு குதூகலகமாகப் பாடுகிருள்]

விஜ : (வந்து கொண்டே) காஞ்சனு, தந்தையும் உன் கானத் தில் லயித்துப் போய்விட்டாரே!

தக : வா, விஜயா, வா, குழந்தை காஞ்சனுவின் மந்த காசம் என்னை மெய் மறக்கச் செய்தது. என் முதுமையை மறந்தேன். கீத உலகில் என்னை மறந்து சஞ்சரித்தேன்.

விஜ : காஞ்சனுவை அழகி என்றே நினைத்தேன், இத்தனை அழகாகப் பாடுகிருளே. அவள் கீத அலைகளை சித்திரத்தில் பதிய வைத்தால்?

தகப் : விஜயா, உன் கலைக் கனவுகளுக்கு ஓய்வு கொடு. கீதச் சுரங்கம் அவள் குரலில் புதைந்து கிடக்கிறது. அவள் கற்பனை ஒன்றே அதனின்றும் அமரஸ் வரங்களை வெட்டியெடுத்து வான வெளியில் சிதறும்.

விஜ : அப்பா, நீங்களே பாருங்கள். என் ஓவியத்தில் அவள் கீதத்தை பதிய வைக் கிறேனு இல்லையா? நீங்களே பாருங்கள்.

தகப் : காஞ்சனு உன் நினை வில் பதிந்து விட்டாள். அதற்கு மெருகு தீட்டுவது உன் கற்பனை யின் திறந்தான். மகனே, நதிக் கரை வரை சென்று வருகிறேன். ஜாக்கிரதையாக இருங்கள்.

[போகிருர்]

விஜ : பார்த்தயா காஞ்சனு?

காஞ் : உம், கற்பனைக் கன வையா?

விஜ : அப்பாவின் எச்சரிக் கையை கவனித்தாயா என்றே கேட்டேன்.

காஞ் : ஆம், அவர் கூறியவை உண்மைதானே!

விஜ : உண்மையா?

காஞ் : அப்பா கூறியது வாஸ்தவம்தான்.

விஜ: பார்த்தாயா உன் பிடிவாதத்தை?

காஞ்: உங்களிடம் அவருக்கு நம்பிக்கையில்லை. இல்லையேல் அந்த வார்த்தைகள் வெளிவர சந்தர்ப்பம் இல்லையே.

விஜ: காஞ்சன! (பெருமூச்சு)

காஞ்: ப்ரபோ, ஏன் இந்தப் பெருமூச்சு?

விஜ: என் உறுதிக்குப் பங்கம் ஏற்படுமோ என்றே அஞ்சுகிறேன்.

காஞ்: உங்கள் ஏக்கம் நீடிக்காது. ஒரு உறுதியான முடிவுக்கே உங்களை இழுத்துச் செல்லும்.

விஜ: காஞ்சன, உன்னைக் கண்ட மறுகனமே என் உள்ளத்தில், விவரிக்க முடியாத உணர்ச்சிகள் அலைமோதின......காஞ்சன என்ன, இது?

காஞ்: ஒன்றுமில்லை, விஜயா.

விஜ: ஒன்று மில்லாமல் தான் கண்கள் கலங்குகின்றனவா?

காஞ்: துக்கத் துடனேயே பழகிவந்த என் கண்கள் இன்பக் காக்ஷிகளைக் கண்டு மிரள்கின்றன. இதைத் தவறாக நினைக்க வேண்டாம்.

விஜ: காஞ்சன, கலா வெற்றி ஒன்றே என் ஜீவிய லக்ஷியம், இதுதான் என் உறுதி—மற்ற உணர்ச்சிகளுக்கு கௌரவம் அளிக்க என் உள்ளம் மறுக்கிறது. காஞ்சன, என் கண்முன் நீ பொன் மடந்தையாகவே தோன்றுகிறாய். என் கலா உணர்ச்சிக்கு உயரிய மெருகு தீட்ட வந்த ஜோதி என்றே உன்னைக் கருதுகிறேன்......காஞ்சன, ஏன் கண்ணீர் சிந்துகிறாய்?

காஞ்: குற்றம் என்னுடையதல்ல என்று முன்னரே சொன்னேனே!

விஜ: எது எப்படியிருந்தாலும் காஞ்சன, நீ மனம் கலங்கி வருந்துவதை நான் காண சகிக்க மாட்டேன். இது சத்தியம். பார், என்னைப் பார், என்னைப் பார். இப்போது. ஆம், அதுதான் கெட்டிக்காரத் தனம். விஜயன் முன்னிலையில் காஞ்சன கண்ணீர் சிந்துவதா?

காஞ்: விஜயா! உங்களுக்கு கானத்தின் மீது அருவெருப்பு இல்லையே!

விஜ: நன்றாகக் கேட்டாய், என்னை கானப்பித்தன்என்றாலும் மிகையாகாது. அதுவும் உன் போன்ற அதி அற்புத கலாவாணிகளின் அடிமை அல்லவா நான்.

காஞ்: விஜயா, நீங்கள் சற்று முன் கூறிய உறுதி மொழியை மறக்காமல் இருக்கப் போகிறீர்களா? என்ன பயங்கர உறுதி மொழி. என் வாழ்வைக் குலைத்து விடும் போலிருக்கிறதே! அதோ அப்பாவே வருகிறார். நான் மாலை உணவை கவனிக்கிறேன்.

## காட்சி 3

சேனதிபதி: (சிரித்து) குப்பையில் மாணிக்கம்-சபாஷ், சசாங்க. உன் கற்பனை அபாரம்தான்.

சசா : சேனாதிபதி, எல்லாம் உங்களுக்கு கேலியாகத்தான் இருக்கும். ஏழை சொல் அம்பலத்துக்கு ஏறுமா ?

சேன : நண்பா, உன்னிடம் எனக்கு நம்பிக்கையில்லாமலில்லை. ஆனால் சஞ்சாரமற்ற மதிப்பாரற்ற இந்த இடத்திலா ஒரு சுந்தரி வசிக்கிறாள்? நல்ல கற்பனை.

சசா : சேனாதிபதி, இவ்வளவு தூரம் வந்து விட்டீர்கள். இன்னும் சற்று தூரம்தானே.

சேன : ப்ரயாணத்தின் முடிவிலேதான் சஞ்சலத்தின் துடிப்பு. சரி, சசாங்க, நான் தயார்.

சசா : பரபோ, தங்கள் காதில் விழுகிறதா?

சேன : ஆம்...என்ன தெய்வீக கானம்.........சசாங்க, இந்த கீதம் என்னை எங்கோ இழுத்துச் செல்கிறதே.

காஞ்சன : (தொலையில் உருக்கமாகப் பாடுகிறாள்)

**கூவி அழைத்திடும் மலரே...நின்**
**காவிய வண்ணமும் மெய்யோ**
**நெஞ்சிலே மோதிடும் மதுவும்**
**வஞ்சனை செய்திடும் அமுதோ**
**தென்றலில் ஆடிடும் தேனே**
**வண்டே**
**வென்றிட வஞ்சினை யோடே**
**கள்ளக் கிருக்கினை ஊட்டி**
**வெள்ளை மலர்ச்சிறை வளர்ப்பாய்**

சேன : இவள் தேவகன்னிகை போலல்லவா......

சசா : ப்ரபோ, மெதுவாகப் பேசும். இம்மொழிகளைக்கேட்டு இந்த யுவதிப் பிரமித்துப் போய் விடுவாள்.

சேன : சசாங்க, அவள் எங்கோ துரிதமாகப் போகிறாள்.

காஞ் : அவள் நடையைவிட தங்கள் மனம் அல்லவா வேகமாகப் பறக்கிறது.

சேன : உன் விளையாட்டு இருக்கட்டும்.

சசா : குறுக்கே நிற்பவன் சசாங்கன் அல்ல. சாமர்த்தியம் இருந்தால் வெற்றியா கிட்டாது ? போங்கள், போங்கள்.

சேன : தனிமையில் செல்வது தவறு.

காஞ் : தனிமையில் செல்லும் பெண்ணின் வழியை மறிப்பது பெரும் தவறல்லவா ?

சேன : வழி மறிப்பவன் நானல்ல.

காஞ் : பின் குற்றம்.........

சேன : உன்னுடையது தான்.

காஞ் : என்ன குற்றமோ ?

சேன : என்ன குற்றம் என்றா கேட்கிறாய் ? மனம் துணிந்து.

காஞ் : துணிந்தல்ல, மன மிளகி கேட்கிறேன்.

சேன : என் நெஞ்சைப் பதற அடித்த குற்றம்.

காஞ் : நீதியைக் கோரி வந்த தாங்கள், தீர்ப்பையும் அளிக்க தாமதிக்கமாட்டீர்கள் போலிருக்கிறதே ?

சேன : நீதிப் பாதையில் சஞ்சலமின்றி சென்ற என்னை, உன்

எழில் காந்தம்போல் இழுத்து ப்ரேமைப் பாதையில் திசை தெரியாமல் திரியச் செய்கிறது.

காஞ் : தனிமையில் செல்லவே துணிவு கொள்ளும்.

சேன : இத்தனை எழிலும் அதி அற்புத கானமும் பெற்ற நீ உன் மனதைக் கல்லாக்கிக் கொண்ட விந்தைதான் எனக்கு விளங்கவில்லை.

காஞ் : தாங்கள்......

சேன : இந்நாட்டின் சேனுதிபதி.

காஞ் : பேஷ். தெரிந்துகொண்டேன். விரோதியை நாட்டு எல்லையை விட்டு விரட்டவேண்டிய நீங்கள்வலுவில்பிரேமையைவளர்க்க மனம் துணிந்தது ராஜநீதிபோலும்? காஞ்சன எளியவள்; ஆனல் இன்னமும் திக்கற்றுப் போகவில்லை.

சேன : காஞ்சன! எத்தனை ஆயிரம் முறை ஜபித்துக்கொண்டு இருக்கலாம். காஞ்சன, இளமை ஒரு மகத்தான பொக்கிஷம். அதை நக்கவரிடம் பறிகொடுக்க வேண்டும். அதற்கு வேண்டிய காவலாள்.......

காஞ் : நாட்டின் சேனதிபதி ஒருவர்தான்...அப்படித்தானே.

சேன : காஞ்சன! உன் போன்ற சுந்தரி பாதுகாப்பின்றி இந்த பயங்கர காட்டில் திசை தெரியாமல் அலைவது மட்டற்ற மதியீனம்!

காஞ் : சேனதிபதி! அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். நாட்டின் பாதுகாப்பில் மனதை நிலை நாட்டும்.

சேன : கன்னி மடங்கள் நிறைந்த இந்நாடும் என் பாதுகாப்பில்தான் இருக்கின்றன, அவைகளுக்கு பங்கம் ஏற்படாமல் பாதுகாப்பதும் என் முதல் கடமை.

காஞ் : தங்கள் கடமைக்கு பங்கம் ஏற்படாமலிருப்பதற்கே நான் வாதாடுகிறேன் ஸ்வாமி, ஒரு கன்னி உள்ளம் கலங்கினல், நீதி நிலைகுலையும், நாடு சீர்குலையும், வளையாத செங்கோலும் விழுந்து மறையும்.

சேன : உன் பயங்கர கற்பனை போதும். காஞ்சன, நீ உலகம் அறியாதவள். உன் போன்ற கான கன்னிகைகள் நீ பிறந்து வளர்ந்த நாட்டின் மதிப்பிடமுடியாத செல்வங்கள்.

காஞ் : அதன் பாதுகாப்பிற்கு தாங்கள் கவலைப்பட வேண்டாம்.

சேன : காஞ்சன! போகப் போக உண்மை உனக்குத் தானகவே விளங்கும்.

காஞ் : அதுவே என் பிரார்த்தனை.

சேன : காஞ்சன, உன்னை மீண்டும் எங்கே காணலாம்?

காஞ் : இன்பமும் துன்பமும் கூடும் கடும் இடைவெளியில்.

சேன : காஞ்சன, உன்னை அப்புறம் காண்கிறேன். அதற்குள் உன் மனம் மாருமலா யிருக்கும்?

## காட்சி 4

காஞ்: (பாடுகிருள்-வருத்தமாக)

வகை அறியேன் வழி இழந்தேன்
வாழ்க்கைக் கனவில் மதி மறந்தேன்
இந்த உலகில் ஏன் பிறந்தேன் நான்
இந்துவைப் போலே தேய்ந்திருந்தால்

விண் உயிர் கலைஞர் ஓவியக் கனவு
சஞ்சலமின்றி ஓங்கிடாதோ?

ப்ரேமை பாதையில் எனை மறந்தேன்
பெரியவர் மனதையும் குதறுகிறேன்

சஞ்சல வாழ்வை நஞ்சமென்றடைந்து
அஞ்சும் விஜயரை வஞ்சகமாய்
என் மணவாளன் என்று எம்வரித்தேன்
என்மனம் குளிர்ந்து களித்திடுமோ?

விஜ: காஞ்சன பாடின பாட்டா இது?

காஞ்: விஜயா!

விஜ: காஞ்சன, ஏனம்மா ஏதோ மாதிரி இருக்கிருய்?

காஞ்: நிம்மதியிழந்த உள்ளம் வேறு எப்படியிருக்கும்!

விஜ: காஞ்சன! ஏன் இப்படி பேசுகிருய். உன் மனம் புண்படுவதைக் காண என்னல் சகிக்க முடியவில்லை. காஞ்சன, வேண்டாம், வீணுக உன் பெண் உள்ளத்தை குழப்பிக் கொள்ளாதே!

காஞ்: குழப்பிக்கொள்வதும், குழப்பிக் கொள்ளாததும் என் கையில் இருந்தால் தானே.

விஜ: என்ன விபரீத வார்த்தைகள்!

காஞ். ஆம், விஜயரே! ஆம்.

விஜ: உன் பெரு மூச்சு என்னை ஆலகாலமென தகிக்கிறது.

காஞ்: என் பெருமூச்சே உங்களை தகித்தால், அதன் ஜனன பூமியானஎன் உள்ளம் எவ்வாறு கொதிக்கும் என்பதை தாங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களா?

விஜ: காஞ்சன, உன் மனோ விகாரம் என்னை பைத்தியம் ஆக்கிவிடும் போலிருக்கிறதே!

காஞ்: என் மனம் வெந்து சாம்பலாகிறதே.

விஜ: போதும், போதும், காஞ்சன, உன் மனதைப் பதற அடிக்கும் குறைதான் என்ன?

காஞ்: விஜயரே! நீங்கள் எத்தனை நாட்கள் குழந்தையாகவே இருக்கப்போகிறீர்?

விஜ: நான் கற்பனையின் குழந்தை: காலத் தொட்டிலில் தவழ்ந்து, ஓவிய ஜாஜ்வல்யங்களை சிதறுவேன் நக்ஷத்திரங்கள் நடுவே நர்த்தனம் புரிவேன். அந்திப் பொழுது இரவுடன் மௌனமாய் கரைவதைக் கண்டு குதூகலிப்பேன். அலை நடுவே துயில் கலைந்து எழும் மதியுடன் மகிழ்ந்து வானப் பொய்கையில் மிதந்து செல்வேன்.

காஞ்: நிறுத்தும், நிறுத்தும், போதும் உம் அர்த்தமற்ற மொழிகள், விஜயரே! ஒரு கன்னி உள்ளம் பரிதவிக்கையில் உம் கற்பனைப் பரவசம் பாழடைந்து போகட்டும்.

விஜ: காஞ்சன! காஞ்சன! நீயா இப்படிப் பேசுகிருய்?

காஞ்: ஆம், மதியிழந்த கலை

ளுன் தோழி காஞ்சனதான் பேசுகிருள். புத்தி மீண்டும் வருமா என்றும் பிரார்த்திக்கிருள் காஞ்சனதான் பேசுகிருள்.

விஜ: காஞ்சன! என்ன குழப்பம் உனக்கு?

காஞ்: ஸ்வாமி, என்னைப் பாரும். என் அங்கமெல்லாம் பதறுவதைப் பாரும். இப்போதாவது உமக்கு உண்மை விளங்கவில்லையா!

விஜ: காஞ்சன! அப்படியே இரு! உணர்ச்சியின் சிகரம் உன் தோற்றத்தில் பளிச்சிடுகிறது. அதன் ஒளி தேய்வதற்குள் சித்திரமாகத் தீட்டி விடுகிறேன். இரு, அப்படியே இரு. என் எழுதுகோலையும் எடுத்து வருகிறேன். இதோ வந்து விடுகிறேன்.

காஞ்: விஜயரே!

விஜ: காஞ்சன!

காஞ்: நில்லும். என் கன்னி உள்ளம் பதறுவது, உம் கலா வளர்ச்சிக்கு அல்ல. தெய்வமே! என் கலி என்று தீரும்? போங்கள்! என் முன் நிற்காதீர்கள், என் முன் நிற்காதீர்கள்.

விஜ: தெய்வமே!பெண்மையை உணரும் சக்தியை கலைஞனுக்கு அளிக்கமாட்டாயா?

## காட்சி 5

சேன: காஞ்சன!

காஞ்: சேனதிபதி! இங்கு ஏன் வந்தீர்கள்?

சேன: காஞ்சன! நான் வரவில்லை. நான் இங்கு எப்படி வந்தேன் என்று எனக்கே தெரியவில்லை.

காஞ்: சேனதிபதி! என் மனப்புண் கொஞ்சம் கொஞ்சமாக ஆறி வருகிறது என்று நினைத்தேன். அதைக் குதறிவிட மீண்டும் வந்துவிட்டீர்களே!

சேன: காஞ்சன! உன்னிடம் உண்மையை உரைக்கவே வந்தேன். உன்னைக் கண்டது முதல் என் மனம் ஒரு நிலையில் இல்லை. நீயின்றி என்னல் ஒரு பொழுதும் வாழமுடியாது என்ற முடிவுக்கே என் மனம் என்னைத் தூண்டுகிறது.

காஞ்: ஸ்வாமி, தங்கள் ப்ரேமை அர்த்தமற்றது, என்மனம் தங்களை நாடவில்லை, அதை ஏற்கனவே ஒருவருக்கு அர்ப்பணம் செய்து விட்டேன்.

சேன: காஞ்சன! உன் போன்ற பேரழகிகள் இப்படித் தீர்மானிக்க அவர்களுக்கு உரிமையேயில்லை. தகுந்த பாதுகாப்பில்லா விட்டால் உன்போன்ற சுந்தரிகளின் வாழ்க்கை அலங்கோலப்பாதையில்இழுத்துச்செல்லப்படும். வீண் பிடிவாதம் செய்யாதே, இந்நாட்டின் சேனதிபதி உன்னை மண்டியிட்டு வேண்டுகிறேன்.

காஞ்: ஸ்வாமி, என் மனதை கலைக்காதீர்கள். மனித உள்ளத்தில் ப்ரேமை ஒரே ஒரு முறை தான் விகஸிக்கும் என்று வாதாடுவர்களில் நானும் ஒருத்தி—அது துளிர்த்தாலும், பட்டுப்போனலும் அதன் பலாபலன்களை அனுபவிக்க வேண்டியவள் நான் தான்.

சேஞ: நீ வளர்க்கும் ப்ரேமை கானகத்தில் காயும் நிலவு போல் பட்டுப் போகுல்.

காஞ்: ஒரு காலத்தில் அது எனக்கு அளித்த இன்பம் என் வாழ்நாள் முழுவதிலும் நீடிக்கும் என்றே நம்புகிறேன்.

சேஞ: இல்லே, வீண் நம்பிக்கை காஞ்சன! நீ விஜயனை காதலிக்கிருய் என்பதை அறிவேன். ஆனல் அவன் உன்னை மதிக்க வேண்டாமா?

காஞ்: வரம்பு மீறிப் பேசாதீர்கள். எதற்கும் எல்லே உண்டு. என் வாழ்கைத் துணேவனைத் தேர்ந்தெடுக்க எனக்கு உரிமை உண்டு. ஒருவர் வற்புறுத்தலில் நான் ஏமாற மாட்டேன்.

சேஞ: நானும் மன்ருடிப் பார்த்து விட்டேன், நீ இன்னமும் குழந்தைபோல் வாதாடுவது அர்த்தமற்றது.

காஞ்: எனக்கு உண்மை புகட்ட உங்களை நான்நாடவில்லே, நிர்ப்பந்தம் ஒன்றுமில்லே. நீங்கள் போகலாம்.

சேஞ: காஞ்சன, நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன், நீ அசைவதாகத் தோன்றவில்லே. இது மட்டும் நிச்சயம். கவனமாகக் கேட்டுவா, என் உயிர் உள்ள மட்டும் நீ மாற்ருனே மணக்க நான் பார்த்திருக்கப் போவதில்லே.

காஞ்: சேஞதிபதி, நீங்கள் போகிறீர்களா? அல்லது......

சேஞ: உன் பிடிவாதம் எத்தனை நாட்கள் தான் நீடிக்கும் என்பதைப் பார்த்து விடுகிறேன். இறுதியில் நீயே என் காலில் வந்து விழா விட்டால் என் பதவி இருந்தென்ன? மறைந்தாலென்ன?

காஞ்: இந்த ஜன்மத்தில் அது நடக்காது.

சேஞ: அபஜயமே அறியாத எனக்கு உன்போன்ற அபலேயின் பயமுறுத்தல் வியப்பையே அளிக்கிறது.

காஞ்: வியப்பு வியாகூலமாக விண்டு போகும். மறக்காதீர்கள்.

சேஞ: வீண் பொழுது போக்க எனக்கு நேரமில்லே. இன்னும் சில தினங்களில் என்ன நடக்கிறது என்பதை நீயே உணர்வாய். (போகிருர்)

விஜ: அற்புதம்! அதி அற்புதம்! நான் எதிர் பார்த்ததற்கு மேலாக சித்திரம் பூர்த்தி அடைந்து விட்டது.

காஞ்: உங்கள் சித்திரம் பூர்த்தி அடைந்து விட்டது. அந்த பூரிப்பில் ஒரு பெண்ணின் உள்ளமும் நொறுங்கி விட்டது.

விஜ: காஞ்சன, வர வர நீ பேசுவதெல்லாம் ஏதோ விபரீதமாகவே இருக்கின்றன.

காஞ்: விபரீதம்! விபரீதம்! அன்பரே, என் வாழ்க்கையில் விபரீதத்தைத் தவிர வேறு என்ன கண்டேன்! நீங்களே சொல்லுங்கள்.

விஜ: காஞ்சன, ஏன் உன் உடல் பதறுகிறது?

காஞ் : பதறுகிறதா! விஜய ரே! உம் கலைப்போக்கிற்கு ஓய்வு கொடுங்கள். உண்மையை நன்கு விழித்துக் கவனியுங்கள் அன்பரே! என் கன்னித் தோற்றம் உங்கள் எண்ணத்தில் ஒரு மாறுதலையும் ஏற்படுத்த வில்லையா?

விஜ : மாறுதலா? நன்ருகச் சொன்னுய்? நான் வரைந்து வரும் சித்திரங்கள் எல்லா வற்றிலும் உன் உருவம் அல்லவா உயிரோட்டமாக நிகழ்கிறது.

காஞ் : இது தங்கள்...

விஜ : கலா வெற்றி!

காஞ் : கன்னி உள்ளத்தை ஸ்புடமாக்கி...

விஜ : காஞ்சனு!

காஞ் : கசியும் குருதியில் கலையை வளர்த்து...

விஜ : காஞ்சனு!

காஞ் : அமர ஓவிய கர்த்தாவே! எனக்கு விடை கொடுங்கள், நான் போகிறேன்; எங்காகிலும் போகிறேன்.

விஜ : காஞ்சனு, என்ன சொன்னுய்?

காஞ் : ப்ரபோ, உண்மை, முக்காலும் உண்மை. நீங்களும் நானும் பிரியும் நேரம் பிறந்து விட்டது.

விஜ : என்னைத் தனியே விட்டா போகிருய்? வேண்டாம் வேண்டாம், காஞ்சனு, நீயின்றி நானில்லை. சத்தியமாக இல்லை. நீ சென்ற மறு கணமே நான் உயிர் நீப்பேன்.

காஞ் : ப்ரபோ, உண்மையா!

விஜ : ஆம், ஆம், காஞ்சனு!

காஞ : ஸ்வாமி, நாம் எங்கே யாவது போய் விடுவோம். உலகத்தின் தீய இமைகளுக்குப் படாமல், பாவிகளின் மோசக் கரங்களில் சிக்காமல், எங்கேயாவது ஓடி மறைந்து விடுவோம்.

விஜ : காஞசனு! என்ன திடீரென்று இந்த தீர்மானத்திற்கு வந்தாய்?

காஞ : ஸ்வாமி? என்னை ஒன்றும் கேட்காதீர்கள், என்னுடன் கிளம்புங்கள். கண் காணுத தேசத்துக்குப் போய் விடுவோம். இல்லையேல், தங்கள் காலடியிலே நான் உயிர் நீத்து மடியும் பாக்கியத்தையாவது அளியுங்கள்.

விஜ : காஞ்சனு! நீ என் காஞசனு! என் உயிர் உள்ள மட்டும் அந்த அலங்கோலத்தை வரவேற்க மாட்டேன் உன்னை இனி ஒரு நொடியும் தனியே விட்டுப் பிரிய மாட்டேன்.

காஞ : ப்ரபோ! இந்த உறுதி மொழி போதும், தாமதம் வேண்டாம். வாங்கள் எங்கேயாவது போய் விடுவோம்.

விஜ : பின் அப்பாவின் கதி!

காஞ : அவர் முற்றும் துறந்தவர், நம்மோடு காடு மலை கடக்க துணிய மாட்டார். அவர் துன்பம் சீக்கிரம்ஆறிவிடும். புறப்படுங்கள் சீக்கிரம், எனக்கு இங்கே இருக்கவே பயமாயிருக்கிறது.

(புயல் வீசுகிறது)

விஜ: இத்தனை நாளும் ஏற்படாத உணர்ச்சிகள் இன்று என் இதயத்தை உலுக்குகிறது. காஞ்சனா! நான் உன் அடிமை, ப்ரேமையின் அடிமை.

காஞ: ஸ்வாமி, புயலும் இடியும் அகோரமாக மாறுவதற்குள் கிளம்புங்கள் தாமதம்வேண்டாம்.

விஜ: காஞ்சனா, நீயே முன்னே செல், இதோ நானும் வருகிறேன்.

(ஓடுகிறாள். புயலும் இடியும் பலக்கின்றன)

தக: விஜயா, விஜயா, எங்கே என் மகன்...... காஞ்சனா! காஞ்சனா......ஒருவரையும் காணேமே!

(புயலும் இடியும்)

புயலே! வீசு! உன் அகோர களிப்பு என்ன விபரீதத்திற்கு வந்ததோ! வீசு! என் செல்வ மகனை என்னிடமிருந்து பிரிக்க அன்று காஞ்சனாவாகத் தோன்றினாய், இன்று என் வாழ்வையே கசக்கி சிதறடிக்க வெறி கொண்டு வீசு! உன் கோரம் என் வாழ்க்கையை குதறுகிறதே!

[புயலும் இடியும். அலறி அழுதுபாடுகிறான்]

**வீசி அடித்திடு புயலே!**
**கை கொட்டி ஆர்த்திடுபுயலே!**

**நேசம் மறந்திட்ட மகனும்**
**நன்றி மறந்திட்ட மகளும்**

**பாசம் நிறைந்திட்ட மனதை**
**நாசமாய் குதறிய கதையை**

**வீசி பகர்ந்திடு புயலே!**
**கர்ஜித்து முழங்கிடு புயலே!**

(இடியும் மின்னலும்)

1 - 11 - 1953 க்குள்



ரூபாய் பத்து அனுப்புவோர்க்கு



# அஜந்தா

பன்னிரண்டு மாதங்களும்

தொடர்ந்து அனுப்பப்படும்

Edited and Published by K. Srinivas, B. A., at 74, Lloyds Road, Madras-14. and Printed by D. Ethirajan at K. N. Press, 130, N. S. C. Road, Madras-1.

# அஜந்தா

மாத இதழ்



## வரும் இதழ்களில்

கி. வா. ஜெகந்நாதன்

பி. எஸ். ராமையா

மாயாவி

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

தி. ஜ ர.

பி. வி ஆர்.

அ. கி. ஜயராமன்

க. நா. சுப்ரமண்யம்

சாண்டில்யன்

பெ. தூரன்

*எழுதுவார்கள்*